



# சோழர் கலைப்பாணி



எஸ். ஆர். பாலசுப்பிரமணியம்

# சோழர் கலைப் பாணி



எஸ். ஆர். பாலசுப்பிரமணியம்






விற்பனை உரிமை:

பாரி நிலையம்
59, பிராட்வே • சென்னை-1.

First Edition : 1966

**SOLAR KALAIP - PANI**

BY

S. R. BALASUBRAHMANYAM

Author of
'Four Chola Temples', Bhulabhai Memorial Institute, Bombay.
'Kopperunjingan' (in Tamil)
'Early Chola Art Part I' (in English)
Asia Publishing House, Bombay.,

Early Chola Art and Architecture
(Bureau of Tamil Publications, Madras Government)



**Price Rupees 12/50**

Printed at Jeevan Press, Madras-5. *(1010)*

73-2

# சோழர் கலைப்பாணி

## முன்னுரை

தென்னிந்தியாவில் பல்லவர்களையடுத்துச் சோழர் நான்கு நூற்றுண்டுகளுக்கு மேல் பேரரசு செலுத்தினர். பல்லவர்கள் தொடங்கிச் சிறப்பித்த தென்னிந்தியக் கோயிலமைப்பின் கட்டட, சிற்பக் கலைகள் சோழர்கள் ஆட்சியில் தொடர்ந்து மேம்பாடடைந்தன. வடநாட்டைப் போலவே தென்னுட்டிலும் பண்டைக் கோயில்கள் மரத்தாலும் சுடு மண்ணுலும் எடுப்பிக்கப்பட்டமையால் அவை பிற்கால மக்கள் காணவியலாதபடி சுவடற்றுப் போயின. 'இந்தியர்கள் சமய உணர்வைச் சாலவும் பெருக்கியிருந்தனர். ஆயினும் வரலாற்றுணர்விலும் கலை உணர்விலும் பின் தங்கிவிட்டனர்' என்று ஐரோப்பியத் திறனுய்வாளர் ஒருவர் குறிப்பிடுவது சாலவும் மிகுத்துக் கூறிய கூற்று என்பதில் ஐயமில்லை; எனினும் "நான்கு சோழர் கோயில்கள்" என்ற தம் நூலில் ஸ்ரீ S. R. பாலசுப்பிரமணியம் விளக்கிக் கூறியுள்ளவாறு, "சோழர்களின் பல விலைமதிப்பற்ற கலைச் சின்னங்களும் கட்டடச் சின்னங்களும் மக்களின் கவனக் குறைவால் சீர்கேடான நிலையை அடைந்து விட்டன" என்பதை ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும்.

நவீனகாலத் திருப்பணியாளர் பலருடைய செயல்களாலும் கலையுணர்வின்மையாலும் சோழர் காலத்து விலை மதிக்கவொண்ணுக் கட்டடங்களின் மாதிரிகள் பல பாழ் பட்டு விட்டன என்பதும் உளங்கொளத் தக்கது.

சோழர் கோயில்கள் சிலவற்றைப் பற்றித் தம் புலமை தோன்றச் செய்திகள் பலவற்றை ஸ்ரீ பாலசுப்பிரமணியம் சுவைபட வெளியிட்டுள்ளார். அவ்வாய்ப்பை அவருக்கு அளித்த பம்பாயிலுள்ள புலாபாய் நினைவு நிலையம் பெரிதும் பாராட்டுதலுக்குரியது. சிறந்த கட்டட சிற்பக் கலைகளின் அடிப்படைகளை நன்கு ஆய்ந்து அரிதின் முயன்று கலைநுகர்ச்சி பெருக இந்நூல் எழுதப்பட்டதாகும். சோழர் காலத்தில் பாண்டியர் கலைப் பாணியும் நிலவியது என்பார் கூற்றினை இவ்வாசிரியர் வன்மையுடன் கண்டிக்கிறுர். கருத்து வேற்றுமை எங்ஙனமாயினும் ஆகுக; முதல் ஆதித்த சோழன் காலம் தொடங்கியே சோழமன்னர்களும் அவர்களுடைய அமைச்சர்களும் தென்னுட்டைக் கோயில்களால் வளமுறுத்தியும் பெரிய கல்லூரிகளை நிறுவியும் தங்களுக் கடங்கிய ஆசியத் தென்கிழக்கு நாடுகளில் மக்களைக் குடியேற்றியும் நற்செயல் புரிந்தனர் என்பது வெளிப்படை.

திருச்சிராப்பள்ளிக்கு 30 கல் தொலேவிலுள்ள கீழை யூர்க் கோயில் வருணனையுடன் இந்நூல் தொடங்குகிறது. உடையார் பாளையம் தாலுகா மேலேப் பழுவூரிலுள்ள அவனி கந்தர்ப்ப ஈசுவரர் கோயில் பற்றி இந்நூல் வெளியிடும் வருணனையில் பண்டைக்காலச் சோழர்களின் சிற்ப, கட்டட வகைகளையும் நயங்களையும் காணலாம். ஆனால் சுந்தரேசு வரர் ஆலயத்திலிருந்த பிக்ஷாடன விக்கிரகம் கோயிலுக்கு வெளியிலுள்ள சிறுகுளக்கரையில் கிடப்பதாகக் குறிப்பிட் டுள்ள செய்தியைக் காண உள்ளம் வருந்துகிறது. 'பராந்த கன் கேரளநாட்டு இளவரசியை மணந்தான். பழுவூர்க் கோயிலில் இறை வழிபாடாற்றும் பூசாரிகள் மலேயாளி களே. கீழைப்பழுவூரிலுள்ள மற்றோராலயமும் கி. பி. ஏழாம் நூற்றாண்டு தொட்டே மலேயாளப் பூசாரிகள் வசமிருந்தது' என்று இவ்வாசிரியர் கூறுவதை நோக்கத் தென்னிந்திய நாடுகளிடையே பழங்காலத்தில் எவ்வளவு நெருங்கிய நட்புறவு இருந்தது என்பது குறித்துணரத் தக்கது.

13-ஆம் நூற்றாண்டில் ஏறத்தாழ 50 ஆண்டுகள் சோழர்களுக்கும் பாண்டியர்களுக்குமிடையே ஆதிக்கம் பற்றிய போராட்டம் நிகழ்ந்து கொண்டிருந்தது. 'சிதம் பரம், கும்பகோணம், திருவண்ணாமலே ஆகிய ஊர்க்கோயில் கள் சோழர், பாண்டியர் ஆகிய இருவருடைய கலேப்பாணி களின் சுவடுகளையும் கொண்டு விளங்குகின்றன' என்று பிறர் கூறும் கூற்றினை ஆசிரியர் மறுத்துச் சோழர் காலக்கலேயை முந்திய காலம் (கி. பி. 985 வரை), இடைக்காலம் (கி. பி. 985 முதல் 1070 வரை), கடைக்காலம் (கி. பி. 1070—1270) என மூவகையாகப் பிரித்துக் காண்பதே ஏற்பு டைத்து எனக் கருதுகிறார்.

பேரரசன் முதலாம் இராசராசன் ஈழம் முதல் கலிங்கம் வரை தன் நாட்டைப் பெருக்கியவன் ஆவான். அவன் மகன் முதல் இராசேந்திரன் கடற்படை செலுத்தி மலே யாவையும் ஸ்ரீ விஜயத்தையும் வென்றவன்' ஆவான். இவ் விருவரையும் பற்றிய சுவையான வருணனை இந்நூலில் காணப்படுகிறது. பேரரசன் இராசராசன் ஸ்ரீவிஜயத்தை யாண்ட சைலேந்திர மன்னனுக்குத் தன்னாட்டெல்லேக்குள் ளிருந்த நாகப்பட்டினத்தில் புத்தவிகாரம் அமைக்க இசைவு தந்ததோடு ஆனைமங்கலம் என்ற கிராமத்தை அதற்குப் பள்ளிச்சந்தமாக வழங்கியமை குறித்துணரத்தக்கது. "தேவாலயச் சக்கரவர்த்தி" என்று குறிப்பிடத்தக்க தஞ் சைப் பெருங்கோயில் இவ்வரசனால் எடுப்பிக்கப்பட்டதே. இவனை யடுத்து ஆட்சி புரிந்த இவன் மகன் இராசேந்திரன் தன் வடநாட்டு வெற்றியின் ஞாபகார்த்தமாகக் கங்கை கொண்ட சோழபுரம் என்ற புதுத் தலேநகரை நிறுவி ஆண்டு கங்கை கொண்ட சோழீசுவரம் என்ற கோயிலே எடுப்பித்துச் சோழ கங்கம் என்ற ஏரியை 'ஜலமயமான ஜயஸ்தம்பமாக' நாட்டினான். தன்னிடம் தோற்ற வடநாட்டு மன்னரால்

கொணரப்பட்ட கங்கையின் புனித நீரை மிகுதியாகப்பெய்து அவ்வேரியைப் புனிதம் செய்தான். மேலும் வடவார்க்காடு மாவட்டத்துத் திருவல்லத்திலும் ஒரு கோயில் எடுப்பித்தான். தற்போது மாமண்டூர் அருகிலுள்ள கூழம்பந்தலில் ஒரு சிதைவுற்ற கோயில் காணப்படுகிறது. இதனைப்பற்றி 'இத்தகைய மேதக்கார் தொடர்பு கொண்ட இக் கோயில் தற்போது சிதைவுற்றுக் கவனிக்கப் பெறுமல் இருக்கும் நிலை காண்போருக்குத் துயர் தருகிறது' என்று இவ்வாசிரியர் குறிப்பிடுகிருர்.

கடைக்காலச் சோழர்கள் தம் முன்னவர் நிகழ்த்திய பணியைத் தொடர்ந்து நடத்தினர். முதற் குலோத்துங்கன் சிதம்பரத்துக்கு இருபது கல் தொலைவிலுள்ள மேலைக்கடம்பூரில் இருந்த பழைய கோயிலைப் புதுக்கினுன். அக்கோவிலை இவ்வாசிரியர் மிகவும் சுவைபட வருணித்துள்ளார். அக் கோயில் சக்கரங்கள் கொண்ட தேர் வடிவில் அமைக்கப் பட்டுள்ளது. அதன்கண் அழகிய சிற்பங்களின் மாதிரிகள் பல உள்ளன. அங்குள்ள கணேசர், தட்சிணுமூர்த்தி, அர்த்த நாரி விக்கிரகங்களும், நந்திமேல் நின்று நடனமாடும் நடராசப் பெருமானின் வெண்கலத் திருமேனியும் மிக அழகுற அமைந்துள்ளன.

இவ்வாசிரியர் சிதம்பரம் கோயிலை விரிவாக்கிய நரலோக வீரன் என்ற சோழர் அமைச்சனுடைய மேதக்க அருஞ்செயல்கள் பலவற்றையும் நன்கு விளக்கி வரைந்துள்ளார். இவருக்கு நாம் பெரிதும் கடப்பாடுடையோம். கும்பகோணத்தையடுத்த சூரியஞர் கோயிலில் சூரியனுக்கென அமைந்த தனிக் கோயிலொன்று முதல் குலோத்துங்கனுல் கட்டப்பட்டது. தென்ஞட்டில் சூரியனுக்கென அமைந்த தனிக்கோயில் ஈதொன்றே. கலிங்க நாட்டுக் கோஞர்க்கிலுள்ள பிரசித்திபெற்ற சூரியன் கோயிலுக்கு இது காலத்தால் சாலவும் முற்பட்டது.

தாராசுரம், திரிபுவனம் என்ற ஊர்களில் எடுப்பிக்கப் பட்ட கற்றளிகள், சிதம்பரம் கோயிலில் பின் விரிவாக்கப் பட்ட திருப்பணிகள் இவற்றின் வருணனையோடு இப்புத்தகம் முடிவடைகிறது.

'சோழர் கலையின் கடைக் காலத்தில் **(கி. பி. 1070—1270)** ஆலயத்தின் சுற்றுச் சூழல் பெரிதும் விரிவாக்கப்பட்டது. ஆலயத்திற்குள் திருக்காமகோட்டம் (அம்மன் கோயில்) முதலான பல சுற்றுக் கோயில்கள் உருவாயின. திருமாளிகைப் பத்திகளும், மதிற்சுவர்களும், அவற்றின் வாயிலில் எழுநிலைக் கோபுரங்களும், வியாக்யான மண்டபங்களும், நூற்றுக்கால் மண்டபங்களும் ஆயிரக்கால் மண்டபங்களும் கட்டப்பட்டன. இத்தகைய கட்டட வளர்ச்சி காஞ்சி, சிதம்பரம், திருவரங்கம் முதலிய நன்கு திட்டமிடப்பட்ட கோயில்மாநகரங்கள் ***(Temple cities)*** அமைய வழிகோலியது.

இத்தகைய கோயில்களின் அமைப்பு, 'பெரும்பான்மையான திராவிடக் கோயில்கள் முறையான திட்டப்படி வளரவில்லை. அவை காலத்திற்கு ஏற்ப முறையின்றி ஏற்பட்ட கட்டிடச் சேர்க்கையே' என்று பர்கூசன் (*James Fergusson*) என்பார் கூறிய செய்தியைப் பொய்ப்பிக்கும் என்பது தேற்றம்.

ஆசிரியரின் புலமைத் திறத்தைப் புலப்படுத்தும் வகையில் அமைக்கப்பட்டுள்ள பிற்சேர்க்கை கற்றுக்கொள்பவர்க்குப் பெரிதும் பயன் தருவதாகும். இந்நூலின்கண் விளக்கப் படங்கள் மிகுந்த கருத்துடன் பொறுக்கப்பட்டு அழகாக அச்சிடப்பட்டுள்ளன. இவற்றால் சிறப்புறும் இந்நூல் தென்னாட்டின் சமயமும், கலையும் பற்றிய வரலாற்று நூல் தொகுப்பில் தக்க இடம்பெறுவதாகும். இதுகாறும் நம் கவனக் குறைவால் மங்கிக் கிடந்த சோழர் கலைச் செல்வங்களின் சில மாதிரிகளை மிக்க நுணுக்கத்துடன் ஆசிரியர் நமக்கு வெளிப்படுத்தியுள்ளார். நம் பண்டைக் கலைச்செல்வங்களைப் போற்றிக் காப்பது நம் கடமையாகும்.

**சி. பி. இராமசாமி ஐயர்**

துணை வேந்தர்

**அண்ணாமலை பல்கலைக் கழகம்.**

# அணிந்துரை

திரு. பாலசுப்ரமணிய அய்யர் அவர்கள் திருக்காட்டுப்பள்ளி உயர்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியராக இருந்து சிறந்ததொரு கல்வித்தொண்டும் சமூகத் தொண்டும் செய்து பெயர் பெற்றவர்கள். ஆனால் அப்போதும் அவர் தமது வரலாற்று ஆராய்ச்சியை மறந்து விடவில்லை. ஆங்கிலத்தில் பல கட்டுரைகளும் நூல்களும் வெளியிட்டுள்ளார்கள். ஓய்வெடுத்திருக்கும் இந்த நாளில் தாம் ஆராய்ந்த உண்மைகளை எல்லாம் தமிழிலே எழுதி வெளியிட்டால் மாணவர் உலகத்திற்கு மட்டுமேயன்றிப் பொதுமக்கள் உலகிற்கும் பயன்படும் என்று உணர்ந்து நம் குடியரசிற்கு வாய்ப்பான தொண்டினைச் செய்து வருகிறார்.

தமிழகத்தின் தலையாய கலைச்சிறப்பு அங்கே உள்ள கோயில்கள் தாம். சென்னைத் துரைத்தனத்தின் சின்னமாக இதனால் தான் கோயிற் கோபுரம் அமைந்துள்ளது. இந்தக் கோயிற்கலை வளர்ந்த வரலாறு தமிழன் அறிந்து இன்புற வேண்டியது ஒன்று. மலையே இல்லாத இடங்களில் எல்லாம் கூடத் தொலை தூரங்களிலுள்ள மலையை வெட்டி எடுத்துக்கொண்டு வந்து வானளாவும் கோபுரங்களாகச் சோழர் கட்டியுள்ளதைக் கண்டவர்கள் எல்லாம் வாய் பிளந்து வியந்து நிற்கின்றார்கள். மாமல்லபுரத்திலிருக்கும் சிறு கோயில்களில் இருந்து இத்தகைய பெருங்கோயில்கள் வளர்ந்த வரலாற்றை ஆராயும்போது கோயிற்கலையின் நடை மெல்ல மெல்ல மாறி வளர்ந்த வரலாறாக அறியும் போது தான் அந்த வளர்ச்சியின் நுட்பத்தை நாம் அறிய முடிகிறது. இந்த வகையில் விளக்க எழுந்த நூல்தான் இப்போது "சோழர் கலைப்பாணி" என்ற தலைப்போடு திருவாளர் பாலசுப்ரமணிய அய்யர் எழுதி நம் கையில் தந்துள்ளது.

நம் ஆசிரியர் சோழர் கோயில்களின் வளர்ச்சியை ஆராய்வதற்கு முன் இந்தக் கலை வளர்ந்த கதையையும் விளக்குவது தானே இயல்பு! பண்டைய காலத்தில் கிராம தேவதைகளின் வழிபாடு நடந்திருத்தல் வேண்டும். அங்கிருந்துதானே இந்தக் கோயில் கலை வளர்ந்திருக்கும். அதைப்பற்றி முதலில் ஆசிரியர் கூறுகின்றார். ஆனால் அந்தப் பழைய நிலையைப்பற்றி இன்னும் தொடங்கவே இல்லை; ஆதலினால் இங்கே அதன் இன்றியமையாமையைச் சுட்டுகின்ற அளவில் அமைக்கின்றார் என்றே நாம் கொள்ளவேண்டும். சங்க காலத்திலிருந்த வழிபாட்டு நிலையங்களைப் பற்றிய குறிப்புக்கள் சங்க நூல்களில் வருகின்றன. அவற்றை எல்லாம் ஆசிரியர் தொகுத்தும், வகுத்தும் தம் வரலாற்

றைத் தொடங்குகிறார். வரையறுத்துக் கூறக்கூடிய கோயில் வளர்ச்சி பல்லவர் காலத்தில்தான் ஓங்கி வளர்ந்தது. துப்ரே போன்றோர் வெவ்வேறு பாணியாகப் பல்லவர் கோயிற்கலை வளர்ந்த தனை விரிவாக எழுதியுள்ளார்கள். இந்த வரலாற்றின் சுருக்கத்தைச் சோழர் கோயில்களை அறிவதற்கு வேண்டிய அளவில் விளக்கி வைத் துப் பல்லவர் வளர்த்த இந்தக் கலையையே சோழர்கள் தொடர்ந்து வளர்ந்திருப்பதை விளக்க முயல்கிறார். சோழர் காலத்தை முந்திய காலம், இடைக்காலம், பிற்பட்ட சோழர் காலம் என மூன்றாக வகுத்துக் கொண்டு சோழர் கலைப்பாணியை விளக்குகிறார். ஒவ்வொரு சோழர் காலத்தும் எழுந்த கோயில்களை வரையறுத்து அவ்வவற்றின் சிறப்பியல்புகளையும் சுட்டிக் காட்டுகிறார். இவ்வாறு விளக்கும்போது கல்வெட்டுக்களின் உதவியாலும் அவர் செய்த வரலாற்றாராய்ச்சியின் உதவியாலும் பல உண்மைகள் வெளியா கின்றன. பல தவறான எண்ணங்கள் அழிகின்றன. ஆதித்த சோழன் காலத்தில் எழுந்த கோயில்களைப் பற்றிய குறிப்புக்கள் கலைவரலாற் றிற்கு இன்றியமையாதவை. திருக்கற்றளி, திருக்கட்டளை, என பின்னர் உச்சரிக்கப்பட்ட செய்தி மொழி வளர்ச்சியில் ஈடுபட்ட வர்க்குப் பெருந்துணையாகும். இவ்வாறே முதலாம் பராந்தகன், இரண்டாம் பராந்தகன், உத்தமசோழன் முதலியோர் காலத்தில் எழுந்த கோயில்களின் வர்ணனையும் விளக்கமாக உள்ளன. மூவர் கோயில், இரண்டாம் பராந்தகன் காலத்திலேயே கட்டப்பட்டதென ஆசிரியர் ஆராய்ந்து அறுதியிட்டுக் கூறுகின்றார். இந்த முந்திய காலத் தில் எழுந்த கோயில்களின் பட்டியலைக் கொடுத்தபின் இந்தக் காலத்தின் கலைப்பாணியை இரண்டாகப் பகுத்துக் கொண்டு ஆதித் தன் கலைப்பாணி என்றும், செம்பியன் மாதேவிக் கலைப்பாணி என்றும் விளக்கிக் கொண்டு வளர்ச்சியைச் சுருக்கமாகச் சுட்டிக் காட்டு கிறார்.

இராசராசன் முதல், குலோத்துங்கன் பட்டத்திற்கு வரும்வரை உள்ள காலத்தை இடைக்காலம் என்று பெயரிட்டு முன்னைய முறைப் படியே விளக்குகிறார். சோழர்களது கோயில்களில் நன்கறியப் பெற் றுள்ளவற்றை விளக்குவது மென்றதையே மென்றதாக முடியும் என்று கொண்டு தஞ்சை இராசராசேச்சுரம், கங்கைகொண்ட சோழேச்சுரம் முதலியவற்றைப் பற்றி விரித்துக் கூற முற்படாது பலபேருக்குத் தெரியாத கலைநுட்பமுள்ள அக்காலக் கோயில்களைச் சுட்டிக் காட்டி முடிக்கின்றார்.

முதல் குலோத்துங்கன் காலம் முதல் மூன்றும் இராசேந்திரன் காலம் வரை உள்ள காலத்தைப் பிற்பட்ட சோழர் காலமெனப் பெயரிட்டழைத்து ஆராயத் தொடங்குகிறார். சிதம்பரத்திற் கற்ற இவ்வாசிரியர் குலோத்துங்கனது தில்லைத் திருப்பணி தொடங்கி

நடந்த வரலாற்றையும், நரலோக வீரன் என்கின்ற சோழர் காலத் தலைவனது சிறப்புக்குரிய திருப்பணிகளையும் விரிவாக விளக்குவதோடு அவன் பாண்டி மன்னரின் சிற்றரசன் என்று கொள்வது பெருந்தவறு என்பதையும் சுட்டிக் காட்டுகிறார். முன்கொண்ட முறைப்படியே சோழமன்னர் ஒவ்வொருவர் காலத்திலும் எழுந்த கலையழகு வாய்ந்த கோயில்களை விரித்துக் கூறி இப்பகுதியில் முடிவில் பிந்திய சோழர்கள் காலத்துக் கலைப்பாணியில் ஏற்பட்ட முக்கிய மாறுதல்களாகக் கோயில் மாநகர்களின் எழுச்சியையும், திருக்காமக் கோட்டமாக அம்மன் கோயில் பெரிய அளவில் அமைவதையும் குறிக்கின்றார்.

மாணவர்கள் மேலும் ஆராய்வதற்கு உறுதுணையாக அரசர்களது கிளைவழி, கோயில்களைப் பற்றிக் காலத்தை வரையறுப்பதற்கு வேண்டிய சில சாசன எண்கள் ஆகியவற்றைக் கொடுத்துள்ளார். அதனோடு மேலும் ஆராய்வதற்கு உதவும் நூல்களின் பட்டியலும், பொதுவாகவும், அரசர்கள் வாரியாகவும், ஒவ்வொரு அரசர் காலத்திலும் எழுந்த கோயில்களை ஜில்லா வாரியாகவும் அறிவதற்கு ஏற்ற வகையில் இப்பட்டியலைத் தந்துள்ளார். இவற்றை எல்லாம் விட இன்றியமையாச் சிறப்பு வாய்ந்தது கலைப் படங்களாகும். இவற்றை வைத்துக் கொண்டு நூலைப் படிக்கும்போது தான் சோழர் கலைப்பாணியின் வளர்ச்சியும் நுட்பமும் நன்கு விளங்கும். எண்பதுக்கு மேற்பட்ட படங்கள் இங்கே இடம் பெறுவது தான் இதன் சிறப்பு.

வரலாற்றைக் கற்பார்க்குத் தமிழில் தலையாய நூல்கள் இல்லை என்ற குறையைச் சோழர் கோயிற்கலையைப் பொறுத்தவரையில் இந்த நூல் நீக்குகிறது. தமிழ் உலகம் ஆசிரியர்க்கு இதற்காகப் பெரிதும் கடமைப்பட்டுள்ளது. சென்னைத் துரைத்தனம் இந்த நூலின் சிறப்பையும் ஆசிரியர் தகுதியையும் கண்டு ரூ. 2500/-வரை உதவி செய்துள்ளது பாராட்டத் தக்கதேயாம். ஆசிரியர் மேலும் இத்தகைய நூல்களை எழுதி இத்தகைய நூல்கள் தமிழில் இல்லை என்ற குறையை நீக்குதற்குத் துணை செய்வாராக.

**தெ. பொ. மீனாட்சி சுந்தரன்,**

மதுரை பல்கலைக் கழக துணைவேந்தர்.

# சோழர் கலைப் பாணி

## முகவுரை

திருக்கோயில் இல்லாத திருவில் ஊரும் திருவெண்ணீறு அணியாத திருவில் ஊரும்
பருக்கோடிப் பத்திமையாய் பாடா ஊரும் பாங்கினெடு பலதளிகள் இல்லா ஊரும்
விருப்போடு வெண்சங்கம் ஊதா ஊரும் விதானமும் வெண்கொடியும் இல்லா ஊரும்
அருப்போடு மலர் பறித்திட்டு உண்ணு ஊரும் அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே

என்ற அப்பர் சுவாமிகளின் தனித் திருத்தாண்டகம் ஏழாம் நூற்ருண்டில் தமிழகத்து மக்கள் வாழ்க்கையில் திருக்கோயில்கள் வகித்த உயர்ந்த இடத்தை வெளியிடுவதாகும்.

"நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்" மயிலாப்பூரில் பாடிய 'மட்டிட்ட புன்னையங்கானல்' என்ற பதிகத்தில், கபாலீசுவரர் கோயிலில் அக்காலத்தில் நடைபெற்று வந்த திருவிழாக்கள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இவற்றை நோக்க இந்நாயன்மார்களும் ஆழ்வார்களில் சிலரும் வாழ்ந்த காலமாகிய கி. பி. ஏழாம் எட்டாம் நூற்ருண்டுகளில் மக்களிடையே ஆன்ம உணர்வும், சமயப் பற்றும், கோயில் வழிபாடும், திருவிழாக்கள் கொண்டாடுவதும் போன்றன சிறப்புற்று விளங்கியமை உணரப்படுகிறது. இம்மையில் அறத்தாற்றில் பொருளீட்டி, இன்பமாக வாழ்ந்து, மறுமையில் வீடு பேறடைவதே வாழ்க்கையின் குறிக்கோள் என்ற கருத்தைக் கோயில்கள் வலியுறுத்தி வந்தன.

இடைக்காலத்தில் பழம் பெருமை மங்கிக் கிடந்த தமிழகம் சுதந்திரம் பெற்றபின், அதன் அறநிலையங்களும் ஆலயங்களும் சீரிய முறையில் போற்றப்பட்டு வருகின்றன. கோயில்களில் நிகழ்ந்து வரும் வழிபாட்டு முறைகளில் இடைமிடைந்த மாசுகளை அகற்றிச் சீர் செய்வதற்கும், கோயிற்கலைகளை வளர்ப்பதற்கும், ஆண்டுதோறும் மாநாடு கூட்டி ஆதரவு அளித்து நல்லாசி கூறிவரும் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீசங்கராசாரியர் சுவாமிகளுக்கு நாம் எழுமையும் கடப்பாடு உடையேம்.

தொல் பொருளாராய்ச்சித் துறை நம் பாரத நாட்டில் ஒரு நூறு ஆண்டுகளாகப் பணியாற்றி வருவதாயினும் தென்னாட்டுக் கலைச் செல்வங்கள் பற்றி வெளி வந்துள்ள நூல்கள் மிகச் சிலவே. தொல் பொருள்களில் பல இன்னும் மறை பொருள்களாகவே உள்ளன.

பம்பாயைச் சார்ந்த புலாபாய் நினைவு நிலையத்தார் ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ள 'நான்கு சோழர் கோயில்கள்' என்ற என் சிறு நூலில் குறிப்பிட்டுள்ள சோழர் காலக் கலைப்பாணியை முப்பகுதிகளாகப் பிரித்து விரிவாக விளக்கியதோடு சோழர் ஆட்சிக் காலத்தில் பாண்டியர் கலைப்பாணியானது சோழர் கலைப் பாணியோடு கலக்கவில்லை என்பதை நிறுவிப் பாண்டியர் கலைப்பாணி தனியே ஆராயப்பட வேண்டுவ தொன்று என்பதை வற்புறுத்தி இந்நூலை வரைந்துள்ளேன். ஆங்கில நூலைத் தழுவி எழுதப்பட்ட போதிலும் இது ஒரு தனி நூலே.

பொருளுதவியும் ஏனைய நலன்களும் உதவி என்னை இப்பணியில் ஊக்குவித்த சென்னை அரசாங்கத்தாருக்கும், அதன் முதல் அமைச்சர் உயர்திரு மு. பக்தவத்சலம் அவர்களுக்கும் என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலின் தமிழாக்கத்தை வளம் பெறச் செய்தும் அச்சுத் தாள்களின் பிழைகளைத் திருத்தியும் உதவிய என் அன்பரும் ஆராய்ச்சித் தோழரும் திருவையாறு அரசர் கல்லூரி முதல்வருமாகிய பண்டித வித்துவான் தி. வே. கோபாலன் M.A., B.O.L. அவர்களின் ஒத்துழைப்பைப் பெரிதும் போற்றுகிறேன்.

மூல நூலுக்கு முன்னுரை உதவிய அண்ணமலை பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் சி. பி. இராமசாமி ஐயர் அவர்களுக்கும். இந் நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ள மதுரை பல்கலைக் கழகத் துணை வேந்தர், பன்மொழிப் புலவர் திருவாளர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், M.A., B.L., M. O. L. அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றியை உரியதாக்குகிறேன்.

இவ்வெளியீட்டில் ஊக்கத்தோடு உதவி புரிந்த என் நண்பர் திரு. அழ. வள்ளியப்பா அவர்களுக்கும், அச்சுத்துறையில் நல்லுதவி புரிந்த ஜீவன் அச்சகத்தாருக்கும், ஐடியல் அச்சகத்தாருக்கும், இந் நூலின் விற்பனைப் பொறுப்பை ஏற்றுக் கொண்ட பாரிநிலையத் தாருக்கும் என் நன்றி.

**எஸ். ஆர். பாலசுப்பிரமணியம்**

## அர்ப்பணம்

ஸ்ரீமத் ஜகத்குரு சங்கர பகவத் பாதர்களாகிய ஆதி சங்கராசாரிய சுவாமிகள் அவர்கட்கும், அவர்களுடைய காஞ்சி காமகோடி பீடத்தில் இக் காலத்தில் வீற்றிருப்பவர் களும், நடமாடுந் தெய்வங்களாகத் திகழ்கின்றவர்களும், கோயிற்கலைகளுக்குப் புத்துயிரும் பேராதரவும் அளித்து வருபவர்களுமாகிய இரு ஆசாரிய சுவாமிகளுக்கும் இந் நூல் அர்ப்பணம்.

# பொருளடக்கம்



---

| பிழை | திருத்தம் |
|---|---|
| பக்கம் 40, வரி 20, | |
| சோழபுரம் | வீர சோழபுரம் |

T.N. Olaganathan..

## அத்தியாயம் 1

# தமிழகத்தில் பண்டைக்காலக் கிராம தேவதைகளும் அவற்றின் கோயில்களும்

தமிழகத்தில் கிராம தேவதைகளின் வழிபாடே மிகப் பழைமையானது. பண்டைத் தமிழ் மக்கள் தமக்கே உரிய சிறப்பான வகையில் கடவுளர்களை வழிபட்டனர். எருமைக் கிடாய், ஆட்டுக்கிடாய், கோழி முதலிய உயிரினங்களைத் தெய்வங்களுக்குப் பலியிட்டு அவற்றைத் திருப்தி செய்ததாக நம்பினர். இறந்துபட்ட தம் முன்னோர்களும், பசாசங்களும், படுகொலையாலே உயிர் நீத்தவர், இள வயதில் இறந்து பட்டவர் ஆகியோரின் ஆன்மாக்களும் அமைதியுறுவதற்காக உயிர்ப்பலி கொடுக்கும் எண்ணம் தமிழ் மக்களின் உள்ளத்தில் நிலைத்த இடம் பெற்றிருந்தது. கிராம தேவதைகளின் சீற்றத் தாலேயே அம்மை, சீதபேதி போன்ற தொத்து நோய்கள் ஏற்பட்டனவாக அவர்கள் கருதியதனால் அந் நோய்களைத் தடுப்பதற்காகக் கிராம தேவதைகளுக்குப் பலியிட்டு அவற் றின் சீற்றத்தைத் தணித்து வந்தனர். இப் பண்டைய தமிழர் தம் நம்பிக்கை இன்றும் தமிழகத்தில் சிலரிடை நிலவக் காண்கிறோம்.

சாத்தன் என்றும் சாதவாகனன் என்றும் வழங்கப்படும் ஐயனாரே கிராம தேவதைகளில் முதலிடம் பெற்றவர். ஐயனா ருக்கு ஆரியர், சாஸ்தா, ஹரிஹர புத்திரர், ஐயப்பன் முதலிய பெயர்களும் வழங்கி வருகின்றன. ஐயனாரைத் தவிர ஏனைய கிராமதேவதைகள் பெரும்பாலும் பெண் தெய்வங்களே. ஊர்க் காவல் தெய்வமாகிய இவருக்குக் கிராமத்தின் சுற்றுப் புறத்தி லுள்ள தோப்புக்களில் ஐயனார் கோயில்கள் எடுக்கப்பட்டன. கோயிலின் முன்பாகச் சுடுமண்ணால் அமைக்கப்பட்டு நிறம்

தீட்டப்பட்டுப் பெருமிதமாகக் காணப்படும் யானை, குதிரை ஆகியவற்றின் உருவங்களைக் காணலாம். இரவில் ஐயனாரும் அவருடைய பரிவாரத்தாரும் இந்த யானை குதிரைகள் மீது இவர்ந்து கிராமங்களைத் தீய தெய்வங்களின் தாக்குதலினின் றும் காத்து வருகிறார்கள் என்று பண்டைத் தமிழர் நம்பினர்.

கிராமப் பெண்தெய்வங்களில் பிடாரி முதலிடம் பெறு கிறாள். சப்த மாதர்களில் ஒருத்தியான இவளே சிற்சில வேறு பாடுகளுடன் காளி, அங்காளம்மன், செல்லியம்மன், மாரியம் மன், திரௌபதி என்ற பல பெயர்களுடன் வழங்கப்படுகிறாள். தென்னாட்டுப் பிடாரி என்கின்ற பட்டாரிக்கு இணையாக வட நாட்டில் துர்க்கை, காளி என்ற பெயர்களை உடைய பெண் தெய்வ வழிபாடு சிறப்புற்று விளங்கிற்று. துர்க்கை வழிபாடு தமிழகத்தில் கொற்றவை வழிபாடு என்று குறிப்பிடப் படுகிறது. கொற்றவைக்கு வீரர்கள் தலைப்பலி கொடுக்கும் வழக்கம் பல்லவர் காலச் சிற்பங்களால் அறியப்படுகிறது.

பிடாரி சப்த மாதர்களில் மிக இளையவள் என்ற கருத்து 'அறுவருக்கு இளைய நங்கை' என்ற சிலப்பதிகாரத் தொட ரால் உணரப்படுகிறது. தமிழகத்தில் இந்தச் சப்த மாதர் களுக்குக் கோயில்கள் அமைக்கப்பட்டன என்பதற்கு ஆலம் பாக்கத்திலுள்ள செல்லியம்மன் கோயிலும், திருவக்கரையி லுள்ள வக்கிர காளிக் கோயிலும், வேளச்சேரியில் உள்ள செல்லியம்மன் கோயிலும் இன்றும் தக்க சான்றுகளாக முன்னிற்கின்றன.

பிற்காலக் கோயில்களில் காணப்படும் துவார பாலகர் நிலையில் முற்காலத்தில் முன்னடியான், மதுரை வீரன் என்ற தெய்வங்கள் வழங்கப்பட்டன. கறுப்பன் என்ற தெய்வமும் ஊர்க்காவல் தெய்வங்களுள் ஒன்றாகக் கொள்ளப்பட்டது. மதுரைக்கு அருகிலுள்ள அழகர் கோயிலிலும், சவரி மலையி லுள்ள ஐயப்பன் கோயிலிலும் காணப்படும் கறுப்பன் சிலை களே அவ்வக் கோயில்களின கருவூலக் காவலுக்குப் பொறுப் புடையனவாக இன்றும் கருதப்படுகின்றன.

கிராம தேவதைகளின் சிலைகளைச் சிறந்த கலைச் செல்வங் கள் என்று கூற முடியாது. அவை அதிக வேலைப்பாடுகள்

உடையனவல்ல. பண்டைய சோழர் காலத்தனவாகிய கிராம தேவதைகள் சிலவற்றின் செப்புத் திருமேனிகள் கிடைத்துள்ளன. பண்டைய தமிழ் மக்கள் நடப்பட்ட கற்களையும் சூலங்களையும் கூடத் தெய்வங்களாகக் கருதினர். கிராம எல்லைக் கற்களும், மலையும், மரனும், காடும், பாம்பும், கருவிகளும் தெய்வங்களாகக் கொண்டாடப்பட்டன. தொழில்களிலும் நுண்கலைகளிலும் பண்டைத் தமிழர் தெய்வத் தன்மையைக் கண்டனர்.

பண்டைய கிராமத் தெய்வங்களின் கோயில்கள் மரங்களின் அடிகளில் செங்கற்களால் கட்டப்பட்டுத் தென்னங் கீற்ருல் கூரை வேயப்பட்டனவாதலின் அவை குறிப்பிடத் தக்க கட்டிடக் கலை நுணுக்கம் உடையன என்று கொள்ள முடியாது. பல்லவர் காலம் தொடங்கியே தமிழகத்தில் மேதக்க சீரிய கோயில்கள் எடுப்பிக்கப்பட்டன. அவைகளே தமிழகத்தின் வரலாற்று ஆராய்ச்சிக்குப் பெரிதும் உதவுவன வாகும்.

## அத்தியாயம் 2

# தமிழகப் பண்டைக் கோயில்கள்

கோயில்கள் நம் நாட்டில் பண்டுதொட்டே இருந்து வருகின்றன. கோயில் என்ற சொல் அரசனது இருப்பிடமாகிய அரண்மனையைக் குறிக்குஞ் சொல்லாகத் தொடக்கத்தில் இருந்து வந்தது. பிற்காலத்தில் தேவகோட்டங்களைக் குறிக்கவே பெரும்பாலும் வழங்கப்படுவதாயிற்று. அச்சொல் தொல்காப்பியத்திலேயே இடம் பெற்றுள்ளது. சங்ககாலத்திலேயே தமிழகத்தில் கோயில்கள் பல இருந்தன. அவை மரத்தாலும் செங்கற்களாலுமே அமைக்கப்பட்டிருந்தனவாதலின் விரைவில் அழிந்து போயின. 'சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டம்' என்ற தொடர் பண்டைக் கோயில்கள் மண்டளிகளாதலை வலியுறுத்துகிறது.

சிற்ப நூல் முறைக்கு ஏற்பத் திசைகளில் நிற்கும் தெய்வங்களை நோக்கி வழிபட்டு அரசர்களுக்கு ஏற்ப மனைகளையும் வாயில்களையும் மண்டபங்களையும் வரையறுத்து அமைத்தனர் பண்டைத் தமிழ் மக்கள். இச்செய்தி பத்துப் பாட்டில் நக்கீரனார் இயற்றிய நெடுநல்வாடை என்ற பாடலின்,

நூலறிபுலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்
தேஎங் கொண்டு தெய்வ நோக்கிப்
பெரும்பெயர் மன்னர்க்கு ஒப்ப மனை வகுத்து
ஒருங்குடன் வளைஇய ஓங்குநிலை வரைப்பின்

(அடிகள் 76-79)

என்ற பகுதியால் அறியப்படுகிறது.

சிற்ப நூல்களில் வல்ல புலவர்களே பண்டு கோயில்களையும் அரண்மனைகளையும் அமைத்தனர். நடுவே திருமகளும் இருபுறத்தும் தாமரை அல்லது செங்கழுநீர்ப் பூக்களைத் துதிக்

கையில் பிடித்த பெண் யானைகளுமாகச் சிற்பங்கள் வகுக்கப் பட்ட 'உத்தரக் கற்கவி' பொருந்திய நெடுநிலைகள் பண்டு இருந் தனவாக அறிகிறோம்.

தமிழ் மொழி, வரலாற்றுக் காலத்துக்கு மிக முற்பட்ட தொன்மையது எனினும் தமிழ் மொழியின் எழுத்துக்களுள் நாம் அறியும் வகையில் மிகப் பழைய எழுத்துக்கள் மலைக் குகைகளிலும் பாறைப் படுக்கைகளிலும் கிடைத்துள்ள கல் வெட்டுக்களே யாகும். ஏறத்தாழ இரண்டாயிரத்திருநூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ்க் கல்வெட்டுக்கள் பிராமி எழுத்தில் உள்ளன. தென்னிந்திய மொழிகளின் எழுத்துக்கள் அசோகருடைய கல்வெட்டுக்களில் காணப்படும் பிராமி லிபி யிலிருந்தே வளர்ந்திருக்க வேண்டும் என்பது கல்வெட்டறிஞர் கோபிநாதராவ் அவர்களின் கருத்தாகும். செஞ்சிக்கு அருகி லுள்ள திருநாதன்குன்றுக் கல்வெட்டுதான் தமிழ் எழுத்தி லுள்ள மிகப் பழைய தமிழ்க் கல்வெட்டாகும்.

இனிச் சங்ககால நூல்களின் துணைக்கொண்டு அக்காலக் கோயில்கள் பற்றியும் தெய்வ வழிபாடு பற்றியும் நோக்கு வோம்.

சங்க கால நூல்கள் பத்துப் பாட்டும் எட்டுத் தொகையு மாகும். எட்டுத் தொகைகளாவன நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பனவாம். இவற்றுள் வரலாற்று ஆராய்ச்சிக்குப் பெரிதும் உதவுவது புறநானூறாகும்.

புறநானூறு புலவர் பலரால் பாடப்பட்ட 400 பாடல்களை உடையது. அதன் தொடக்கப்பாடல் சிவபெருமானைப் பற்றிய கடவுள் வாழ்த்தாக அமைந்துள்ளது. சிவபெருமான் நஞ்சம் உண்டதால் நீலகண்டனாய், உமையொரு பாகனாய்ப் பிறை சூடியாய்க் கொன்றை சூடி, இடபம் ஏறி, இடபக் கொடி உயர்த்து, அருந்தவத்தோனாய் எல்லா உயிர்களையும் காப்பவ னாய் விளங்குஞ் செய்தியைப் பாரதம் பாடிய பெருந்தேவனார் விளக்குகிறார்.

நற்றிணைக் கடவுள் வாழ்த்தில் பூமியைத் திருவடிகளாக வும், கடலை ஆடையாகவும், வானத்தை உடலாகவும், திசை களைக் கைகளாகவும், சந்திர சூரியர்களைக் கண்களாகவும்

கொண்ட பேருருவத்தையும் எல்லாப் பொருள்களிலும் அந்தர் யாமியாய்க் கலந்திருக்கும் சிற்றுருவத்தையும் ஒரே காலத்தில் பெற்றிருக்கும் சக்கராயுதபாணியாகிய திருமாலே வேத முதல் வன் என்ற செய்தியை அப்புலவர் பெருமானே விளக்கு கிறார்.

அவரே குறுந்தொகைக் கடவுள் வாழ்த்தில் தாமரையை ஒத்த திருவடிகள், பவளத்தை ஒத்த உடல் ஒளி, குன்றி மணியை நிகர்த்த செந்நிற ஆடை, கிரவுஞ்ச மலையை இருகூறாக்கிய ஒளிதிகழ் நெடுவேல், சேவற்கொடி இவற்றை உடைய முருகப் பெருமான் காப்பதனாலேயே உலகம் பாது காவலை உடைய நாட்களைப் பெறுகிறது என்ற செய்தியைச் சுட்டுகிறார்;

பரிபாடலில் திருமாலே வெண்ணிற மேனியையும் கலப் பைப் படையையும் உடைய பலராமனாகக் காட்சியளிக்குஞ் செய்தி கூறப்பட்டுள்ளது.

இனி, புறநானூற்றில் பாண்டியன் பல்யாகசாலை முது குடுமிப் பெருவழுதியைக் காரிகிழார் பாடிய பாடலில் (6) அவனுடைய வெண்குடை சிவபெருமானுடைய திருக் கோயிலை வலம் வருவதற்காகத் தாழ்க என்ற கருத்தில்,

*பணியியர் அத்தை நின்குடையே முனிவர்*
*முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கே* (அடிகள் 17—18)

என்ற அடிகள் காணப்படுகின்றன. இவ்வடிகளால் அரசர் களும் சிவபெருமானுடைய திருக்கோயிலைப் பணிவுடன் வணங்கிய செய்தி போதருகிறது.

இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனை மருதன் இளநாகனார் பாடிய 55-ஆம் புறப்பாடலில் திரிபுரம் எரித்த வரும், நஞ்சுண்டவரும், சந்திரனைச் சூடியவரும் ஆகிய சிவ பெருமானுடைய மூன்று கண்களில் நெற்றிக் கண் மேம்பட்டு விளங்குவதுபோல முடிமன்னர் மூவருள் நன்மாறன் மேம் பட்டு விளங்கும் செய்தி விளக்கப்படுகிறது.

அம் மன்னனை நக்கீரனார் பாடிய 56-ஆம் புறப் பாடலில் அவன் கோபத்தால் சிவபெருமானையும், வலிமையால் பலராம னையும், புகழால் திருமாலையும், நினைத்ததை முடிக்கும் ஆற்ற

லால் முருகனையும் ஒத்தவன் என்ற கருத்து அறிவிக்கப்படு கிறது.

தமக்குக் கிடைத்தற்கரிய நெல்லிக்கனியை யீந்த அதியமான் நெடுமான் அஞ்சியை ஔவையார் பாடிய 91-ஆம் புறப்பாட்டில் அவன் நஞ்சம் உண்டு கறுத்த கழுத்தையுடைய சிவபெருமானைப் போல நிலைபெற்றிருக்க வேண்டும் என்று வாழ்த்தப்பட்டுள்ளான்.

இங்ஙனம் தெய்வங்களைப் பற்றிய செய்திகள் உவமை வாயிலாகக் கூறப்பட்டுள்ளமை பண்டைத் தமிழகத்தின் தெய்வ வழிபாட்டின் சீர்மையை வலியுறுத்துகிறது.

இனி, பத்துப் பாட்டினை நோக்குவோம். திருமுருகாற்றுப் படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல் வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பன பத்துப் பாட்டுக்களாம். இவற்றால் அறியப்படும் தெய்வம் பற்றிய செய்திகள் சிலவற்றை நோக்குவோம்.

திருமுருகாற்றுப் படை என்ற பாடல் பத்துப் பாட்டில் முதலாவது. இது நக்கீரனாரால் பாடப்பெற்றது. முருகனிடத் தில் வீடுபேற்றின்பத்தைப் பெற்றான் ஒருவன். அதனைப் பெறுவதற்கு மனங்கொண்டான் ஒருவனை முருகனுடைய படை வீடுகளுக்குச் சென்று அவனை வணங்கி வரம் பெறு மாறு வழிப்படுத்தும் வகையில் இச்செய்யுள் அமைந்திருக் கிறது. இப்பாடல் ஆறு பகுதிகளாக அமைந்துள்ளது. முதற் பகுதியாகிய திருப்பரங்குன்றம் பற்றிய அடிகளில் முருக னுடைய உடல் ஒளி, அடியவரைக் காக்குந் திறன், அவன் அணிந்த மாலைகள், அவன் தெய்வயானையின் கணவன் ஆயினமை, சூரபன்மாவை அழித்தமை, மதுரையின் மேல் பால் திருப்பரங்குன்றம் அமைந்த வனப்பு முதலியவை கூறப் பட்டுள்ளன.

திருச்சீரலைவாய் பற்றிய அடிகளில் முருகன் யானைமேல் இவர்ந்து காட்சியளிக்குந்திறன், அவனுடைய ஆறு முகங் களும், பன்னிரண்டு கரங்களும் செய்யுந் தொழில்கள், மயிற் கொடியின் வனப்பு, வள்ளியம்மையின் சிறப்பு முதலியவை கூறப்பட்டுள்ளன. இத் திருச்சீரலைவாய் கடற்கரையில்

அமைநதுள்ள திருச்செந்தூர் என்ற திருப்பதியாகும். இது 'வெண்டலைப்புணரி அலைக்குஞ் செந்தில், செவ்வேள் நிலைஇய காமர் வியன்துறை' என்று புறநானூற்றிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

அடுத்துக் கூறப்படும் திருவாவினன்குடி என்ற பழனி மலை பற்றிய அடிகளில் பண்டைய முனிவரின் சிறப்பு, கந்தருவர்களுடைய பெருமை, திருமால், சிவபெருமான், இந்திரன் இவர்களுடைய நலன்கள் ஆகியனவும், பிரமனுக்கு முருகனுல் ஏற்பட்ட சாபத்தைப் போக்கத் தேவர்களும் முனிவர்களும் முருகனை வேண்டுவதற்காகச் சென்ற திறமும் அவர்களுக்கு அருளுவதற்காக முருகப் பெருமான் தெய்வயானையோடு வீற்றிருந்த வனப்பும் கூறப்பட்டுள்ளன.

திரு ஏரகம் என்னும் சுவாமிமலை பற்றி அடிகளில் அந்தணர்களின் சிறப்பும் ஆறெழுத்தை உச்சரிக்கும் திறனும் பிறவும் கூறப்பட்டுள்ளன.

குன்று தொருடல் என்ற பகுதியில் வேலன் எடுக்கும் வெறியாட்டில் முருகன் வெளிப்படும் செய்தி வருணிக்கப்பட்டுள்ளது.

பழமுதிர் சோலை என்ற அழகர்மலைப் பகுதியில் முருகன் திருவிழா, வெறியாட்டிடம், கான், சோலை, திட்டு, ஆறு, குளம், சதுக்கம், சந்தி, கடம்பமரத்தடி, மன்றம், பொதியில், தூண்கள் முதலிய பல இடங்களிலும், அழகர்மலையிலும் வீற்றிருக்கும் செய்தி விளங்க உரைக்கப் பட்டுள்ளது. முருகனுடைய பிறப்பும் அவன் பெயர்கள் பலவும் விளக்கப்பட்டுள்ளன. அவன் அடியவர்களுக்குச் சீவன்முத்தி நிலையை அளிக்கவல்லவன் என்ற செய்தி உறுதியாகக் கூறப்பட்டுள்ளது.

இனி, பெரும்பாணுற்றுப்படை என்ற பாடலில் கடியலூர் உருத்திரங்கண்ணனுர் என்ற புலவர் தொண்டைமான் இளந்திரையனுடைய சிறப்புகள் பலவற்றையும் விளக்குகையில் அவன் தலைநகரான காஞ்சியைப்பற்றி விரிவாகக் கூறுகிறுர். அக்காஞ்சி நகரிலுள்ள திருவெஃகாவில் பள்ளிகொண்ட திருமாலும் இவர் கொப்பூழில் தோன்றிய பிரமனும்,

காந்தளஞ் சிலம்பில் களிறு பழந்தாங்குப்
பாம்பணைப் பள்ளியமர்ந்தோன் (அடிகள் 372-72)

எனவும்,

நீனிற வுருவின் நெடியோன் கொப்பூழ்
நான்முக ஒருவற் பயந்த பல்லிதழ்த்
தாமரைப் பொகுட்டு (அடிகள் 402-404)

எனவும் சுட்டப்படுகின்றனர்.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பற்றி நப்பூதனார் பாடிய முல்லைப்பாட்டில் திருமால் மாவலியிடம் மூவடிமண் பெற்று மூவுலகும் ஈரடியால் அளக்க ஓங்கிய செயல்,

வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் (அடிகள் 2-3)

என்ற அடிகளால் விளக்கப்பட்டுள்ளது.

அவ்வரசனைப் பற்றி மாங்குடி மருதனார் பாடிய மதுரைக் காஞ்சியில் பஞ்சபூதங்களையும் படைத்த சிவபெருமான் முதலிய தெய்வங்களுக்கு உயர்ந்த பலி கொடுத்த செய்தி,

நீரும் நிலனும் தீயும் வளியும்
மாக விசும்போடைந்துடன் இயற்றிய
மழுவாள் நெடியோன் தலைவனாக...
நாற்ற உணவின் உருகெழு பெரியோர்க்கு
மாற்றரு மரபின் உயர்பலி கொடுமார்
அந்தி விழவின் தூரியம் கறங்க (அடிகள் 455-60)

என்ற அடிகள் மூலம் பெறப்படுகின்றது.

கடியலூர் உருத்திரங்கண்ணனார் கரிகால் பெருவளத்தானைப் பற்றிப் பாடிய பட்டினப்பாலையில் சோழன் தலைநகரான புகார் வருணிக்கப்பட்டுள்ளது. அந்நகரிலுள்ள அங்காடித் தெருவில் முருகனுக்கும் மற்ற தேவர்களுக்கும் திருவிழா நடைபெற்ற செய்தி,

செவ்வேள்

வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்க்
குழலகவ யாழ்முரல, முழவதிர முரசியம்ப
விழவரு வியலாவணத்து,

மையறு சிறப்பின் தெய்வஞ் சேர்த்திய
மலரணி வாயில் (அடிகள் 155-160)

என்ற அடிகளால் சுட்டப்பட்டுள்ளது.

இரணிமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகனார் நன்னனைப்பற்றிப் பாடிய மலைபடுகடாம் என்ற பாடலில் சிவ பெருமான்,

பேரிசை நவிரம் மேஎய் உறையும்
காரி உண்டிக் கடவுள் (அடிகள் 82-83)

என்று குறிப்பிடப் படுகிறார்.

சங்ககால நூல்களில் மிகப் பிற்பட்டதாக ஆராய்ச்சி யாளர்களால் சுட்டப்படும் பரிபாடல் என்ற தொகை இசைப் பாடல்களால் ஆகியது. தொடக்கத்தில் அத்தொகையில் எழுபது பாடல்கள் இருந்தன என்ப. தற்போது இருபத் திரண்டு பாடல்களே கிடைத்துள்ளன. அவற்றில் திருமால், முருகன், வையையாறு பற்றிய செய்திகளே கூறப்பட் டுள்ளன.

பரிபாடலில் திருமால் சங்கு, சக்கரம், வில், வாள், கதை என்ற ஐந்து ஆயுதங்களை உடையவன், திருமகளை மார்பில் கொண்டவன், வராக வடிவெடுத்துப் பூமிதேவியை மீட்டவன், வாசுதேவன், சங்கருடணன், பிரத்யும்நன், அநிருத்தன் என்ற நால்வகை வியூக வடிவெடுத்தவன், கலப்பையைப் படையாக உடைய பனைக்கொடியோனாகிய பலராமனுக்குத் தம்பியாகியவன், நரசிம்ம வடிவெடுத்து இரணியனை அழித் தவன், பிரமனுக்கும் மன்மதனுக்கும் தந்தையானவன், பொது மக்களுக்கு விக்கிரக வடிவிலும், அந்தணர்களுக்கு வேள்வித் தீயிலும், யோகிகளுக்கு உள்ளத்திலும், ஞானிகளுக்கு எவ் விடத்திலும் தோன்றுபவன், திருமாலிருஞ் சோலைமலையில் எழுந்தருளியிருந்து உயிரினங்களுக்குத் திருவருள்புரிபவன் முதலிய செய்திகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

முருகப்பெருமான் சிவபெருமானுடைய மகன், சரவணப் பொய்கையில் தோன்றியவன், இளமையிலேயே இவனிடம் காணப்பட்ட வீரத்தை மெச்சி அக்கி தன் அம்சமாகக் கோழிச் சேவலையும், இந்திரன் மயிலையும், இயமன் வெள்ளாட்டையும் முறையே வழங்கினர். கடம்பமாலையைச்சூடிக் கடம்பமரத்

தடியில் வீற்றிருக்கும் முருகப்பெருமான் ஆறுதலைகளும் பன்னிரண்டு தோள்களும் உடையவன். அவன் தன் கரங்களில் ஆடு, மயில், கோழி, வில், அம்பு, வாள், ஈட்டி, கோடரி, மழு, நெருப்பு, மாலை, மணி என்பனவற்றை அணிந்துள்ளான். அவன் பிணிமுகம் என்ற யானை மீதேறி வேலாயுதத்தால் சூர பன்மாவாகிய மாமரத்தை வெட்டி வீழ்த்தினன், கிரவுஞ்ச மலையை இரு கூருகப் பிளந்தான். அவன், தேவர் பலரும் தன்னை வணங்குமாறு திருப்பரங்குன்றத்தில் வீற்றிருக்கிருன், வானுலக தெய்வயானையை மணந்த முருகன் வள்ளியம்மை யோடு திருப்பரங்குன்றத்தில் அடியவர்களுக்கு அருள் செய்வதற்காகவே எழுந்தருளியுள்ளான் ஆதலின் அடியவர் பலரும் அவனைப் பலவாறு மலர் தூவிப் போற்றி வழிபடு கின்றனர். மேம்பட்ட அடியவர்கள் அவனிடம் பொருளும் பொன்னும் போகமும் விரும்பாது, அவனுடைய அருளையும் தாங்கள் செலுத்த வேண்டிய அன்பையும் உலக நன்மைக்குக் காரணமான அறத்தையுமே வேண்டுகின்றனர் என்று பரி பாடல் பலவாறு வருணிக்கிறது.

சிலப்பதிகாரம் தமிழிலுள்ள சிறந்த காவியம். இதுவே தமிழ்மொழியில் தற்போது காணக்கிடைக்கும் பழங்காப்பிய முமாகும். இதன் காலம் கி. பி. இரண்டாம் நூற்றுண்டு எனவும் ஐந்தாம் நூற்றுண்டு எனவும் இரு சாரார் கூறுவர். அவர் கூற்று எங்ஙனமாயினும் தமிழ்நாட்டில் களப்பிரர் அடி யெடுத்துவைப்பதன் முன், பண்டைத்தமிழ் மன்னர் ஆண்ட காலத்திலேயே அக்காப்பியம் எழுந்தது என்பதில் கருத்து வேற்றுமை இல்லை.

இதன் புகார்க் காண்டத்தில் இந்திரவிழவூரெடுத்த காதையில் பிறவாயாக்கைப் பெரியோன் (சிவன்) கோயில், அறுமுகச் செவ்வேள் (முருகன்) அணிதிகழ்கோயில், வால் வளைமேனி வாலியோன் (பலராமன்) கோயில், நீல நிறமேனி நேமியோன் (திருமால்) கோயில், இந்திரன் கோயில் ஆகிய வற்றில் திருவிழா நடந்த செய்தி கூறப்பட்டுள்ளது. அதே காண்டத்தில் கண்ணகி கனுத்திறம் உரைத்த காதையில் புகார் நகரில் அமரர் தருக்கோட்டம், வெள்ளையானைக் கோட்டம், வெள்ளைநாகர்தம் கோட்டம், பகல் வாயில் உச்சிக்கிழான் கோட்டம், ஊர்க்கோட்டம், வேற்கோட்டம், வச்சிரக் கோட்டம் புறம்பணையான் வாழ் கோட்டம். நிக்கந்தக் கோட்டம், நிலாக்

கோட்டம், பாசண்டச் சாத்தான்கோட்டம், காமவேள் கோட்டம் என்ற பல கோயில்களும் இருந்த செய்தி சுட்டப்பட்டுள்ளது.

மதுரைக் காண்டத்துக் காடுகாண்காதையில்,

வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்
ஓங்குயர் மலையத்து உச்சி மீமிசை...
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்...
வீங்குநீர்க் காவிரி வியன் பெருந்துருத்தி
திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்

என வேங்கடமலை, திருவரங்கம் ஆகியவற்றில் திருமாலின் கோயில்களும் சிலைகளும் இருந்தமை குறிப்பிடப்பட்டுள்ளன. அடுத்துள்ள வேட்டுவவரி என்ற பகுதியில் காளிகோயில் வருணிக்கப்பட்டுள்ளது. மக்கள் காளிகோயிலின் முகப்பிலுள்ள பலிபீடத்தைத் தொழுது பின் காளியை வழிபட்டு வந்தனர். காளிதேவி நஞ்சுண்டு கறுத்த கண்டத்தள். ஓங்குமலைப்பெருவில் பாம்பு நாண்பூட்டியவள், கச்சணிந்த கொங்கையள், வீரவளை யணிந்த கைகளில் சூலமேந்தியவள். யானைத்தோலைப் போர்வையாகக் கொண்டவள், புலித்தோலை உடுத்துச் சிங்கத்தின் தோலை மேகலையாக அணிந்தவள், வேதத்திற்கும் அப்பாற்பட்ட ஞானக் கொழுந்தாக உள்ளவள், கலைமானை ஊர்தியாக உடையவள், மகிடாசுரனை வென்று அவன் தலைமிசை நின்ற தையல், தேவராலும் கொண்டாடப் படுபவள், வேடர்களுடைய குலதெய்வம், முத்தேவர் தம் உள்ளத்தில் நிலைபெற்றிருப்பவள் எனப் பலவகையாகப் பாராட்டப் பட்டுள்ளாள்.

அதே காண்டத்து ஆய்ச்சியர் குரவை என்ற பகுதியில், மதுரை நகரத்து ஆய்ப்பாடியில் கண்ணகி தங்கியிருந்த போது அங்குப்பலவிதமாக ஏற்பட்ட தீய சகுனங்களைக்கண்டு அஞ்சிய ஆயர்குலமக்கள் தெய்வத்தின் அருள் வேண்டித் திருமாலுக்காகக் குரவைக் கூத்து நிகழ்த்தினர். இப்பகுதியில் கண்ணனுடைய திருவிளையாடல்கள் பலவும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

கண்ணன் கன்றினை வீசி விளமரத்தைத் தகர்த்தமை, குருந்தமரத்தை வளைத்துக் கொடுத்தமை, திகிரியால் கதிரவனை மறைத்தமை, பாற்கடல் கடைந்தமை, யசோதையால் கட்டப்பட்டமை, களவினால் உறியிலிருந்த வெண்ணெயை

எடுத்துண்டமை, பசியின்றியே மூவுலகையும் உண்டமை, பாண்டவருக்காகத் தூது நடந்தமை, கம்சனுடைய உயிர் கவர்ந்தமை, திருமால் நரசிம்மமாகி இரணியனை அழித்தமை, இராமனாகித் தம்பியோடு கான் ஏகிக் கடல்கடந்து இலங்கையைத் தொலைத்தமை ஆகிய திருமாலின் அவதாரச் சிறப்புக்கள் இனிய இசைப்பாடலில் பாடப்பட்டுள்ளன.

வஞ்சிக்காண்டத்துக் குன்றக் குரவையில் முருகனுடைய சிறப்புக்கள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

முருகன் சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும் ஏரகமும் நீங்கா இறைவன் எனவும், சூரபன்மனை அழித்தவன் எனவும், வள்ளியின் கணவன் எனவும், கன்னியர்களின் திருமணத்துக்கு உதவுபவன் எனவும் பலவாறு புகழப்பட்டுள்ளான்.

அக்காண்டத்து நடுகற்காதையில் இமயமலையிலிருந்து கொணரப்பட்டுக் கங்கையில் முழுக்காட்டப்பட்ட கண்ணகியின் சிலைக்குக் கோயிலமைத்துச் செங்குட்டுவன்வழிபாட்டுக்குரியன பலவும் செய்த செயல்கள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

சிலப்பதிகாரப் பதிகத்திலிருந்தும் உரைப்பாட்டு மடையிலிருந்தும் மதுரை வெள்ளியம்பலத்திலிருந்த சிவபெருமான் கோயில் பற்றிய செய்தி, கொற்கையில் வெற்றிவேற் செழியன் கண்ணகிக்குக் கோயில் எடுத்து விழாக் கொண்டாடிய செய்தி, கொங்கிளங்கோசர், இலங்கை மன்னன் கயவாகு, உறையூர்ச் சோழன் பெருங்கிள்ளி ஆகியோர் கண்ணகிக்குக் கோயிலெடுத்த செய்தி என்பன உணரப்படுகின்றன.

மலைப்பகுதிக்கு முருகனும், காட்டுப் பகுதிக்குத் திருமாலும், வயல் பகுதிக்கு இந்திரனும் கடற்பகுதிக்கு வருணனும் பண்டைத் தமிழரால் தெய்வமாகக் கொள்ளப்பட்ட செய்தி,

'மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்'

என்ற தொல்காப்பியப்பகுதியால் உணரப்படுகிறது. சற்றுப் பிற்பட்ட காலத்தில் பாலைக்குக் காளியைத் தெய்வமாகக்

கொண்டனர். இக்கருத்துக்களை உட்கொண்டே இளங்கோ வடிகள் தாம் இயற்றிய சிலப்பதிகாரத்தில் புகாரைப்பற்றிப் பேசுமிடத்து இந்திரவிழாவையும், கானல்வரியில் வருணன் வழிபாட்டையும், வேட்டுவவரியில் காளி வழிபாட்டையும், ஆய்ச்சியர் குரவையில் திருமால் வழிபாட்டையும் குன்றக்குர வையில் முருகன் வழிபாட்டையும் குறிப்பிடுவாராயினர்.

இதுகாறும் கூறியவற்றால் பண்டைத் தமிழர்களின் கடவுள் வழிபாடும் அவர்கள் தெய்வங்களுக்குக் கோயில் அமைத்து வழிபட்ட திறனும் ஓரளவு அறியப்படும்.

## அத்தியாயம் 3

# பல்லவர்கள் காலம் (கி. பி. 550-850)

சங்க காலத்திற்கும் பல்லவர் காலத்திற்கும் இடைப்பட்ட சில நூற்றுண்டுகள் தமிழகத்தின் இருண்ட காலமாகும்; அக் காலத்தில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி எதுவும் ஏற்பட்டிலது. அக் காலத்தில் ஓரளவு சமணமதம் தலையெடுக்கவே, வைதிக மதங்களாகிய சைவ வைணவ மதங்கள் சற்று மங்கத் தொடங்கின.

பல்லவ மன்னருள் சிம்ம விஷ்ணுவைச் சேர்ந்த பல்லவர் காலத்தில் தமிழகத்தில் மீண்டும் புதுமலர்ச்சி தொடங்கியது. சமயம், கலை, இலக்கியம் முதலிய பல துறைகளிலும் தென்னாடு சிறப்புற்று விளங்கியது. சம்பந்தர், அப்பர், சுந்தரர் முதலிய நாயன்மார்களும் ஆழ்வார்கள் பன்னிருவரும் அவதரித்துத் தமிழகத்தில் சைவ வைணவ மதப்பற்றை வளர்த்தார்கள். நாட்டில் கோயில்கள் பல எடுக்கப்பட்டன. மண்ணாலும் சுட்ட செங்கல்லாலும் எடுப்பிக்கப்பட்ட கோயில்கள் **மண்டளிகள்** எனவும், மலையில் குடையப்பட்ட கோயில்கள் **குடபோகம்** எனவும், தனிப்பாறைகளில் குடைவிக்கப்பட்ட கோயில்கள் **மலைதளி** எனவும் கருங்கற்களை யடுக்கிக் கட்டப்பட்ட கோயில்கள் **கற்றளி** எனவும் வழங்கப்படுவனவாயின. கோயில்களே மக்கள் வாழ்க்கையின் இதயத்தானமாக விளங்கின. நாயன்மார்கள் காலத்தில் சோழ நாட்டில் 196 கோயில்களும் பாண்டிய நாட்டில் 14 கோயில்களும், கொங்கு நாட்டில் 7 கோயில்களும் நடு நாட்டில் 22 கோயில்களும் தொண்டை நாட்டில் 32 கோயில்களும், மலை நாட்டில் ஒரு கோயிலும் இலங்கையில் 2 கோயில்களும் ஆக 274 கோயில்கள் அவர்களுடைய திருப் பாசுரங்களைப் பெற்று விளங்கின என்பது இப்பொழுதும் அறியப்படுகிறது. அங்ஙனமே ஆழ்வார்கள் பன்

னிருவராலும் மங்களாசாசனம் செய்யப்பட்ட நூற்றெட்டுத் திருப்பதிகளில் பெரும்பான்மையன தமிழகத்தில் திகழ்ந்தன.

ஆந்திரப் பகுதியைச் சார்ந்த நெல்லூர் குண்டூர் முதலிய மாவட்டங்களில் விஷ்ணு குண்டினர்களால் வெகு காலத்திற்கு முன்னரே குகைக் கோயில்கள் குடையப்பட்டன. ஆனால் தமிழகத்தில் முதன்முதல் குகைக் கோயில்களைக் குடைவித்தவன் முதலாம் மகேந்திரவர்மன் என்ற பல்லவ மன்னனே யாவான். விசித்திரசித்தன் முதலிய பல விருதுப் பெயர்களை உடைய அம்மன்னன் குடைவித்த மண்டகப்பட்டுக் கோயிலில் 'செங்கல், மரம், உலோகம், சுண்ணும்பு முதலிய மூலப் பொருள்களை உபயோகிக்காமல் பிரமன், சிவன், விஷ்ணு என்ற மும்மூர்த்திகளுக்கும் அற்புதமான ஆயதனத்தை (கோயிலை) விசித்திரசித்தன் அமைத்தான்' என்ற அவனுடைய கல்வெட்டு காணப்படுகிறது.

மண்டகப்பட்டுக் கோயிலைப் போன்ற அமைப்புடைய குடை கோயில்கள் வடக்கே பல்லாவரம் முதல் தெற்கே திருச்சி, சிற்றன்னவாசல், திருமெய்யம் முதலிய இடங்கள் வரை காணப்படுகின்றன.

திருக்கழுக்குன்றத்திலுள்ள வேதகிரி மலையின் உச்சிக் கோயிலில் இருந்து கீழே இறங்கி வரும் வழியில் மலை நடுவில் கிழக்குத் திசையை நோக்கி ஒரு குடைகோயில் உள்ளது. அக் கோயிலில் மும்மூர்த்திகளுக்கு அமைக்கப்பட்ட மூன்று கருவறைகளும் துவார பாலகர்களால் அலங்கரிக்கப்பட்ட அர்த்த மண்டபமும் இடம்பெற்றுள்ளன. அக் கோயிலில் உள்ள தூண் ஒன்றில் அதன் பெயர் **மலைமேலுள்ள மூலத்தானப் பெருமாணடிகளின் கோயில்** என்று பொறிக்கப்பட்டுள்ளது. அக் கல்வெட்டு முதலாம் மகேந்திரவர்மனுடைய மகனுன முதலாம் நரசிம்மவர்மனுடைய கல்வெட்டாகும்.

இந் நரசிம்மவர்மன் ஆட்சியில் மாமல்லபுரத்தில் **மலைதளிகள்** பல அமைக்கப்படுவனவாயின. பஞ்சபாண்டவர் இரதங்கள் என்று வழங்கப்பெறும் தனிப்பாறைக் கோயில்கள் மலைதளிகளைச் சேர்ந்தனவே. மலைதளிகள் உச்சியிலிருந்து தொடங்கப்பட்டு அடித்தளத்தில் முடிவடையும். அக்காரணத்தாலேயே பஞ்சபாண்டவர் இரதங்களில் பல அடித்தளங்கள்

முற்றுப் பெருமலேயே இருக்கின்றன. இவற்றை ஆரம்பித்த மன்னர்களின் மறைவாலோ, பல்லவர்-சளுக்கியர் போராலோ இவை அரைகுறையாக நிறுத்தப்பட்டன. இவற்றை உருவாக்கப் பல வாண்டுகள் ஆகியிருக்கக்கூடும். இத்தளிகளில் சிலைகளோ, இலிங்கங்களோ பிரதிட்டிக்கப்பட்டுப் பிற்காலத்தில் இடம் பெயர்ந்தன போலும்.

நரசிம்மவர்மன் காலத்திற்குப் பிறகும் தமிழகத்தில் சில குடைகோயில்கள் தோன்றின. இரண்டாம் நந்திவர்மனின் பத்தாம் ஆண்டிற்கு முற்பட்ட திருவெள்ளறைக் கோயில், தந்திவர்மனின் 5–ஆம் ஆண்டுக் கல்வெட்டினை உடைய குன்றுண்டார்கோயில், தந்திவர்மனின் 16–ஆம் ஆண்டிற்கு முற்பட்ட மலையடிப்பட்டிக்கோயில், நிருபதுங்கனின் 7-ஆம் ஆண்டில் குடைவிக்கப்பட்ட நார்த்தாமலையிலுள்ள பழியிலியீசுவரம் போல்வன பிற்காலப் பல்லவர்களின் குடபோகக் கோயில்களாம்.

இரண்டாம் நரசிம்மன் எனப்படும் இராசசிம்மன் (கி. பி. 695—722) காலம் முதல் கட்டிடக் கலையில் ஒரு புதிய மாறுதல் ஏற்பட்டது எனவும் இவன் காலத்தில்தான் முதல் முதல் தமிழகத்தில் கற்றளிகள் தோன்றின எனவும் ஆராய்ச்சியாளர் குறிப்பிடுகின்றனர். ஆனால் அண்மையில் கிடைத்துள்ள சில சான்றுகளைக் கொண்டு இக் கருத்தை மாற்றிக் கொள்ள வேண்டியவராகி உள்ளோம்.

இராசசிம்மன் காலத்துக்கு முன்பே தமிழகத்தில் கட்டுக்கோயில்கள் தோன்றியிருக்கலாம் என்பதற்குரிய சான்றுகளை நோக்குவோம். காஞ்சி ஏகாம்பரநாதர் கோயிலின் மூன்றும் பிராகாரத்திலுள்ள ஆயிரக்கால் மண்டபத்தை யடுத்திருந்த சிறு மண்டபமொன்று இப்போது பாழடைந்து மறைந்து போய்விட்டது; அங்கிருந்த கற்றூண்கள் நடுவில் சதுரமாகவும் இருமருங்கிலும் எட்டுப் பட்டை தீட்டியனவாகவும் அமைந்தவை. அவை முதலாம் மகேந்திரவர்மன் காலத்துத் தூண்களை ஒப்பன.

இக் கற்றூண்களைக் காஞ்சியிலிருந்து எடுத்து வந்து சென்னைத் தொல்கலைப் பொருட்காட்சி சாலையின் வாசலில் நிறுத்தியுள்ளனர். தூண்களின் நாற்புறங்களிலும் முதலாம்

மகேந்திரவர்மன் காலத்தில் விளங்கிய பல்லவ கிரந்த லிபியில் கல்வெட்டுக்கள் உள்ளன. குசாகிரன், மஹாமேகன், திரிட பக்தி, சித்ரகாரப்புலி முதலிய மகேந்திரனின் விருதுப் பெயர்கள் பல இத்தூண்களில் பொறிக்கப் பெற்றுள்ளன. இக் கற்றூண்கள் காஞ்சியிலுள்ள ஒரு கட்டுக் கோயிலைச் சேர்ந்தனவாக இருக்கவேணடும். இக் கோயில் கற்றளிதான் என்பதை அறுதியிட்டு உறுதியாகக் கூறவியலா விடினும் செங்கல்லும் கருங்கல்லும் கலந்து அமைக்கப்பட்ட கலப்புக் கோயில் என்ருவது இதனைக் கொள்ளலாம்.

இனி, அடுத்த சான்றை நோக்குவோம். காஞ்சியில் ஒக்கப்பிறந்தான்குளத் தெருவின் வடகோடியில் கல்வெட்டு பொறிக்கப்பட்ட கல் ஒன்று கிடைத்துள்ளது. முதல் மகேந்திரனுடைய திருச்சி குடபோகக் கோயிலில் பொறிக்கப் பட்டுள்ள கல்லெழுத்துக்களை ஒத்த எழுத்துக்களால் இக் கல்லில் 'ஸ்ரீமஹேந்திரவர்மேசுவர கிருஹம்' என்ற தொடர் காணப் படுகிறது. இக் கல் மஹேந்த்ரவர்மன் காலத்தில் கட்டப்பட்ட கருங்கல் கட்டிடக் கோயிலின் வாயில் முகப்பில் அமைக்கப் பட்ட உத்தரக் (கற்கவிக்) கல்லாகவும் இக் கோயிலின் பெயர் தீட்டப்பட்ட கல்லாகவும் கொள்ளத்தக்கதாம். ஆகவே, இப் பெயருக்குரிய கோயில் முதல் மகேந்திரவர்மன் காலத்ததாகிய கலப்புக் கோயிலோ அல்லது கற்றளியோ ஆதல் வேண்டும். ஆயினும் பல்லவர் கல்வெட்டுத் தொகுதியை வெளியிட்டுள்ள வே. வேங்கடசுப்பையர் இக் கல்வெட்டு மூன்ரும் மகேந்திரன் காலத்தது (கி. பி. 722) என்று முடிவு செய்துள்ளார். அக் கூற்று பொருந்தாது என்பதைக் காண்போம்.

காஞ்சி கைலாசநாதர் கோயிலின் வாசலில் கோபுரம் போன்ற கட்டிடம் அமைந்துள்ளது. அக் கோயிலை எடுப்பித்த இராசசிம்மன் தொடக்கத்தில் கட்டப்படவேண்டிய திருவாயிலைக் கோபுரமாக எடுப்பித்தான். அதன் இரு புறங்களிலும் இடைவெளி விட்டுக் கோபுரத்திற்குப் பதிலாக மற்ளெரு சிறு கோயிலை இராசசிம்மனின் மகனுன மூன்ரும் மகேந்திரவர்மன் கட்டிவைத்தான். இக் கோயிற்படியின் இரு மருங்கிலும் 'ஸ்ரீமஹேந்திரவர்மேசுவர கிருஹம்' என்ற கல்வெட்டு பொறிக் கப்பட்டுள்ளது. மூன்ரும் மகேந்திரவர்மன் காலத்ததாகிய இக் கல்லெழுத்து, ஒக்கப்பிறந்தான்குளத் தெருவின் கல்வெட்

டெழுத்தை ஒத்த தொல்வடிவினது அன்று. திருச்சி மலைக் கோயில் கல்வெட்டையே ஒக்கப்பிறந்தான்குளத் தெருக் கல் வெட்டு வடிவால் ஒத்துள்ளது. ஆதலின் அக் கல்வெட்டு முதல் மகேந்திரவர்மன் காலத்துக் கற்கோயில் ஒன்றன் கல் வெட்டே என்பது தேற்றம்.

இவற்றால் இராசசிம்மன் காலத்துக்கு முற்பட்ட மகேந் திரன் காலம் முதலே தமிழ் நாட்டில் கற்கோயில்கள் அமைக் கும் பழக்கம் தோன்றி யிருத்தல் வேண்டும் என்று உறுதி செய்ய இயலுகிறது.

முதல் பரமேசுவரவர்மனுடைய முதலாண்டுக் கல்வெட் டொன்று, தென் கரணீ என்ற சிற்றம்பாக்கத்திலுள்ள செல்லி யம்மன் கோயிலின் கற்படியின் பக்கத்தில் உள்ளது. அக் கல்வெட்டு சிவன்கோயில் ஒன்று கற்றளியாக எடுக்கப்பட்ட செய்தியை வெளியிடுகிறது.

இம் மன்னனுடைய காலத்தனவாகிய கூரம் செப்பேடு களில் கூரம் என்ற ஊரில் சிவன்கோயிலொன்று கட்டப் பட்டது என்பதும் இம் மன்னன் பெயரால் பரமேசுவர மங்கலம் என்ற கிராமம் இக் கோயிலுக்குத் தேவதானமாக வழங்கப்பட்டது என்பதும் கூறப்பட்டுள்ளன. இக் கோயில் பிராகாரத்தில் கிடைத்துள்ள கல்வெட்டொன்றில் 'பல்லவ மாராசன் மாமல்லன்' என்ற தொடர் காணப்படுகிறது. மாமல்லன் என்பது வாதாபிகொண்ட முதல் நரசிம்ம வர்ம னையே குறிப்பதால், நரசிம்மன் காலத்திலேயே இச் சிவன் கோயில் கலப்புக் கோயிலாக இருந்திருக்க வேண்டும் என்பதும் பரமேசுவரன் காலத்தில் இது புதுப்பிக்கப் பட்டிருக்க வேண்டும் என்பதும் போதருகின்றன.

இரண்டாம் நரசிம்மன் எனப்படும் இராசசிம்மன் காலத் தில் தொடங்கிப் பல்லவ மன்னர்களால் பல நேர்த்தியான கற்றளிகள் எடுக்கப்பட்டன. காஞ்சியிலுள்ள கைலாசநாதர் கோயில், பிறவாதான் ஈசுவரம், இறவாதான் ஈசுவரம் என்ப னவும், மாமல்லபுரத்திலுள்ள கடற்கரைக் கோயிலும், பனைமலை யிலுள்ள தாளபுரீசுவரர் கோயிலும், திருக்கழுக்குன்ற மலை யின் உச்சியிலுள்ள திருக்கழுக்குன்றமுடைய நாயனார் கோயில் எனப் பண்டு வழங்கப்பட்ட வேதபுரீசுவரர் கோயிலும் இவன் காலத்தனவாம்.

பதினாறுப்பட்டை தீட்டிய இலிங்கமும், கருவறையின் பின சுவரில் சோமாஸ்கந்தர் சிலையும், கருவறையின்மீது உயர்ந்து காணப்படும் பல தளங்களை உடைய விமானமும், இணைக்கப் பட்ட சுற்றுக் கோயில்களும், அர்த்த மண்டபமும், திருச் சுற்று மாளிகையும், கோபுரமும், நந்தி மண்டபமும், கொடி மரமும் இராசசிம்மன் காலத்தை ஒட்டிய கோயில்களின் கூறு களாக விரிந்தன.

இரண்டாம் நந்திவர்மன் (கி. பி. 731–795) காலத்தில் பல்லவர்காலக் கோயில்களில் மிகச் சிறந்ததும் மூன்று தளங் களை உடையதும் அழகிய முறையில் இணைக்கப்பட்ட பல பாகங்களை உடையதும் ஆகிய **வைகுந்தப் பெருமாள் கோயில்** என்ற கற்றளியும், முத்தேசுவரம், மதங்கேசுவரம், திரிபுராந் தகேசுவரம் என்ற கோயில்களும் காஞ்சிநகரில் எடுப்பிக்கப் பட்டன.

உத்தரமேரூரில் உள்ள வைகுந்தப் பெருமாள் கோயில், சுந்தரவரதப் பெருமாள் கோயில் என்ற இரண்டு கோயில் களில், துலாபாரக் கோயில் என்று கல்வெட்டுக்களால் குறிப்பிடப்படும் சுந்தரவரதப் பெருமாள் கோயிலில் தந்தி வர்ம பல்லவ மன்னனுடைய (கி.பி. 785-836) 10-ஆம் ஆண்டுக் கல்வெட்டு காணப்படுவதால் அக் கோயில் தந்திவர்மன் காலத் தில் கட்டப்பட்டிருக்கவேண்டும் என்பது உணரப்படுகிறது.

பல்லவர் காலப் பின் பகுதியைச் சேர்ந்த **திருத்தணி வீரட் டானேசுவரர் கோயில்** விமானத்தின் தென்சுவரில் அபராசித வர்ம பல்லவ மன்னனின் (கி. பி. 879-897) 18—ஆம் ஆண்டுக் கல்வெட்டு காணப்படுவதால் இஃது அபராசிதன் காலத்துக் கோயில் என்பது உறுதியாகிறது.

இக் கோயிலின் கர்ப்பக்கிருகத்தின் பின்பாகம் வட்ட மாகவும் சிகரம் வட்டக் கூண்டின் அமைப்பை ஒத்தும் உள்ள தால் இக் கோயிலின் அமைப்பு **தூங்கானை மாடம் (கஜபிரிஷ்டம்)** என்று கூறப்படுகிறது.

பிற்பட்ட பல்லவர் காலக் கோயில்களில் திருத்தணி வீரட்டானேசுவரர் கோயில் தலைசிறந்து விளங்குகிறது. கருவறையும் அர்த்த மண்டபமும் இணைக்கப்பட்டுள்ளன. இவைகளில் வெளிப்புறத்தில் அமைந்த தேவ கோஷ்டங்களில்

கணபதி, தக்ஷிணாமூர்த்தி, விஷ்ணு, பிரமன், துர்க்கை என்ற தெய்வங்களின் சிலைகள் உள்ளன. இப் பகுதியில் பரிவார தேவதைகளின் கோயில்களும் பண்டு அமைந்திருக்க வேண்டும் என்பது ஊகிக்கப்படுகிறது. பிற்காலத்தில் கட்டப் பட்ட கோயிலின் முன்மண்டபத்தில் பரிவார ஆலயத்தைச் சேர்ந்த சப்த மாதர்களின் சிலைகள் வைக்கப்பட்டுள்ளன. அக் காலத்தில் இக் கோயிலைச் சுற்றி மதிலும் கட்டப்பட்டிருக் கலாம்.

இத் திருத்தணிக் கோயில் முதலாம் ஆதித்த சோழன் காலத்தில் திருக்கழுக்குன்றத்தில் கட்டப்பட்ட திருமூலத் தானமுடையார் கோயிலை ஒத்திருக்கிறது. இக் கோயில் தளமும் கருவறையும் அர்த்த மண்டபமும் இன்றும் அழியாமல் நிலைபெற்றிருக்கின்றன. இப்பழைய கோயில் தற்போது பொலிவிழந்து, திருக்கழுக்குன்ற மலையடிவாரத்தில் விரிவா கக்கட்டப்பட்ட பக்தவத்ஸலர் கோயிலின் இரண்டாம் பிராகா ரத்து வட பக்கத்தில் அடங்கிக் கோயில் கருவூலமாகப் (திரு வாபரணக் கொட்டடி) பயன்பட்டு வருகிறது.

எனவே பல்லவப் பேரரசு தன் இறுதிக் காலத்தில் வளர்த்து வைத்த கட்டிடக் கலையைப் புத்துயிர் பெற்ற சோழப் பேரரசு ஏற்று ஆதரவளித்து வளர்க்க முற்பட்டது என்பது போதருகிறது. பல்லவ மன்னர் வளர்த்த கலை சோழ மன்னர்கள் காலத்தில் வளர்ந்து உச்சநிலையை அடைந்த செய்தியை அடுத்து நோக்குவோம்.

## அத்தியாயம் 4

# சோழர் கலை (கி. பி. 850-1270)

தஞ்சை விசயாலயன் வமிசத்துச் சோழ மன்னர்கள் ஏறத்தாழ 400 ஆண்டுகள் தென்னாட்டைச் சீரும் சிறப்புமாக ஆண்டனர். இக்காலத்தைத் தமிழகத்தின் பொற்காலம் எனலாம். கலைப்பாணியின் நிலைமையை ஒட்டி இக்காலத்தை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம்; விசயாலயன் காலம் முதல் உத்தம சோழன் காலம் வரை (கி. பி. 850-985) உள்ள பகுதியை முற்பகுதி எனவும், முதல் இராசராசன் காலம் முதல் அதிராசேந்திரன் காலம் வரை (கி. பி. 985–1070) உள்ள பகுதியை இடைப் பகுதி எனவும், முதற் குலோத்துங்கன் காலம் முதல் மூன்றும் இராசேந்திரன் காலம் வரை (கி. பி.1070-1270) உள்ள பகுதியைப் பிற்பகுதி எனவும் பிரிக்கலாம். இப்பிரிவுகள் பற்றி ஏனைய வரலாற்றாசிரியர்கள் கருத்தை நோக்குவோம்.

தொடக்கத்தில் தென்னகக் கலையைச் செவ்வனே ஆராய்ந்து அதன் இலக்கணத்தைச் சிறந்த முறையில் விளக்கிய முதல்வர்கள் ஜேம்ஸ் பர்கூசனும் (James Fergusson) துப்ராய் (G. J. Dubreuil) என்பவரும் ஆவர். துப்ராய் திராவிடக் கலைக் காலத்தைப் பல்லவர் கலைக் காலம் (கி. பி. 600-800), சோழர் கலைக் காலம் (கி. பி. 850- 1100), பாண்டியர் கலைக் காலம் (கி. பி. 1100–1350), விசய நகரக் கலைக் காலம் (கி. பி.1350-1600), மதுரைக் கலைக்காலம் (கி. பி. 1600 முதல் தற்காலம் வரை) என ஐந்து கூறுகளாக வகுத்து ஆராய்ந்துள்ளார். இவர் கருத்துப்படிச் சோழர் கலைக் காலம் கி. பி. 850 முதல் 1100 என்று வகுக்கப்பட்டுள்ளது. முதற் பராந்தகன் காலத்ததாகிய சீநிவாசநல்லூரிலுள்ள குரங்கநாதர் ஆலயம், தஞ்சை இராசராசேசுவரம், கங்கை கொண்ட சோளீசுவரம், ஜம்புகேசுவரச் சிறிய கோபுரம் ஆகியவற்றைச் சோழர்

காலக் கலைகளாக வருணித்துள்ளார். ஜம்புகேசுவரம், திருவண்ணாமலை, கும்பகோணம் என்ற ஊர்களில் கட்டப் பட்ட கோபுரங்கள் பாண்டியர் கலையைச் சேர்ந்தவை எனவும், சிதம்பரம் கீழைக் கோபுரம் சுந்தர பாண்டியனால் கட்டப் பட்டது எனவும், சோழ நாட்டில் வளர்ந்த பாண்டியர் கலைக்கு இவை சிறந்த எடுத்துக்காட்டாகும் எனவும், ஏறத்தாழ 50 ஆண்டுகளுக்கு முன்னர் இவ்வாசிரியர் குறிப்பிட்டுள்ளார். பின் வந்த கலையாசிரியர் பலரும் இம் முடிவு தக்க ஆதாரங் களைக் கொண்டு நிறுவப்பட்டதா என்று ஆராயாமலே துப் ராய் குறிப்பிட்டதையே முடிந்த முடிவாகக்கொண்டு தாமும் தத்தம் நூல்களில் ஆளத் தொடங்கினர்.

'இந்தியக் கட்டிடக் கலை' என்ற சிறந்த நூலை வெளியிட்ட பெர்ஸி பிரவுன் (Percy Brown) என்பாரும் தமிழ்நாட்டிலுள்ள கோபுரங்கள் பாண்டியர்களால் கட்டப்பட்டவை என்றும் சிதம்பரம் நடராசர் கோயிலின் கீழைக் கோபுரத்தில் சுந்தர பாண்டியன் கல்வெட்டு உள்ளதால் அதுவும் அதனைப் போன்ற ஏனைய கோபுரங்களும் அவன் காலத்திலேயே கட்டப் பட்டனவாதல் வேண்டும் என்று உறுதியாகக் கூறலாம் என்றும் துப்ராய் கருத்தையே பின் பற்றி எழுதியுள்ளார்.

லூயி பிரடரிக்கு (Louis Frederic) என்பார் 'இந்தியக் கோயில் களும் சிற்பங்களும்' என்ற தலைப்பில் தாம் வெளியிட்டுள்ள கலை நூலை அழகான பல விளக்கப்படங்களால் சிறப்பித்துள் ளார். அவரும் சிதம்பரம் நடராசர் கோயிலின் கீழைக் கோபு ரத்தைப் பாண்டியர் கலைச் சின்னமாகக் கருதி அக்காலக் கோபுரத்துக்கு இதை ஓர் எடுத்துக்காட்டாகக் கொள்ள வேண்டும் என்று ஓரிடத்தில் குறிப்பிட்டுவிட்டு மற்றோரிடத் தில் சிதம்பரம் கீழைக் கோபுரம் சோழ மன்னனான இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் (கி. பி. 1130) தொடங்கப்பட்டது என முன்னுக்குப் பின் முரணாகக் குறிப்பிட்டுள்ளார்.

கிரேவ்லி (Gravely), சிவராமமூர்த்தி (C. Sivaramamurthi) என்ற கலையாசிரியர் இருவரும் சென்னைப் பொருட்காட்சி சாலையிலுள்ள சிற்பம் முதலிய கலைப் பொருள்களின் அருமை பெருமைகளை விளக்குவதற்கு நன்கு பயன்தரும் வகையில் துணை நூல் ஒன்று வரைந்துள்ளனர். இவ்வாசிரியர்கள் கி. பி. 850-1100 என்ற பகுதியைச் சோழர் காலம் எனவும், மற்றவர்

கள் பாண்டியர் காலம் என்று குறிப்பிட்ட கி. பி. 1100-1350 என்ற பகுதியைப் பிந்திய சோழர் காலம் எனவும் வகுத்தனர்.

சென்னைப் பல்கலைக்கழகத்தின் சார்பில் பேராசிரியர் நீலகண்ட சாத்திரியார் தாம் வரைந்து வெளியிட்ட 'சோழர் வரலாறு' என்ற அரிய நூலின் இரண்டாம் பதிப்பில் சோழர் கலையைப்பற்றி ஒரு புதுப் பகுதியைச் சேர்த்துள்ளார். சோழர் கலையைப் பற்றியதொரு சுருக்கமான வரலாற்றை இதன் கண் காணலாம். அவர் பிந்திய சோழர் காலம் கி. பி. 1070 முதல் 1250 வரை நீடித்திருக்கலாம், சோழர் கலைப் பாணி மறைவதற்குள்ளேயே பாண்டியர் கலைத் தொடர்பு ஏற்பட்டுவிட்டது, ஆதலின் பிந்தியச் சோழர் காலத்தனவாகிய சிதம்பரம், திருவண்ணுமலை, ஜம்புகேசுவரம் ஆகிய பாண்டியர் கோபுரங்களில் பாண்டியர் கலைப்பாணி சோழர் கலைமீது ஊடுருவிப் பாய்ந்து மேற் பரவலாக நின்றுள்ளது என்று கூறலாம் எனக் குறிப்பிட்டுள்ளார்.

பம்பாய் பாரதிய வித்யாபவனம் வெளியிட்டுள்ள 'இந்திய மக்களின் சரித்திரமும் கலாசாரமும்' என்ற நூலிலும் இதே கருத்தே காணக் கிடக்கிறது.

சுருங்கக் கூறின், கலையாசிரியர் பலரும் சோழ நாட்டில் சில கோபுரங்கள் பாண்டிய மன்னரால் 13--ஆம் நூற்றுண்டில் கட்டப்பட்டன, இப்பாண்டியர் கலைப்பாணியின் அம்சங்களைச் சிதம்பரம், கும்பகோணம், திருவண்ணுமலை, ஜம்புகேசுவரம் ஆகிய ஊர்களில் காணலாம் என்ற கருத்துடையவராக உள்ளனர். அவர்கள் கொண்ட கருத்துக்குரிய ஆதாரங்களை ஆராய வேண்டுவது அவசியமாகிறது.

## பாண்டியர் கலை

பாண்டியர்கள் பேரரசுப் பதவியைப் பெற்றுப் புகழுடன் திகழ்ந்தனர். அவர்கள் தங்கள் நீண்ட ஆட்சிக் காலத்தில் இருதடவை பரம்பரையான தங்கள் நாட்டு எல்லையைக் கடந்தும் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்தினர். இப்பாண்டியப் பேரரசை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

முதற் பிரிவு பாண்டியன் கடுங்கோன் காலம் முதல் இரண்டாம் இராசசிம்மன் காலம் வரை (கி.பி. 550-900) உள்ள

அரசர்களைக் கொண்டது. இவ்வம்சத்து இறுதி அரசனான இராசசிம்மனைச் சோழ பராந்தகன் வென்று பாண்டிய நாட்டைச் சோழப் பெருநாட்டுடன் இணைத்தான். இவ்வெற்றியின் அறிகுறியாகப் பராந்தகன் **மதுரை கொண்ட கோபரகேசரி** என்ற பட்டம் புனைந்தான்.

இரண்டாம் பிரிவு மாறவர்மன் சுந்தரபாண்டியனை முதல்வனாகக் கொண்டது. கி. பி. 1216—இல் அரியணையேறிய இம் மன்னன் சோழநாட்டை வென்று சோழர் தலைநகர்களில் ஒன்றான ஆயிரத்தளியில் வீராபிஷேகம் செய்து கொண்டு தெய்வப் புலியூரிலுள்ள பொன்னம்பலநாதனைச் சேவித்து விட்டு மதுரை மீண்டான். இவ்வம்சத்து வழித்தோன்றலான சடையவர்மன் சுந்தரபாண்டியன் கி. பி. 1251—இல் அரியணையேறினான். இவன் காலத்தில் சோழப் பேரரசு சீர்குலைந்து சிறிது சிறிதாக அழிந்துவிட்டது. பாண்டியப் பேரரசு குமரியிலிருந்து நெல்லூர் வரை பரவியது. இவன் **'எம்மண்டலமும் கொண்டருளிய சுந்தரபாண்டியன்'** என்று போற்றப்பட்டான். இப்பாண்டியப் பேரரசு முஸ்லிம்களின் படையெடுப்பால் சீர்குலைந்தது.

பாண்டியர் கலை தனிச்சிறப்புடன் பாண்டிய நாட்டில் வளர்ந்து வந்தது. பாண்டிய நாட்டில் **பிராமி** லிபியில் வரையப்பட்ட கல்வெட்டுக்களோடு கூடிய பாறைப் படுக்கைகளும் குடபோகங்களும் மலைதளிகளும் ஆக்கப்பட்டன. பாண்டியர் கலையின் பாணியையும் விரிவையும் தனிப்பட்ட வகையில் ஆராய்ந்து விளக்குவதே ஏற்புடையது. ஆனால் **சோழ நாட்டில் பாண்டியர் கலைப்பாணி** நிலவியிருந்தது என்பதை விளக்கத் தக்க சான்றுகள் இல்லை என்பது உணரத்தக்கது.

சடையவர்மன் சுந்தர பாண்டியன் சோழ பல்லவ நாடுகளிலுள்ள கோயில்களுக்குச் செய்துள்ள தொண்டுகளைப் பாண்டியர் கலைப் பாணி என்று கருதாமல் சோழரது கலையின் இயல்பில் ஏற்பட்ட வளர்ச்சி என்றே கொள்ள வேண்டும். சுந்தர பாண்டியன் திருவரங்கம், சிதம்பரம், காஞ்சி என்ற ஊர்களில் திருப்பணிகள் பல செய்துள்ளான். பொன்னும் முத்தும் சொரிந்து துலாபாரம் செய்து அப்பொருளைக் கொண்டு தில்லை மன்றத்தைப் பொன் வேய்ந்தான். திருவரங்கப் பெருங்கோயிலுக்குப் பல தானங்களும் திருப்பணிகளும்

செய்தான். மூலத்தானத்தின் கூரைக்கும் திருச்சுற்றுமாளிகைக்கும் பொன்வேய்ந்தான். திருவரங்கப் பெருமானுக்கு மரகதமாலை, நவரத்னக் கற்கள் இழைக்கப் பட்ட பொற்கிரீடம், முத்து மேற்கட்டி, பொன்னால் வார்க்கப் பட்ட அரங்கத்தம்மான், ஆதிசேடன், கருடன் என்பவர் சிலைகள், பொன் தோரணம், பொற்றேர், பொற் சிங்காதனம் முதலியவற்றை வழங்கினான். நரசிம்ம மூர்த்திக்கும் விஷ்வக் சேனருக்கும் சிறு கோயில்கள் எடுக்கப்பட்டன. இக்கொடை களின் விவரத்தை இம்மன்னனுடைய திருவரங்கக்கல்வெட்டு விரிவாகக் கூறுகிறது.

காட்டுமன்னார்குடி என்ற ஊர் முதல் பராந்தகச்சோழ னால் புதிதாக நிர்மாணிக்கப்பட்ட ஊராகும். இவன் அவ்வூ ருக்கு வீர நாராயண சதுர்வேதி மங்கலம் என்று பெயரிட்டு, அதன் அருகே வீர நாராயணன் ஏரியை அமைத்து அவ்வூரில் விஷ்ணு கோயிலும், சிவன் கோயிலும் (தற்போது உடையார் குடி என்னும் பகுதியிலுள்ளது)எடுப்பித்தான். காட்டுமன்னார் குடியில் பராந்தகன் அமைத்த விஷ்ணு ஆலயத்தைச் சடைய வர்மன் சுந்தரபாண்டியன் புதுப்பித்தான். நாம் அறிந்தவரை யில் பாண்டிய நாட்டு எல்லைக்கு அப்பாற்பட்ட இடத்தில் இப் பாண்டிய மன்னனால் கட்டப்பட்ட கோயில் இஃது ஒன்றே யாம். இந்த ஒரே கோயிலின் அமைப்பையும், அக்காலத்தில் கட்டப்பட்ட வேறு சில கோபுரங்களின் அமைப்பையும் மனத் திற் கொண்டு சோழநாட்டில் பாண்டியர் கலைப் பாணி வழங் கியதாகக் கூறுவது பொருந்துவதாக இல்லை.

மேலும் சிதம்பரம் நடராசர் கோயிலின் கீழைக் கோபுரம் சுந்தர பாண்டியனால் கட்டப்பட்டது என்ற கூற்றின் உண்மையையும் சற்று நோக்குவோம். இக்கோபுர வாயிலின் உட்புறத்தில் சுந்தர பாண்டியன் துலாபாரம் செய்த பாக்கள் "வாழ்க கோயில் பொன் வேய்ந்த மகீபதி......கனகத்துலை யுடன் முத்தத்துலையில் கலந்ததுவே" காணப்படுகின்றன.

சுந்தரபாண்டியன் துலாபாரம் செய்ததை வருணிக்கும் கல்வெட்டுக்கள் கீழைக் கோபுரத்தில் பொறிக்கப்பட்டிருப்பத னாலேயே இக்கோபுரத்தை இம மன்னன் கட்டினான் என்று முடிவு செய்வது ஆதாரமற்றதாகும், பழைய விமானத் திலோ, திருச்சுற்று மாளிகைகளிலோ, கோபுர வாயில்களிலோ

பிற்கால மன்னர்கள் தம் மெய்க்கீர்த்திகளேயோ தானங்களேயோ விவரிக்கும் கல்வெட்டுக்களேப் பொறிக்கும் முறை தென்னுட்டின் பண்டைய மரபாகும். தென்னிந்தியக் கோயில்களில் காணப்படும் ஆயிரக்கணக்கான கல்வெட்டுக்களில் கோயில் பிரதிட்டையை(அடிக்கல் நடுதலைக்)குறிக்கும் தன்மையன மிகச் சிலவே. உதாரணமாக ஒன்று நோக்குவோம். சிதம்பரம் நடராசர் கோயிலில் தற்காலத்திலுள்ள முதல் பிராகாரத்தைத் தழுவியுள்ள திருச்சுற்று மாளிகை முதல் குலோத்துங்கன் காலத்தில் கட்டப்பட்டது. இதன் பெயர் குலோத்துங்க சோழன் திருமாளிகை என்பது அத்திருமாளிகைக் கல்வெட்டுக்களிலிருந்து பெறப்படுவதாகும். அதே சுவரில் பிற்பட்ட சோழ மன்னர்கள், பிற்பட்ட பல்லவ மன்னனுன கோப்பெருஞ்சிங்கன், பிற்பட்ட பாண்டிய, விஜயநகர மன்னர்கள் ஆகியோருடைய கல்வெட்டுக்கள் பலவும் பொறிக்கப்பட்டுள்ளன. எனவே, கல்வெட்டுக்களே மட்டும் கொண்டு ஒரு கோயில் இன்னுரால் கட்டப்பட்டது என்று வரையறுத்தல் இயலாது. கல்வெட்டுக்கள், இலக்கியங்கள், கலையின் பாணி முதலிய பலவற்றைக் கொண்டே கோயில் எடுப்பிக்கப்பட்ட காலத்தை வரையறுக்க வேண்டும்.

நடராசர் கோயிலின் மூன்றும் பிராகாரத்தை வளைத்துக் கட்டப்பட்டுள்ள மூன்றும் திருச்சுற்று மாளிகையின் ஒவ்வொரு திசையின் நடுவிலும் ஒவ்வோர் எழுநிலைக் கோபுரம் காட்சியளிக்கிறது. கீழைக் கோபுரமும் இந்த மூன்றும் திருச்சுற்று மாளிகையில்தான் உள்ளது. இக் கீழைக் கோபுரத்தைத் தான் துப்ராய் சுந்தரபாண்டியன் கட்டிய கோபுரம் என்று குறிப்பிட்டுள்ளார். இம் மூன்றும் திருச்சுற்று மாளிகையின் வேலை விக்கிரம சோழன் (கி.பி. 1118—1135) காலத்தில் தொடங்கப்பட்டு மூன்றும் குலோத்துங்கன் காலம் வரை (கி.பி. 1178—1216) தொடர்ந்து நடைபெற்றிருக்க வேண்டும்; முடிவில் இம் மூன்றும் திருச்சுற்று மாளிகை மூன்றும் குலோத்துங்கனின் விருதுப்பெயரால் இராசாக்கள் தம்பிரான் திருமாளிகை என்று வழங்கப்படுவதாயிற்று. இப் பிற்பட்ட சோழர்கள் காலத்தில்தான் நூற்றுக்கால் மண்டபம், திருக்காமக் கோட்டம் என்று வழங்கப்படும் சிவகாமியம்மன் கோயில், ஆயிரக்கால் மண்டபம் முதலிய கட்டிடத் திருப்பணிகள் தில்லையில் நிகழ்வுற்றன.

விக்கிரம சோழனுடைய மெய்க்கீர்த்தி, அவன் தன் குறு நில மன்னர்கள் சுமந்து கொணர்ந்து திறையாகச் சொரிந்த செம்பொற் குவையால் தம் குலநாயகன் தாண்டவம் பயிலும் செம்பொன் அம்பலமும், சூழ்திரு மாளிகையும், கோபுரவாசல், கூடசாலைகளும், பலிபீடமும் செம்பொன் வேய்ந்தான், அத னுல் இமையவர் களிக்கவே இருநிலம் தழைத்தது என்று குறிப்பிடுகிறது. இதில் கூறப்பட்டுள்ள கோபுர வாசல் இம் மூன்ரும் திருச்சுற்றிலுள்ள மேலைக்கோபுரமாகும் என்று கருது கிறேன்.

இந்த மேலைக்கோபுரம் தனிச் சிறப்புடையது. இதன் வாயில் பாகம் இரண்டு அடுக்குகளை உடையது. இவ்விரண்டு அடுக்குகளிலும் வெளிப்புறத்தில் அழகிய சிலைகளைக்கொண்ட கோஷ்டங்கள் இருக்கின்றன. இவ்விரண்டு அடுக்குகளின் கட்டிடக் கற்களின் தன்மையும், சிற்ப முறைகளும் வெவ் வேருனவை. கீழ் அடுக்கில் கிரந்தலிபியில் ஒவ்வொரு சிற்பத் திற்கும் பெயர் தீட்டப்பட்டுள்ளது. இம் முறை இக் கோபுரத் திற்கமைந்த தனிச் சிறப்பாகும். தில்லையிலுள்ள நான்கு எழு நிலைக் கோபுரங்களிலும் இதுவே பழம் பகுதி என்று தோன்று கிறது. இம் மேலைக் கோபுரத்தை விக்கிரம சோழன் தொடங்க அவன் மகன் இரண்டாம் குலோத்துங்கன் கட்டி முடித்திருக்க வேண்டும். இதே திருச்சுற்றிலுள்ள வட்க்கு, கிழக்கு கோபு ரங்களின் திருவாயிற் பகுதிகள் மாத்திரம் இரண்டாம் குலோத்துங்கன் காலத்திலேயே கட்டப்பட்டிருத்தல் வேண்டும்.

சேக்கிழாரைக் கொண்டு பெரியபுராணம் பாடுவித்த பெருமையை உடைய அநபாயச் சோழனே இரண்டாம் குலோத்துங்கனுவான். ஒட்டக்கூத்தர் அவனைப்பற்றிப் பாடிய உலா குலோத்துங்கச் சோழனுலா எனப்படும். அவ்வுலாவில் குலோத்துங்கன் 'சூலத்தான், ஆடும் திருப்பேரம்பலமும் கோபுரமும், மாடம் பரந்தோங்கு மாளிகையும்......தலங்கொள் நிலையேழு கோபுரங்கள் நேரே, மலையேழுமென்ன' வகுத்தான் என்று பாராட்டப்பட்டுள்ளான்.

இவற்ருல் இக் கோபுரங்களின் வாயில்கள் பன்னிரண்டாம் நூற்ருண்டிலேயே பிற்காலச் சோழர்களால் எடுக்கப்பட்டமை உணரப்படும். கருங்கல்லால் ஆகிய இரண்டு அடுக்குகளை

உடைய வடகோபுரத் தலைவாயிலுக்கு மேலுள்ள நிலைகளை விசயநகர மன்னர்களான கிருஷ்ண தேவராயரும் அச்சுத தேவராயரும் கட்டினர் என்பதனைத் தெரிவிக்கும் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. இரண்டாம் குலோத்துங்கன் கட்டிய கீழைக் கோபுரத் தலைவாயிலுக்கு மேலுள்ள நிலைகளைப் பிற்பட்ட காலப் பல்லவ மன்னனான கோப்பெருஞ்சிங்கன் (கி.பி. 1243—1279) நாற்றிசைகளையும் வென்று பெற்ற திறைப் பொருள்களால் வனப்புற எடுப்பித்தான் என்று அவனுடைய திரிபுராந்தகக் கல்வெட்டு வருணிக்கிறது. இக் கீழைக் கோபுரமே 19—ஆம் நூற்றாண்டில் தருமசீலரான பச்சையப்ப முதலியாரின் மாமியாரால் புதுப்பிக்கப்பட்டது.

சிதம்பரத் தெற்குக் கோபுர வாயிலுக்கு மேலுள்ள எழுநிலை மாடமும் கோப்பெருஞ்சிங்கனால் கட்டப்பட்டது என்ற செய்தி இப் பல்லவ மன்னன் தன் ஆட்சி ஐந்தாம் ஆண்டில் திருச்சிற்றம்பலமுடைய நாயனார் கோயில் தெற்குத் திருவாசல் **சொக்கச்சீயன் திருஎழுநிலைக் கோபுரமாகச்** செய்யத் திருப்பணிக்கு உடலாகச் செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள ஆற்றூர்க் கிராமத்தில் மூந்நூற்றொன்றே முக்கால் வேலி நிலத்தைத் தேவதான இறையிலியாக அளித்தான் என்று ஆற்றூர்க் கல்வெட்டு கூறுவதால் புலனாகிறது.

மேற்கூறப்பட்ட கல்வெட்டுச் சான்றுகளால் தில்லைக் கீழைக்கோபுரம் சுந்தரபாண்டியன் கோபுரம் என்றும் பாண்டியர் கலைப்பாணியின் அம்சங்களை இக் கோபுரத்தில் காணலாம் என்றும் கூறுவது பொருத்தமற்றது என்பது உறுதியாகிறது.

பிற்பட்ட சோழர் காலத்தில் சோழநாட்டில் பாண்டியர் கலைப்பாணி பரவியதெனின் அக்கால்த்தைய சோணாட்டுக் கலைப்பாணி யாது? இங்கு இல்லாத புதிய பாண்டியர் கலைப் பாணியின் தனி அமிசங்கள் யாவை? அவை எவ்வாறு சோணாட்டில் நிலைபெற்றன? என்பன போன்ற வினாக்களுக்குத் தக்க சான்றுடன் விளக்க விடை தரல்வேண்டும்.

கும்ப பஞ்சரம், கூடு, போதிகை முதலியன பாண்டியர் கலைப்பாணியின் அமிசங்கள் என்று கூறுவது பொருந்தாது. அவை சோழர் கலைப் பாணியில் காலப்போக்கில் விரிவடைந்த பகுதிகள் என்றே கொள்ளத்தகும்.

திருவானைக்காவிலுள்ள ஜம்புகேசுவரம் கோயிலின் மேற்கே மொட்டைக் கோபுரத்தை அடுத்துள்ள கோபுரம் தில்லையின் கீழைக் கோபுரத்தை ஒத்தது. இதுவும் பிற்பட்ட சோழர் காலத்தில் கட்டப்பட்டதாகும். பிற்காலத்தில் சோழ நாட்டை வென்ற பாண்டிய மன்னன் தன் வெற்றிக்கு அறிகுறியாகத் தன் குலச் சின்னமான கயல் மீன்களைக் கோபுரத்தில் பொறித்திருக்க வேண்டும். கோபுரத்திருவாயிலின் தலைப்பக்கத்திலுள்ள சரத்தில் கயல் மீன்கள் பொறிக்கப்பட்டமை ஒன்றை மட்டும் கொண்டு அக் கோபுரம் பாண்டியர் கலைப் பாணியில் அமைந்தது என்றும் அது தில்லைக் கீழைக் கோபுரத்தை ஒப்பப் பாண்டியர் கலைப் பாணிக்கு ஓர் எடுத்துக் காட்டு எனவும் துப்ராய் கூறுவதும் பொருத்தமற்ற கூற்றுகவே முடிகிறது.

எனவே, பிற்பட்ட சோழர் காலத்து இயற்கையான கலையின் வளர்ச்சியைச் சோழர் கலைப் பாணியை ஊடுருவிப் பரவிய பாண்டியர் கலைப்பாணி என்று பண்டைய ஆராய்ச்சியாளர் பலரும் பிற்காலத்தவரும் கூறும் செய்தி இலக்கிய, கல்வெட்டுச் சான்றுகளுக்கு முரணுக அமையும் ஆதாரமற்ற செய்தி என்பது உணரத் தக்கதாகும்.

## அத்தியாயம் 5

# சோழர்—முந்திய காலம்
# பரகேசரி விசயாலயன்

சங்க காலத்திற்குப்பின் சோழ மன்னர்கள் தலைமறைவாகவே இருந்தனர். சோழரின் பழைய தலைநகரான உறையூரிலோ கும்பகோணத்திற்கு அருகிலுள்ள பழையாறையிலோ இக்குலத்தவர் வாழ்ந்து வந்தனர் என்று உறுதியாகக் கூற இயலவில்லை. பிற்காலத்தில் தஞ்சையில் சோழ வம்சத்தை மீண்டும் நிலைநிறுத்தியவன் பரகேசரிவர்மனான விசயாலயன் ஆவான்.

பிற்பட்ட பல்லவர் ஆட்சியில் நியமம் (நேமம்) என்ற ஆயிரத்தளியில் முத்தரையர் என்ற குறுநிலமன்னர் ஆட்சி புரிந்து வந்தனர். இவர்களைப் பற்றிய சில குறிப்புக்களைச் செந்தலைக் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. தற்போது செந்தலையிலுள்ள சுந்தரேசுவரர் கோயிலின் முன்பகுதியிலுள்ளதொரு மண்டபம் பண்டு செந்தலையிலிருந்த பிடாரி கோயிலின் தூண்களை நிறுத்திக் கட்டப்பட்டுள்ளது. இத்தூண்களிலுள்ள கல்வெட்டுக்களின் மூலம் இப்பகுதியை ஆண்ட முத்தரையர்களின் மூன்று தலைமுறைத் தலைவர்களைப் பற்றி அறியும் வாய்ப்பு கிடைத்துள்ளது. முதலாமவன் மூத்தபெரும் பிடுகு முத்தரையனான குவாவன் மாறனாவான். அடுத்தவன் அவன் மகன் இளங்கோவடியரையனான மாறன் பரமேசுவரன் ஆவான். மூன்றாமவன் பரமேசுவரனுடைய மகனான பெரும்பிடுகு முத்தரையனான சுவரன் மாறன் ஆவான். இத்தூண்களில் உள்ள கல்வெட்டுக்கள் இம்மன்னன் நியமத்தில் ஒரு பிடாரிகோயில் எடுப்பித்த செய்தியையும், இவன் எறிந்த ஊர்களையும், இவன் பெற்ற விருதுகளையும், இவனைப்பாடியவர்களுடைய பெயர்களையும் குறிப்பிடுகின்றன. இச்சுவரன் மாறன் பல்லவ மன்னனான இரண்டாம் நந்திவர்மனின் சிற்ற

ரசன் ஆவான். இம் முத்தரையர்கள் நியமத்தைத் தலைநக ராகக்கொண்டு தஞ்சையையும் வல்லத்தையும் பல்லவர் களுடைய குறுநில மன்னர்களாக ஆட்சி செய்து வந்தனர்.

இவர்களுடைய மற்றொரு வழித் தோன்றலான கோவி ளங்கோ முத்தரையனைப் பற்றிய சில கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. இவனுடைய 18-ஆம் ஆண்டுக்கல்வெட்டு நியமத்திலும், 13-ஆம் ஆண்டுக் கல்வெட்டும் 17-ஆம் ஆண்டுக் கல்வெட்டும் திருக்கோடிக்காவலிலும், 13-ஆம் ஆண்டுக் கல்வெட்டு மற்றொன்று கோவிலடியிலும் காணப் படுகின்றன. முத்தரையர் வழித் தோன்றலான இவ்விளங்கோ முத்தரையனே பல்லவர் அழிவுக் காலத்தில் தலையெடுத்துச் சுய ஆட்சி நடத்தி வாழ்ந்து வந்தவன் ஆவான். இவனை வென்று பரகேசரிவர்மனான விசயாலயன் சோழ வமிசத்துக் குப் புத்துயிர் அளித்தான்.

திருச்சி மாவட்டத்துத் திருவெள்ளறையில் எழுந்தருளி யிருக்கும் திருமாணிக்கப் பெருமான் அடிகளுக்கு ஒரு நிலத் தைத் தன் ஆட்சி 3-ஆவது ஆண்டில் தானம் செய்தவனாகக் கூறப்படும் பரகேசரிவர்மன் விசயாலயனாக இருக்கலாம் என்று கருதுகிறோம் (51—1910).

தென்னார்க்காட்டு மாவட்டத்துச் சோழபுரத்தில் நிரை மீட்சியில் பொருதுபட்ட வீரனைப் பற்றிய வீரக்கல் ஒன்று தஞ்சை கொண்ட கோபரகேசரியின் மூன்றாம் ஆண்டைச் சேர்ந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பரகேசரி விசயா லயனே யாவான் (51-1935-36).

திருக்கோவலூருக்கு அருகிலுள்ள கீழூரில் பரகேசரிவர் மனின் ஐந்தாம் ஆண்டில் வாண கோவரையர் தேவியார் நங்கை குலமாணிக்கத்தார் 15 கழஞ்சு பொன்னுக்கு விளக்குத் தானம் செய்வித்ததாக அறிகிறோம். இக்கல்வெட்டுப் பகுதியை நோக்கத் திருக்கோவலூரைச் சார்ந்த பகுதி தாற்காலிகமாகவாவது விசயாலயன் ஆளுகைக்கு உட்பட் டிருக்க வேண்டும் என்பது உணரப்படுகிறது.

உத்தரமேரூரில் உள்ள வைகுந்தப் பெருமாள் கோயிலில் கிடைத்துள்ள பரகேசரியின் 14, 15, 16-ஆம் ஆண்டுக்கல் வெட்டுக்கள் விசயாலயன் காலத்தனவே(4, 14, 34, 35—1898).

காஞ்சியிலுள்ள கைலாசநாதர் கோயிலிலும் விசயாலயனின் நான்காம் ஆண்டுக் கல்வெட்டு காணப்படுகிறது **(S.I.I.; I, No-85).**

சென்னைக் கண்காட்சி சாலையிலுள்ள உத்தமசோழன் காலத்தனவாகிய செப்பேடுகள் மூன்று கொடைகளைக் குறிக்கின்றன. கால வரிசைப்படி அவை பரகேசரிவர்மனின் 22-ஆம் ஆண்டு, விசயகம்ப வர்மனின் 9-ஆம் ஆண்டு, மதுரையும் ஈழமும் கொண்ட பரகேசரிவர்மனின் 18-ஆம் ஆண்டு என்பன. இம்மூன்று கொடைகளில் முதலாவது விசயாலயன் காலத்ததாகும்.

இக்கல்வெட்டுக்களை நோக்கவே, விசயாலயன் காலத்தில் சோழநாடு வடக்கே காஞ்சி முதல் தெற்கே விசயாலய சோளீசுவரம் எடுப்பிக்கப்பட்டுள்ள நார்த்தாமலை வரை பரவியிருக்கவேண்டும் என்ற செய்தி அறியக்கிடக்கிறது. தொண்டைமண்டலம் முதற் பராந்தகன் ஆட்சியில்தான் சோழருடைய நிரந்தர ஆளுகைக்கு உட்பட்டது என்பதும் உணரத்தக்கது.

## தஞ்சை—நிசும்பசூதனிக் கோயில்

விசயாலயன் தஞ்சையையும் வல்லத்தையும் வென்ற பிறகு தஞ்சையைத் தலைநகராக நிறுவினான். தன் புதிய தலைநகரில் நிசும்பசூதனி என்ற துர்க்கைக் கோயிலை விசயாலயன் கட்டிய செய்தி திருவாலங்காட்டுச் செப்பேடுகளால் அறியக் கிடைக்கிறது. இக்கோயில் தஞ்சையின் பழைய சோழர் காலத்துக் கோட்டையின் கீழைவாசலில் நிறுவப்பட்டிருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது.

இரண்டு துண்டாக உடைந்துள்ள, ஒன்பதாம் நூற்றாண்டு கலைப்பாணியைக் கொண்ட, பெண் தெய்வத்தின் கற்சிலையொன்று தஞ்சைக் குயவர் தெருவிலிருந்து கிடைத்துள்ளது. பீடத்தின்மேல் அமர்ந்ததாக அமைக்கப்பட்ட இச்சிலையின் வலக்கால் மடங்கி ஆசனத்தின்மீது அமர்ந்திருக்க, இடக்கால் தொங்கிய வண்ணமாக உள்ளது. கையில் கத்தியும் கேடயமும் உள்ளன. மேல் பாகத்திலுள்ள வலக்கையில் ஏந்திய சூலத்தைக்கொண்டு காலடியில் இருக்கும் அரக்கனைக் குத்தித் தள்ளுவது போலமைந்த இச்சிலை பாம்பினாலாகிய

குசபந்தமும் சடைமுடியும் பெற்று விளங்குகிறது. உக்கிர மாகாளி என்று தற்போது கூறப்படும் இச்சிலை விசயாலயன் காலத்து நிசும்பசூதனி என்ற துர்க்கையே என ஐயுறக் கிடக்கிறது.

தஞ்சை நிசும்பசூதனிக் கோயிலைத்தவிர நார்த்தாமலை யிலுள்ள விசயாலய சோளீசுவரம், காளியாபட்டியிலுள்ள சிவன் கோயில், பனங்குடியிலுள்ள அகத்தீசுவரம் என்ற பரமேசுவரர் ஆலயம், விராலியூரிலுள்ள பூமீசுவரர் ஆலயம், விசலூரிலுள்ள மார்க்கசகாயேசுவரம், திருப்பூரில் உள்ள சிவன் கோயில், ஏனாதியிலுள்ள சிவன் கோயில் என்பன விச யாலயன் காலத்தைச் சார்ந்த முக்கியமான கோயில்களாம்.

## நார்த்தாமலை—விசயாலய சோளீசுவரம்

முற்பட்ட சோழர் காலக் கோயில்களுக்குள் பலவகை யாலும் தலைசிறந்தது நார்த்தாமலையிலுள்ள விசயாலய சோளீசுவரம் என்பது.

நார்த்தாமலை என்பது நகரத்தார்மலை என்பதன் திரிபு எனலாம். இது புதுக்கோட்டை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர் ஆகும். திருச்சியிலிருந்து மானாமதுரை செல்லும் இருப்புப்பாதையில் நார்த்தாமலைப் புகைவண்டி நிலையத் திலிருந்து ஊர் 4 கிலோ மீட்டர் தூரத்திலுள்ளது. இவ்வூர் எட்டுக் குன்றுகளால் சூழப்பட்டு உள்ளது. இக்குன்றுகளில் ஒன்றாகிய மேலைமலையில் கிழக்கு நோக்கி இரண்டு குடபோகக் கோயில்களும் அவைகளுக்கு எதிரே ஒரு கட்டுக் கோயிலும் உள்ளன. வலப்பக்கத்திலுள்ள சமணக்குடகு என்ற குட போகக் கோயில் பிற்காலத்தில் வைணவக் கோயிலாக மாறவே அதன் அர்த்த மண்டபத்தில் திருமாலின் பன்னிரண்டு உரு வங்கள் மிக்க சிற்பத்திறனுடன் செதுக்கப்பட்டுள்ளன.

இதற்குத் தெற்கிலுள்ள குடபோகக் கோயில் பழியிலி ஈசுவரம் என்ற சிவன் கோயிலாகும். இக்கோயிலின் முன் புறமாக உள்ள முகமண்டபத்தின் குமுதப்படையில் பல்லவர் கல்வெட்டொன்று உள்ளது. இக் கல்வெட்டு நிருபதுங்க பல்லவ மன்னனுடைய ஏழாவது ஆட்சியாண்டில் விடேல் விடுகு முத்தரையன் மகன் சாத்தன்பழியிலி என்பான் இக் கோயிலைக் குடைவித்தான் என்றும், இக்கோயிலின் முக

மண்டபம், இஷபம், இஷபக்கொட்டில், பலிபீடம் ஆகிய வற்றைச் சாத்தன் பழியிலியின் மகளும் மீனவன் தமிழ தரையனுன மல்லன் அனந்தனுக்குப்புக்கவளுமான பழியிலி சிறிய நங்கை செய்வித்தாள் என்று குறிப்பிடுகிறது.

இவ்விரு குகைக் கோயில்களின் அடிவாரத்திற்குக் கிழக்கேயுள்ள கட்டுக் கோயிலில் கருவறையும் அர்த்த மண்டபமும் கூடிய ஒரு கற்றளியும் இதைச் சுற்றிச்சிதைந்து காணப்படும் பரிவார தேவதைகளின் ஒரு தளத்தையுடைய ஆறு சிறிய கற்றளிகளும் உள்ளன. இத்தளிகளின் வட பாகத்திற்கு எதிராகவும் சமணக் குடபோகத்திற்கு அடுத்தாற் போலவும் கோமாறவர்மனுன திரிபுவன சக்கரவர்த்திகள் சோணுடு வழங்கிய சுந்தரபாண்டிய தேவரின் 12-ஆம் (பதி ஞென்ருவதற்கு எதிராவது) ஆண்டுக் (கி. பி. 1228) கல் வெட்டு ஒன்று காணப்படுகிறது. அக்கல்வெட்டு இவ்வூரி லுள்ள **உடையார் விசயாலய சோளீசுவர முடைய நாயனுருக்கு** இவ்வூர் நகரத்தார் திருப்படிமாற்றுக்கும் திருவிழா நடப்பிக் கவும் திருநாளில் ஆளுடையாரை எழுந்தருளுவிக்கவும் திரு வீதிக் கூத்து நடத்திவைக்கவும் செய்த நிவந்தத்தைக் குறிப் பிடுகிறது. பதின்மூன்ரும் நூற்ருண்டைச் சேர்ந்த இக்கல் வெட்டு ஒன்பதாம் நூற்ருண்டு தொட்டே பரம்பரை பரம் பரையாக வழங்கிவரும் இக்கோயிலின் பெயரைக் குறிப்பிட் டுள்ளமை ஒன்றே இக்கோயிலே விசயாலய சோளீசுவரம் என்ற கோயிலாகும், ஏனைய இரண்டு குடபோகங்களும் விசயாலய சோளீசுவரம் ஆகா, என்பதை அறியத்தக்க சான்ருக அமைந்துள்ளது.

நடுவில் உள்ள பிரதானதளியும், சுற்றிலும் இருக்க வேண்டிய எட்டுப் பரிவாரக் கோயில்களில் சிதைந்த நிலையில் காணப்பட்ட ஆறு கோயில்களும், புதுக்கோட்டை அரசாங் கத்தாரால் சில ஆண்டுகளுக்கு முன் சீரிய முறையில் புதுப் பிக்கப்பட்டுள்ளன.

கோயில் மேற்குப்பார்த்த சந்நிதியை உடையது. ஓங்கார வடிவுடைய கருவறை நான்கு மூலைகளிலும் நான்கு தூண்கள் நிறுவப்பெற்ற 29 அடி சதுரமுடைய மண்டபத்திற்குள் அமைக்கப்பெற்று உருண்டை வடிவமுடைய இலிங்கம் பிரதிட்டை செய்யப் பெற்றுள்ளது. இது நாலு தளக்

கோயிலாகும். கருவறைக்கு மேலுள்ள இருதளங்கள் முகப்பில் சாலைகளாலும் கூடங்களாலும் இவற்றிற்கிடையே அழகிய சிலைகளைக் கொண்ட நாசிகை என்ற இடைவெளியாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளன. நான்காவது தளம் கருவறையின் அமைப்பைப் போலவே வட்டவடிவமானது. கிரீவம் (கழுத்து) எனப்படும் இதன் மேல் பாகத்தில் நாற்புறங்களிலும் தேவ கோஷ்டங்களும் விமான தேவதைகளும் திகழ்கின்றன. இச் சிலைகளில் சிதைவுறாமல் எஞ்சிய உமாசகிதர், வீணாதர தக்ஷிணா மூர்த்தி ஆகிய சிற்பங்கள் புதுக்கோட்டைக் கண்காட்சி சாலையில் காணப்படுகின்றன. சிகரம் வட்டவடிவமானது. இப்பொழுது காணப்படும் ஸ்தூபி பழைய ஸ்தூபியன்று.

கருவறையில் வெளிப்புறச் சுவர்களில் தேவகோஷ்டங்கள் இல்லை. வெளிப்புறச் சுவர்கள் அரைத் தூண்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளன. இவற்றின் போதிகைகள் 45° கோண வடிவுடையன. இப்போதிகைகள் பல்லவர் காலத்துப் போதிகைகளைப் போல நடுவில் பட்டையாகவும் இருபுறங்களிலும் சுருண்டு வருவனவாகவும் உள்ளன. மண்டபத்தைத் தாங்க மத்தியில் கற்றூண்கள் உள்ளன.

அர்த்த மண்டப வாயிலின் இருபுறங்களையும் ஐந்தடி உயரமுடைய துவார பாலகர் இருவர் அலங்கரிக்கின்றனர். சடாமகுடம், பத்திரகுண்டலம் (தோடு), கடிபந்தம், உதர பந்தம், முறுக்கேறின பூணூல், காப்புவளையம் இவற்றால் அலங்கரிக்கப்பட்டுத் தலைப்பாகத்தில் கொம்பு போன்ற வளைவு கொண்டு ஒரு கையில் கதையையும் மற்றொருகையில் வியப்பை விளக்கும் குறியையும் உடையவராகத் துவார பாலகர் இருவரும் காணப்படுகின்றனர். வடபக்கத்திலுள்ள துவார பாலகரின் அடியில் கிடைத்துள்ள கல்வெட்டு, செம்பூதியான இளங்கோவடி அரையன் எடுப்பித்த கற்றளி மழையிடியால் அழிந்துபோக மல்லன் விடுமன் ஆயின தென்னவன் தமிழதிரையன் கற்றளியைப் புதுக்குவித்த செய்தியைச் சுட்டுகிறது.

இக் கல்வெட்டில் கூறப்பட்டுள்ள இளங்கோவடி முத்தரையனும், செந்தலைக் (நேமம்) கல்வெட்டில் கூறப்பட்டுள்ள இரண்டாம் தலைமுறைத் தலைவனான மாறன் பரமேசுவரனும் ஒருவனையே குறிக்கும் சொற்களாகும் என்றும், இக்கோயில்

இரண்டாம் நந்திவர்மன் காலத்ததாகவே எட்டாம் நூற்ருண்டினதாக வேண்டும் என்றும், புதுப்பிக்கப்பட்ட கோயில்தான் விசயாலயன் காலத்தது என்றும் K. R. வேங்கடராமன் என்பார் குறிப்பிட்டுள்ளார். இரண்டாம் நந்திவர்மன் காலத்துக் கோயில்களுக்கு வைகுந்தப் பெருமாள் கோயில் ஓர் எடுத்துக்காட்டாகும். கட்டிடம், சிற்பம் இவற்றின் பாணியை நோக்க வைகுந்தப் பெருமாள் கோயிலும் விசயாலய சோளீசுவரமும் ஒரு காலத்தன அல்ல என்பதனைத் துணிந்து கூறலாம். நிருபதுங்கனின் 7-ஆம் ஆண்டில் (கி.பி. 862) நார்த்தா மலைப் பகுதி பல்லவர் வசமிருந்தது. கி. பி. 871-இல் விசயாலயன் மகன் ஆதித்த சோழன் முடி சூடினன். ஆகவே, விசயாலயன் காலம் கி. பி. 870 வரை நீடித்திருக்கலாம். எனவே கி. பி. 862-க்கும் 870-க்கும் இடைப்பட்ட காலத்தில் விசயாலய சோளீசுவரம் எடுப்பிக்கப்பட்டு, மழையால் இடியுறவே உடனடியாகவே புதுப்பிக்கப் பட்டிருக்கவேண்டும். முதலில் கட்டிய காலத்திற்கும் புதுப்பித்த காலத்திற்கும் இடையே நூற்றுக்கு மேற்பட்ட ஆண்டுகள் கழிந்திருக்க வேண்டும் என்று கொள்ளுவது ஏற்புடைத்தன்று.

எங்ஙனமாயினும், முற்பட்ட சோழர்காலக் கோயில்களில் விசயாலய சோளீசுவரம் ஒப்புயர்வற்று விளங்குகிறது என்பது வெளிப்படை.

## காளியாபட்டி சிவன் கோயில்

காளியாபட்டி என்ற சிற்றூர் புதுக்கோட்டை மாவட்டத்தில் குளத்தூர் தாலுக்காவில் கீரனூரிலிருந்து 16 கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது.

இது கிழக்கு நோக்கிய சந்நிதியை உடைய ஒருதளக் கோயிலாகும். ஸ்தூபியும் அர்த்த மண்டபமும் சிதைந்து போய்விட்டன. கருவறையும் கிரீவமும் சிகரமும் மட்டுமே எஞ்சியுள்ளன. கருவறை எட்டடி (2·44 மீ.) சதுர முடையது. சுவர் ஒன்றரையடி (0·46 மீ.) கனமுடையது. கருவறையின் வெளிப்புறச் சுவர்களில் வாயிற்புறம் தவிர மற்ற மூன்று பக்கங்களிலும் நாநான்கு அரைத்தூண்கள் உள்ளன. போதிகை முதலிய மேற்பாகங்கள் விசயாலய சோளீசுவரத்தை ஒத்திருக்கின்றன. இச் சுவர்களில் தேவ கோஷ்டங்கள் இல்லை.

கொடுங்கைகள் மிக அழகாகவும் கூடுகள் உடையனவாகவும் உள்ளன. கிரீவப் பகுதியில் நான்கு திக்குகளிலும் நான்கு கோஷ்டங்கள் உள்ளன. சிகரம் கும்பவளைவை உடையது; சதுரவடிவமானது. இச்சிகரம் மாமல்லபுரத்திலுள்ள துர்க்கை கோயில் சிகரத்தையும் கொடும்பாளூர் மூவர் கோயில் சிகரத்தையும் ஒத்திருக்கிறது.

கருவறையின் தென் சுவரில் ஒரு புதிய கல்வெட்டு கிடைத்தது. அது பரகேசரிவர்மனின் 18-ஆம் ஆண்டுக் கல்வெட்டாகும். அதன் லிபியின் பழைமையை நோக்க அது விசயாலயன் காலத்ததாகக் (கி. பி. 868) கருதப் படுவதால், இக்கோயில் விசயாலயன் காலத்தில் கட்டப்பட்ட ஒப்பற்ற எழில் வாய்ந்த அரிய ஒருதளக் கோயிலாகும் என்று உணரலாம்.

## பனங்குடி அகத்தீசுவரம் (பரமேசுவரர் கோயில்)

புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள சிற்றன்னவாசலுக்குத் தென் பாகத்தில் ஒரு குளக்கரையில் அமைந்துள்ள இவ்வொருதளக்கற்றளி விசயாலயன் காலத்தைச் சேர்ந்த மற்றொரு கோயிலாகும். இதுவும் கருவறை, அர்த்த மண்டபம், கிரீவம், சிகரம், ஸ்தூபி என்ற எல்லா உறுப்புக்களையும் உடைய கோயிலாகும். நந்தி மண்டபம், பரிவாரத் தேவதைகளின் கோயில்களில் ஒன்று, ஆகியவற்றின் அடிப்படை மட்டும் தற்போது காணப்படுகிறது.

இக்கோயிலின் கருவறை வெளிப்புறத்தில் 9 அடி (2·7 மீ.) சதுரம். உட்புறம் 5 அடி (1·5 மீ.) சதுரம். வெளிப்புறச் சுவர்கள் சித்திரவேலைப் பாடுடையன. இவை அரைத்தூண்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளன. தேவகோஷ்டங்கள் உள்ளன; ஆனால் அவற்றில் தற்போது சிலைகள் காணப்படவில்லை. கோயிலில் கூடுகளால் அலங்கரிக்கப்பட்ட கொடுங்கைகள், இவற்றின் கீழ்ப் பூதகணவரிசையும், மேல் யாளிவரிசையும் உள்ளன. யாளி வரிசையின் கோடியில் மகரங்கள் திகழ்கின்றன. கிரீவ பாகத்தில் நான்கு திக்குகளிலும் கூடுகளால் அலங்கரிக்கப்பட்ட கோஷ்டங்களில் இந்திரன், தக்ஷிணமூர்த்தி, விஷ்ணு, பிரமன் என்ற தெய்வங்களின் ஒன்றரையடி (0·46 மீ) உயரமுடைய சிறிய உருவங்கள் திகழ்கின்றன.

சிகரம் நடுவில் பிதுக்கம் கொண்ட சதுர வடிவினதாக உள்ளது.

ஜேஷ்டை, விநாயகர், நந்தி ஆகிய தெய்வங்களின் சிலைகள் தரைமீது காணப்பட்டன. முன்காலத்தில் பரிவார தெய்வங்களுக்குக் கோயில்கள் இருந்திருக்க வேண்டும் என்பது ஊகிக்கப்படுகிறது.

கருவறையின் வட சுவரில் பரகேசரிவர்மனின் பதினுன் காவது ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டொன்று புதியதாகக் கிடைத்துள்ளது. இக்கல்வெட்டு இக்கோயிலில் எழுந்தருளி யுள்ள தெய்வத்தின் பெயர் **'பனங்குடி பரமேசுவரன்'** என்று குறிப்பிடுகிறது. இதன் லிபியைக் கொண்டு இது விசயா லயன் காலத்தது என்று கூறலாம்.

எனவே, பனங்குடிக் கோயில் விசயாலயன் காலத்தில் கட்டப்பட்ட சிறந்த சிறுகற்றளிகளில் ஒன்று என்பது தேற்றம்.

## அத்தியாயம் 6

# ஆதித்த சோழன் (கி.பி. 871--907)

பரகேசரி விசயாலயனுக்குப் பிறகு அவன் மகன் இராச கேசரி ஆதித்தன் அரசனுனன். மேற்கே சகயாத்திரி மலை (மேலைமலைத்தொடர்) முதல் கிழக்கே கீழ்கடல்வரை காவிரியின் இருகரைகளிலும் எண்ணற்ற கோயில்களை ஆதித்தன் கட்டுவித்தான் என்று சுந்தர சோழன் காலத்து அன்பில் செப்பேடுகள் கூறுகின்றன. அப்பர் முதலிய நாயன்மார்களால் காவிரியின் இருகரைகளிலுள்ள ஏறத்தாழ 190 கோயில்கள் பாடப்பட்டுள்ள செய்தி அன்பில் செப்பேடு கூறும் செய்தியை வலியுறுத்தும். எனவே, ஆதித்தன் காலத்தில் மண்டளிகள் பல கற்றளிகளாக மாற்றியமைக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது.

உண்மை இங்ஙனமாகவும் கலையாசிரியர் ஒருவர் "சோழப் பேரரசைச் சேர்ந்த முதல் இரு மன்னர்களான விசயாலயனும் முதலாம் ஆதித்தனும் புதியனவாகத் தாம் வென்ற நாடுகளை அடக்கி அமைதி நிலவும்படிச் செய்வதிலேயே ஈடுபட்டிருந்ததால் கலைகளை வளர்க்கவோ போற்றவோ அவர்களுக்குப் போதிய அவகாசம் கிடைக்கவில்லை. அவ்வாறிருந்தும் அவர்கள் காலத்தனவாக அறியப்பட்டுள்ள ஒரு சில கலைச் செல்வங்களைக் கொண்டு அவர்கள் கலைகளைப் பேணிய பெருமை தெரியவரும்." என்று குறிப்பிட்டுள்ளார். இக் கலை யாசிரியரின் முடிவு (P.R. சீநிவாசன்) என் ஆராய்ச்சியின் முடிவுக்கு முரணுக உள்ளது.

இலக்கியம், கல்வெட்டுக்கள், கலைப்பாணி முதலிய சான்றுகளைக் கொண்டு முற்பட்ட சோழரின் ஆட்சிக் காலத்தில் குறைந்த அளவு 110 கோயில்களாவது கட்டப்பட்டிருக்க வேண்டும் என்பது தீர்மானிக்கப்படுகிறது. இக்கோயில்களில்

47 கோயில்கள் முதலாம் ஆதித்தன் காலத்தையும், 30 கோயில்கள் முதல் பராந்தகன் காலத்தையும் சேர்ந்தனவாக அறிகிரோம்; இவர்கள் ஆட்சியில் ஒரு பக்கம் போர் நிகழ்ந்தாலும் மற்ரொருபக்கம் அமைதி நிலவவே, நாடெங்கும் தடையின்றிக் கலைவளர்ந்தது என்பதை உணரவேண்டும். சோழர்களுடைய ஆட்சிக்காலம் முழுவதும் இந்த உண்மையைக் காணலாம்; எனவே P. R. சீநிவாசனுடைய கூற்று தக்க ஆதாரமற்றது என்று கொள்ளத்தக்கதாம்.

காலப்போக்கினுலும், மக்களின் கவனக் குறைவாலும், மழை, புயல், வெயில் முதலிய இயற்கைக் கொடுமையாலும் பல அரிய கோயில்களும் கட்டிடங்களும் சிலைகளும் சிதைவுற்றன. சிதைவுற்றும் வருகின்றன. மக்களின் கவனக் குறைவின் பயனுக மரஞ்செடி கொடிகள் கோயில் கட்டிடங்கள் மீது வளர்ந்து கோயிலைப் பாழாக்கி வருகின்றன. கோயில்களைப் புதுப்பிப்போர் சமயப்பற்று உடையவராக இருந்தும், அறியாமையால், கோயிலைப் புதுப்பிக்கும்போது நம் பண்டைக்கலைச் செல்வங்களுக்குப் பெருந்தீங்கு செய்து விடுகிருர்கள். சீரிய முறையில் பிரசாரம் செய்து பழம் பெருமை கெடாமல் புதுப்பிக்குமாறு இறை பணியாளர்களை வேண்டுவது அவசியமானதாக உள்ளது.

முதல் ஆதித்தன் காலத்தனவாகிய கண்ணனூர் பால சுப்பிரமணியர் கோயில், திருக்கட்டளை சுந்தரேசுவரர் கோயில், கீழையூர் என்ற மேலைப்பழுவூரிலுள்ள அவனி கந்தர்ப்ப ஈசுவரகிருகம், சீநிவாச நல்லூர் குரங்கநாதர் கோயில், திருக்கழுக்குன்றம் மூலத்தானம், ஆகிய கோயில்களைப் பற்றி விரிவாக நோக்குவோம்.

## கண்ணனூர் சுப்பிரமணியர் கோயில்

முதலாம் ஆதித்தன் காலத்திலேயே சோழர்களின் ஆதிக்கம் சோழ நாட்டின் தென் எல்லையான தென் வெள்ளாற்றைக் கடந்து பாண்டிய நாட்டின் மீது பரவலாயிற்று; பாண்டிய நாட்டுக் கண்ணனூரிலுள்ள சுப்பிரமணியர் கோயில் ஆதித்த சோழன் கோயில் ஆதலால் இவன் ஆட்சிக் காலத்தில் கண்ணனூரே சோழ நாட்டின் தெற்கெல்லை என்னலாம். இவ்வடிப்படை வெற்றியைப் பயன் படுத்திக்

கொண்டே இவன் மகன் முதல் பராந்தகன் மதுரை நாடு முழுவதையும் வென்று மதுரை கொண்ட கோபரகேசரி என்ற பட்டம் புனைந்தான்.

கண்ணனூர் என்பது புதுக்கோட்டை மாவட்டத்தில் திருமெய்யம் தாலுகாவிலுள்ளதொரு சிற்றூர். புதுக்கோட்டை நகரத்துக்குத் தென் மேற்கில் 17மைல் (27·4 கி.மீ.) தொலைவில் உள்ள இவ்வூர் ஊருணியின் கீழ்கரையின் மேல் சுப்பிரமணியர் கோயில் கட்டப்பட்டுள்ளது. இக்கோயில் கருவறை, அர்த்த மண்டபம், முகமண்டபம் என்ற உறுப்புக்களைக் கொண்டது. இக்கோயிலின் மதிலும் கோபுரத்தின் கல் நிலைகளும் அரிகால்களும் சிதைவுற்றுக் காணப்படுகின்றன. முகமண்டபத்தின் வெளிச்சுவர்களின் மீது காணப்படும் கல்வெட்டுக்கள் யாவும் பாண்டிய மன்னர்களின் கல்வெட்டுக்களே. அவற்றை நோக்க இம் முகமண்டபம் பதின்மூன்றும் நூற்றுண்டில் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்பது உணரப்படுகிறது. ஆனல் கருவறையும் அர்த்த மண்டபமும் மிகப் பழைமையானவை. ஆதித்த சோழன் காலத்தைச் சேர்ந்தவை.

அர்த்தமண்டபத்தின் வாசலின் இருபுறத்தும் இரு கல்வெட்டுக்கள் புதியனவாகக் கிடைத்துள்ளன. இவைகளின் சில பகுதிகள் பிற்காலத்தில் நிறுவப்பட்ட மண்டபத்தின் தூண்களால் மறைந்துள்ளன. கல்வெட்டுக்களின் வாசகம் முழுவதும் காணக் கிடைக்கவில்லை. அங்ஙனம் இருந்தும் இக்கல்வெட்டுக்கள் மிகப் பயன் தருவனவாம். இவை ஸ்ரீ கோவிராசகேசரிவர்மன் காலத்தில் துருமா நாட்டு இவ்வூர்ச் சுப்பிரமணிய தேவருக்கு ஒரு நிலம் தானம் கொடுக்கப்பட்ட செய்தியையும் இதே தேவருக்கு இவ்வூரார் திருநந்தா விளக்கு எரிப்பதற்கு வழங்கிய தானச் செய்தியையும் குறிக்கின்றன. கல்வெட்டுக்களின் எழுத்தமைப்பில் இருந்து இந்த இராசகேசரி முதலாம் ஆதித்தனே என்பது தெரியவருகிறது.

இக்கோயில் கிழக்கு மேற்கில் 49 அடி நீளமுடையது. கருவறை சதுரமானது. இதன் ஒவ்வொரு பக்கமும் 12½ அடி நீளம் உடையது. இறைவனின் சந்நிதி கிழக்கு நோக்கியுள்ளது. கருவறையின் மூன்று வெளிப்புறச் சுவர்களும் அரைத் தூண்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளன. இத் தூண்கள் திருக்கட்டளை சுந்தரேசுவரர் கோயில் தூண்களை ஒத்திருக்கும்

தன்மை குறிப்பிடத்தக்கது. அரைத்தூண் கால், கலசம், கும்பம், பலகை என்ற உறுப்புக்களை உடையது. கருவறையைச் சுற்றிலும் வெளிப்புறத்தில் தேவகோஷ்டங்கள் உள்ளன. அவற்றில் தென் கோஷ்டத்தில் மாத்திரம் தற்போது தக்ஷிணாமூர்த்தி சிலை காணப்படுகிறது. போதிகை கோணவடிவமுடையது. கொடுங்கைக்குக் கீழ் பூதகண வரிமானமும் அதன் மேல் யாளி வரிமானமும் உள்ளன. இவ்வரிக்குமேல் உள்ள பிரஸ்தரத்தில், சிவன் கோயில்களில் நான்கு மூலைகளிலும் காணப்படும் இடபச் சிலைகளைப்போல, நான்கு யானைச்சிலைகள் காணப்படுகின்றன. கிரீவத்தின் நாற்புறங்களிலும் கூடுகளால் அலங்கரிக்கப்பட்ட தேவகோஷ்டங்கள் உள்ளன. இவற்றுள் இரண்டில் தேய்ந்து சிதைந்து போன சிலைகள் காணப்படுகின்றன. வட்டமான சிகரமும் அதன் உச்சியில் உருண்டை வடிவமுடைய ஸ்தூபியும் உள்ளன. இவ்வனப்பு வாய்ந்த கற்றளியின் மூலவிக்கிரகம் சிதைவுறவே அதை முகமண்டபத்தில் வைத்து விட்டு அதன் தானத்தில் புதிய சிலை ஒன்றைப் பிரதிட்டித்துள்ளனர். பழைய சிலை 3½ அடி உயரமும் 1½ அடி குறுக்களவும் ½ அடி கனமும் உடையது. தலையில் கரண்டமகுடமும், மார்பில் சன்னவீரம் என்ற குறுக்காக அணியும் மாலையும், நாற்கரங்களில் மேல் இரண்டு கரங்களில் சக்தியும் அக்ஷமாலையும் கீழ் வலக்கையில் அபயக்குறியும் கீழ் இடக்கை துடைமீது தொங்கும் நிலையும் கொண்டதாகப் பழையசிலை காட்சியளிக்கிறது. இக்கோயிலிலுள்ள சுப்பிரமணிய தேவரின் ஊர்தி பிணிமுகம் அல்லது யானை. முருகப்பெருமானுக்கு யானையும் வாகனமாகும் என்ற செய்தி

> 'பிணிமுக ஊர்தி ஒண்செய்யோனும்'—புறநானூறு 56
>
> 'ஓடாப்பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி'—திருமுருகாற்றுப்படை
>
> 'கடுஞ்சின விறல்வேள் களிறு ஊர்ந்தாங்கு'—பதிற்றுப்பத்து 11

முதலிய பழைய இலக்கியச் சான்றுகளாலும், சுவாமிமலையில் முருகனுக்கு எதிரே, ஏனைய முருகன் கோயில்களில் மயில் இருக்கும் தானத்தில்,யானையின் சிலை இருக்கும் செய்தியாலும் வலியுறும். பொதுவாகத் தற்காலத்தில் முருகன் கோயில்களில் மயில் வாகனமே காணப்படுகிறது எனினும் யானையை முருகனுடைய வாகனமாகக் கொள்வது அடிப்பட்ட தமிழர் வழக்கம் என்பது உளங் கொளத்தக்கது.

ஆதித்தன் காலத்துக் கோயில்களில் இதுவே தலைசிறந்த கற்றளியாகும். முருகனையே மூலத்தான தேவதையாகக் கொண்டு சுயம்பிரதான வகுப்பைச் சேர்ந்த தனித்த முருகன் கோயிலாக விளங்குவது இதன் தனிச்சிறப்பாகும்.

## திருக்கட்டளை சுந்தரேசுவரர் கோயில்

திருக்கட்டளை என்பது புதுக்கோட்டை நகரத்துக்குக் கிழக்கே நான்கு மைல் (6·4 கி.மீ.) தொலைவிலுள்ளதொரு சிற்றூராகும். இங்குள்ள சுந்தரேசுவரர் கோயில் ஆதித்தன் காலத்தைச் சேர்ந்த கற்றளியாகும். பண்டைக்காலத்தில் இவ்வூரின் பெயர் கற்குறிச்சி என்பதும் இங்கு எழுந்தருளியுள்ள இறைவனின் பெயர் திருக்கற்றளி ஈசுவரம் உடைய நாயனார் என்பதும் கல்வெட்டுக்கள் மூலம் அறியப்படுகின்றன. இவ்வூருக்குத் திருக்கட்டளை என்ற பெயர் பதினைந்தாம் நூற்றாண்டைச் சார்ந்த விசயநகர ஆட்சியில்தான் முதன்முதல் ஏற்பட்டது.

இக்கோயிலின் கருவறையும் அர்த்தமண்டபமுமே ஆதித்தன் காலத்துக் கட்டப்பட்டன. முகமண்டபமும் அம்மன் கோயிலும் பதினொன்றாம் நூற்றாண்டில் முதல் குலோத்துங்கன் காலத்துக் கட்டப்பட்டனவாதல் வேண்டும்.

இவ்விருதளக் கற்றளி பன்னிரண்டடி வெளிப்புறச் சதுரமும் ஆறு அடி உட்புறச் சதுரமும் கொண்டு கனமான சுவர்களை உடைய கருவறையை உடையது. சுவர்கள் அரைத்தூண்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளன. போதிகை கோண வடிவமுடையது. கொடுங்கைகள் மீது மானிடத்தலையுடன் கூடிய கூடுகளும் மேற்புறம் யாளி வரிசையும் காணப்படுகின்றன. தேவகோஷ்டங்களில் தெற்கே திரிபுராந்தகரும் (இச்சிலையை வீணாதர தக்ஷிணாமூர்த்தி என்று கருதியதுண்டு) மேற்கே இலிங்கோத்பவரும் வடக்கே பிரமனும் வீற்றிருக்கின்றனர்.

இரண்டாவது தளத்தின் முகப்பில் சாலை, கூடம் என்ற உறுப்புக்களைக் காணலாம். இவற்றின் நடுவில் விமான தேவதைகள் நிறுவப்பட்டுள்ளன. தென்சாலையின் நடுவில் பிச்சைத்தேவரும் மேற்கே திருமாலும் வடக்கே பிரமனும் பொலிவுடன் திகழ்கின்றனர். இரண்டாந்தளச் சுவர்மீது மற்றொரு கொடுங்கையும், யாளி வரிசையும் பிரஸ்தரத்தின் நான்கு புறங்களிலும் நான்கு நந்திச்சிலைகளும் உள்ளன. கிரீவம், சிகரம், ஸ்தூபி

என்ற யாவும் சதுர வடிவமானவை. கிரீவத்தின் நடுவில் நான்கு திக்குகளையும் நோக்கிய கோஷ்டங்களில் தேவதை களின் சிலைகள் காணப்படுகின்றன. தெற்கே தக்ஷிணாமூர்த்தியை யும் மேற்கே வராகமூர்த்தியையும் வடக்கே பிரமனையும் கிழக்கே இந்திரனையும் கிரீவத்துக் கோஷ்டங்களில் காணலாம்.

இம் மூலக் கோயிலைச் சுற்றிலும் சூரியன், சப்த மாதர்கள், கணபதி, முருகன், ஜேஷ்டாதேவி, சந்திரன், சண்டேசுவரன் என்ற ஏழு பரிவார தேவதைகளின் கோயில்கள் உள்ளன. எட்டாம் தேவதையாகிய பைரவரின் தளி அழிந்து போகவே, பைரவரின் சிலை மாத்திரம் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளது. (பண்டைச் சோழர்காலக் கோயில்களில் எட்டுப் பரிவாரத் தேவதைகளின் ஆல யங்கள் இருந்தன என்பது எறும்பூர்க் கோயில் கல்வெட்டி லிருந்து அறியப்படுகிறது.)

அர்த்த மண்டபத்தின் இருமருங்கிலும் ஒன்பதாம் நூற் ருண்டுக் கலைப்பாணியில் அமைந்த இரண்டு துவாரபாலர் சிலைகளைக் காணலாம்.

இக் கோயிலில் காணப்படும் சோழமன்னர் கல்வெட்டுகள் எட்டினுள் வடசுவரின் மீதுள்ள இராசகேசரியின் மூன்ரும் ஆண்டுக் கல்வெட்டு முதல் ஆதித்தன் காலத்த தாகும். நார்த்தாமலையில் நிருபதுங்கனின் ஏழாம் ஆண்டுக் (கி.பி. 862) கல்வெட்டு கிடைத்திருப்பதாலும், விசயாலயன் கி.பி. 850 முதல் 871 வரை ஆண்டதாலும், திருக்கட்டளைப் பகுதி விசயாலயனுக்குப்பின் முடிசூடிய ஆதித்தன் காலத்தில் சோழராட்சிக்கு உட்பட்டிருக்கக்கூடும் எனத் தோன்றுகிறது. இத் திருக்கட்டளைக் கோயில் ஆதித்தன் காலக் கோயில்களில் முக்கியமானது.

## கீழையூர் என்ற மேலைப்பழுவூர்
## அவனி கந்தர்ப்ப ஈசுவரகிருகம்

கீழையூர் என்பது திருச்சியிலிருந்து, அரியலூர் செல்லும் பெருவழியில் 30 மைல் (48 கி.மீ.) தொலைவிலுள்ளது. கீழை யூரும் அதற்கு அருகிலுள்ள மேலைப்பழுவூரும் சேர்ந்து பண்டைக்காலத்தில் பெரும் பழுவூர் அல்லது மன்னு பெரும் பழுவூர் என வழங்கலாயின. இப்பேரூரின் மற்ருெரு பகுதி மூன்று மைல்களுக்குக் கிழக்கேயுள்ள கீழைப்பழுவூர் என்பது. இது

சிறு பழுவூர் என்றும் அழைக்கப்பட்ட செய்தி அவ்வூர்க் கல்வெட்டுக்களால் உணரப்படுகிறது. இந்நிலப் பகுதியை யாண்ட பழுவேட்டரையர்கள் கேரளநாட்டுத் தொடர்புடையவர்கள். இவர்கள் மலையாள நாட்டிலிருந்து வந்து இங்கு குடியேறினர் என்று கூறும் கூற்றுக்குத் தக்க ஆதாரமில்லை. இப் பழுவேட்டரையர் என்ற குறுநில மன்னர்களுக்கும் சோழ அரச குடும்பத்தினருக்கும் நெருங்கிய தொடர்பும், மணவினை பற்றிய உறவும் இருந்து வந்தன. முதல் பராந்தகன் கேரள மன்னன் மகளை மணந்து கொண்டான் என்று அன்பில் செப்பேடுகள் கூறுகின்றன. முதல் இராசராசதேவனின் தேவிமார்களுள் ஒருவர் பழுவூர் அவனி கந்தர்ப்பதேவனுர் மகளார் நக்கன்பஞ்சவன் மகாதேவியாராவார். இனிக் கீழையூர்க் கோயிலைப்பற்றி நோக்குவோம்.

கீழையூர்க் கோயில் திருச்சி அரியலூர்ப் பெருவழியை ஒட்டி இடப்புறத்தில் நிற்கிறது. இக்கோயிற் கல்வெட்டுக்களால் இதன் பெயர் அவனி கந்தர்ப்ப ஈசுவர கிருகம் என்பது புலனுகிறது. இக்கோயிலில் இரண்டுவித சிகரங்களையுடைய இரு தளிகள் அடுத்தடுத்து நிற்கின்றன. சந்நிதி மேற்குத்திசையை நோக்கியுள்ளது. இவ்விருதளிகளிலும் தெற்கேயுள்ள தளி முற்காலத்தில் தென்வாயில் ஸ்ரீ கோயில் என்று வழங்கப்பட்டதாகக் கல்வெட்டுகள் மூலம் உணர்கிறோம். தற்போது இக்கோயில் அகஸ்தீசுவரம் என்று வழங்கப்படுகிறது. இதன் முன்னுகைப் பலிபீடமும் கொடிமரமும் துவாரபாலகர்களோடு கூடியகோபுரமும் பண்டைநிலை சிதையாமல் காணப்படுகின்றன. இதுவே முக்கியமான தளியாகும். இத்தளியைச் சுற்றிப் பிராகாரம் இருக்கிறது. பிராகாரத்தில் கணபதி, முருகன், சப்தமாதர்கள், சண்டேசுவரர் ஆகியவர்களின் சுற்றுக் கோயில்கள் காணப்படுகின்றன. இவைகளைச் சூழ்ந்து மதில் காணப்படுகிறது. இவை யாவும் தொன்மைநிலை சிதையாமல் உள்ளன.

இத்தளியிலுள்ள பல கல்வெட்டுக்களில் மூன்று இராசகேசரி வர்மன் காலத்தனவாகிய பழைய கல்வெட்டுக்களாம். இவ்விராசகேசரி முதலாம் ஆதித்தனுவான் என்பது என் கருத்து. இக் கல்வெட்டுக்களில் ஒன்று கோவிராசகேசரி வர்மரின் 22–ஆவது ஆண்டைச் சேர்ந்தது. குன்றக் கூற்றத்து அவனிகந்தர்ப்ப ஈசுவரகிருகத்து மகாதேவருக்குப் பழுவேட்டரையன் குமரன் மறவன் பிரசாதத்திஞல் பொய்கைக்

குறுவிடத்து வேட்டக்குடான் வடுகன், இத்தளி தேவதானம் ஊரகன்குடியில் ஆபோஹனங் கிடந்த (தரிசாகக் கிடந்த) பூமியைக் கல்லி இரண்டு பூவும் (போகம்) விளையும்படி மசக்கிக் கொடுத்த நீர்நிலம் எட்டுமா, இப்பூமியில் போந்த போகங் கொண்டு இரண்டு தளியிலும் ஒரோ நந்தா விளக்கு இரவும் பகலும் எரிப்பதென்று இத்தளிப்பட்டுடையோர் எழுவர் ஒப்புக் கொண்டனர். இங்ஙனம் குறிப்பிடும் இக் கல்வெட்டைப் பிரசுரம் செய்த G. V. சீநிவாசன் இது முதலாம் இராச ராசன் காலத்தைச் சார்ந்ததாக இருக்கலாம் என்று குறிப்பிட்டுள்ளார். இக் கல்வெட்டின் லிபியோ ஒன்பதாம் நூற்றுண்டைச் சார்ந்தது என்று கூறலாம். பழைமைக்குச் சான்ருக இக் கல்வெட்டில் மெய்யெழுத்திற்குமேல் புள்ளி வரையப்பட்டுள்ளது. மேலும், இது முதலாம் இராசராசன் காலத்தைச் சார்ந்தது என்ருல் 'திருமகள் போல' அல்லது 'காந்தளுர்ச்சாலை கலமறுத்தருளிய' என்ற ஏதாவது ஒரு தொடக்கத்தை உடையதாயிருந்திருக்கும். அங்ஙனம் இல்லாததனுல் இக் கல்வெட்டு முதலாம் ஆதித்தன் காலத்தைச் சேர்ந்ததே.

இதே தென்சுவரில் மற்ருெரு "...ரிபன்மரின்" 22-ஆம் ஆண்டுக் கல்வெட்டு உள்ளது. (இது அச்சிடப்படவில்லை.) எனினும் இதுவும் இராசகேசரியாகிய முதல் ஆதித்தனின் கல்வெட்டென்றே துணிந்து கூறலாம். இதுவும், ஆபோஹனமாய்க் கிடந்த பூமியைக் கல்லித் திருத்தப்பட்ட எட்டு மாநிலத்தை இருதளிகளிலும் ஒரோ நந்தா விளக்கு எரிப்பதற்காகக் கொடுக்கப்பட்ட தானத்தைக் குறிப்பது. இவ் விளக்கை ரக்ஷிப்பவர் இத்தளிப்பட்டுடையார் எழுவர் என்பதும் குறிப்பிடப்பட்டுள்ளது. இக் கல்வெட்டிலும் மெய்யெழுத்து புள்ளி பெற்றுள்ளது. இப்புள்ளி, திருப்பழனம் முதல் ஆதித்த சோழன் கல்வெட்டுப் புள்ளியை ஒத்து, தலைகீழாக அமைந்த காற்புள்ளி (Comma) வடிவில் அமைந்திருக்கின்றது. இவ்விராசகேசரியின் கல்வெட்டின் கீழாக மதுரை கொண்ட கோபரகேசரியின் 37-ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று பொறிக்கப்பட்டிருப்பதும் இக் கல்வெட்டு குறிப்பிடும் இராசகேசரி முதலாம் ஆதித்தனே என்பதை வலியுறுத்தும்.

மேலும் இத்தானம், பழுவேட்டரையன் குமரன் மறவன் பிரசாதத்தினுல் வழங்கப்பெற்றதாக அறியப்படுகிறது. இத்தலைவனும் முன் கல்வெட்டில் கூறப்பட்ட பழுவேட்டரையத்

தலைவனும் ஒருவனே என்றுகொள்ளல்வேண்டும். லால்குடியில் பரகேசரி வர்மனின் (முதற் பராந்தகன்) ஐந்தாம் ஆண்டில் இதே தலைவன் அக் கோயில் தேவருக்குத் தானம் ஒன்று அளித்த செய்தி அறியப்படுகிறது. இவற்றை நோக்க இத் தலைவனை பழுவேட்டரையன் முதலாம் ஆதித்தன் ஆட்சி யிறுதியிலும் முதற் பராந்தகன் ஆட்சியின் பெரும் பகுதி யிலும் வாழ்ந்தவனுதல் உணரப்படுகிறது.

மூன்ருவது கல்வெட்டு இராசகேசரியின் 13-ஆம் ஆண்டைச் சேர்ந்தது. இக் கல்வெட்டும் தென்வாயில் ஸ்ரீகோயிலின் தென் சுவரிலேயே பொறிக்கப்பட்டுள்ளது. குன்றக்கூற்றத்து அவனி கந்தர்ப்ப ஈசுவர கிருஹத்து மகாதேவருக்கு இங்நாட்டுப் பழுவூர் பகைவிடை ஈசுவரத்துத் தேவனூர் மகன் பூதிபழுவேட்டரையன் குமரன் கண்டன் உத்தர வின் பேரில், இத்தளியின் தேவதானமாக ஊரகன் குடியில் தரிசாகக் கிடந்த பூமியைக் கல்லி இருபோகம் விளையும்படித் திருத்தி அங்ஙனம் திருத்தப்பட்ட எட்டு மாநிலத்தை இரு தளி யிலும் ஒரோ நொந்தா விளக்கு இரவும் பகலும் எரிப்பதற்குத் தான மாகக் கொடுக்கவே, அவ்விளக்கு எரிப்பதற்குத் தளிப்பட் டுடையார் எழுவர் ஒப்புக்கொண்ட செய்தியை இக் கல்வெட்டு குறிப்பிடுகிறது.

திருவையாற்றுப் பஞ்சநதீசுவரர் கோயில் கருவறையின் மேல்புறச் சுவரின் அடிப்படையில் இராசகேசரியின் (முதல் ஆதித்தன்) பத்தாம் ஆண்டுக் கல்வெட்டு உள்ளது. தானம் செய்யப்பட்ட நிலத்தின் எல்லையை இக் கல்வெட்டு குறிப் பிடும் போது, 'பழுவேட்டரையன் குமரன் கண்டன் மசக்கல்' என்ற பெயருடைய நிலத்தைக் குறிக்கிறது. இக் கல்வெட்டிலும் கீழையூர்க் கல்வெட்டிலும் கூறப்படும் பழுவேட்டரையன் ஒருவனே என்பதும் இத்தலைவன் ஆதித்த சோழன் காலத் தவன் என்பதும் தெளிவு.

இராசகேசரியின் 13-ஆம் ஆண்டைச் சேர்ந்த இக் கல் வெட்டில், பழைமையை விளக்கும் வகையில் ஏனைய இரண்டு கல்வெட்டுகளிலும் மெய்யெழுத்து புள்ளி பெற்ருற்போல, மெய்யெழுத்துக்கள் புள்ளி பெறவில்லை. எனினும் எழுத்தின் அமைப்பையும் மற்ற சூழ்நிலையையும் நோக்குங்கால் இப்பதின் மூன்ரும் ஆண்டு (இராசகேசரியின்) கல்வெட்டும் முதல் ஆதித்தன் காலத்தது என்று கூறலாம். அங்ஙனமாயின் இக்

கல்வெட்டே இத்தளியிலுள்ள பழைமையான கல்வெட்டு இத்தளி முதல் ஆதித்தனின் 13-ஆம் ஆண்டாகிய என்பதும் கி. பி. 884-க்கு முன்னதாகவே எடுப்பிக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதும் கொள்ளத்தகும்.

அகத்தீசுவரமாகிய தென்வாயில் ஸ்ரீகோயிலின் கருவறை, அர்த்தமண்டபம், அந்தராளம், முகமண்டபம், நந்தி, கொடி மரம், கோபுரம் ஆகிய யாவும் ஒரே அச்சில் உள்ளன. எனவே, இவை யாவும் ஒரே காலத்தில் எடுப்பிக்கப்பட்டிருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது. முகமண்டபத்தின் நடுவில், அம் மண்டபம் கட்டியவர் பெயர் தீட்டப்பட்ட உருண்டை வடிவமான தூண்களும், இவைகளைச் சுற்றிலும் சிங்கம் தாங்குவது போல் அமைந்த தூண்களும் உள்ளன. இத்தூண்களிலுள்ள பெயர்களும் ஒன்பதாம் நூற்றுண்டைச் சார்ந்த எழுத்துக்களால் பொறிக்கப்பட்டிருக்கின்றமை குறிப்பிடத்தக்கது. இக்கோயிலின் முகமண்டபம், காஞ்சி கைலாசநாதர் கோயில் முகமண்டபத்தைப் போல, தொடக்கத்தில் மற்ற உறுப்புக்களோடு இணைக்கப்படாமல் இருந்தது. பிற்காலத்திலேயே வாயில்களோடு சுவர்கள் எழுப்பி அந்தராளத்தை அமைத்திருக்க வேண்டும்.

இவ்வகத்தீசுவரம் வடதளியைவிடப் பெரியது. இதன் கருவறை பத்தொன்பதடிப் பக்கமுடைய சதுரமாக அமைந்துள்ளது. இதற்கு முன் உள்ள அர்த்தமண்டபத்தை நான்கு தூண்கள் தாங்கி நிற்கின்றன. அர்த்த மண்டபம் 10½ அடி நீளமுடையது. அதற்கப்பால் பிற்காலத்தில் கட்டப்பட்ட அந்தராளம் 6½ அடி நீளமுடையது. முகமண்டபம் 39 அடி நீளமும் 34 அடி அகலமும் உடையது. கருவறையின் வெளிச் சுவர்களில் தேவ கோஷ்டங்கள் சற்றுப் பிதுங்கலாகக் காணப்படுகின்றன. தேவ கோஷ்டங்களில், வடக்கே பிரமன் சிலையும் மேற்கே முருகன் சிலையும் தெற்கே தக்ஷிணமூர்த்தி சிலையும், நின்ற திருக்கோலத்தில் பொலிவுடன் காணப்படுகின்றன.

**தக்ஷிணமூர்த்தி சிலை :** நின்ற திருக்கோலத்திலுள்ள இச்சிலையின் நான்கு கைகளில் மேற் கைகள் இரண்டிலும் மழுவும், மானும் தலைப்பக்கம் நெருங்கிய நிலையில் உள்ளன. முன் வலக்கை அபயகரமாக உள்ளது. முன் இடக்கை துடையின்மீது படிந்துள்ளது. தலையைச் சடாமகுடமும், காதுகளை மகர, பத்ர

குண்டலங்களும், கழுத்தினை ஆரங்களும், மார்பினைப் பூணூலும், வயிற்றினை உதரபந்தமும், இடையினைக் கடிசூத்திரமும் கச்சம் போன்ற ஆடையும், புயங்களைக் கேயூரங்களும், கைகளை வளையல்களும் முறையே அணி செய்கின்றன. பல மடிப்பும் சுருக்கும் கொண்ட உத்தரீயத்தின் குஞ்சங்கள் இடுப்பிலிருந்து கால்வரையில் தொங்குகின்றன.

**சுப்பிரமணியர் சிலை:** கருவறைக்கு வெளியே கிழக்குத் தேவகோஷ்டத்தை அணிசெய்யும் நின்ற திருக்கோலமாக அமைந்துள்ள முருகன் சிலையின் நான்கு கரங்களில் பின் இரண்டு கரங்களும் முறையே வச்சிரம் (டங்கா), சக்தி என்ற ஆயுதங்களை ஏந்தி நிற்கவும் முன் வலக்கை அபய ஹஸ்தமாகவும் பின் வலக்கை கடியவலம்பிதம் (துடைமீது அமர்ந்தது) என்ற நிலையிலும் உள்ளன. தலைக்கு மேல் அரை வட்டக் குடை காணப்படுகிறது. தலையை மலரால் அலங்கரிக்கப்பட்ட கூம்பிய மகுடமும், காதுகளைப் பத்ர குண்டலங்களும், மார்பினை ஆரமும், சன்னவீரமும், வயிற்றினை உதர பந்தமும், புயங்களைக் கேயூரங்களும், கைகளை வளையல்களும் அணிசெய்யும் நிலையில் அமைந்துள்ள இச்சிலை மிக்க வனப்புடன் காணப்படுகிறது.

**பிரமன் சிலை:** வடக்குத் தேவகோஷ்டத்தில் நின்ற திருக்கோலத்திலுள்ள பிரமன் சிலையும் வனப்புற அமைந்துள்ளது. இம்மூன்று சிலைகளும் ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த சோழர் சிற்பங்களுக்குத் தலைசிறந்த எடுத்துக் காட்டுகளாம்.

அதிஷ்டானத்தில் குமுதப் படையும் யாளி வரிமானமும் உள்ளன. தேவகோஷ்டங்களின் மேற்பகுதியில் அழகு வாய்ந்த மகர தோரணங்கள் இருக்கின்றன. மகர தோரணங்களின் நடுவில் ஆடல்வல்லான் சிலையும், வட தோரணத்தின் நடுவில் கஜசம்ஹாரமூர்த்தியின் சிலையும் உள்ளன. கொடுங்கையின் கீழ் ஆடுங் கணங்களும், கொடுங்கையின் முன்புறம் மானிடத் தலையுடைய கூடுகளும், அதன் மேற்புறம் யாளி வரிமானமும் உள்ளன.

இரண்டு தளங்களையுடைய இவ்வகத்தீசுவரத்தின் இரண்டாம் தளத்தில் சாலைகளும், கூடங்களும், அவைகளின் மேல் கொடுங்கையும் யாளி வரிமானமும் உள்ளன. பிரஸ்தரத்தின்

மீது நான்கு கோடியிலும் நான்கு நந்திகள் காணப்படு கின்றன. கிரீவம் சதுர வடிவமுடையது. கிரீவத்தில் அழகிய கூடுகளோடு கூடிய தேவகோஷ்டங்கள் நாற்றிசைகளையும் நோக்கியவாறு அமைந்துள்ளன.

சதுர வடிவமான சிகரமும், அதன் மீது பத்ம பீடமும், சதுர வடிவமான ஸ்தூபியும் இத் தளியை அலங்கரிக்கின்றன. தெற்குத் தேவகோஷ்டத்தில் வீணாதர தக்ஷிணாமூர்த்தியின் அழகிய சிற்பம் காணப்படுகிறது. இனி வடக்கில் உள்ள சிறிய கற்றளியை நோக்குவோம்.

பண்டு **வடவாயில் ஸ்ரீகோயில்** என்று கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்ட இக் கற்றளி தற்போது **சோளீசுவரம்** என்றும், அருணாசலேசுவரம் என்றும் வழங்கப்படுகிறது. தென்தளியை விட உருவிற் சிறிய இவ் வடதளியும் இரு தளங்களுடன் விளங்குகிறது. இங்கும் மூன்று தேவகோஷ்டச் சிலைகளும் பீடத்தில் அமர்ந்த திருக்கோலத்தில் உள்ளன. இங்குள்ள முருகன் சிலையில் மேற்கரங்களில் காணப்படும் வச்சிரமும் சக்தியும் தென்வாயில் ஸ்ரீகோயிலிலுள்ள முறை மாறிக் காணப் படுகின்றன. இச்சிலையின் தலைக்குமேல், தென்கோயிலில் காணப்படும் அரை வட்டக் குடைக்குப் பதிலாக சுவாலை யோடு கூடிய **பிரபாவளி** அணி செய்கிறது. இதர தேவ கோஷ் டங்களில் பிரமனும், தக்ஷிணாமூர்த்தியும் விளங்குகின்றனர். இத் தளியின் சிகரம் வட்ட வடிவமானது.

இக்கோயிலில் இருவிதச் சிகரங்கள் அமைந்த இருதளிகள் அடுத்தடுத்து நிற்கின்றன. கொடும்பாளூரில் மூன்று தளிகள் அடுத்தடுத்து நிற்பினும், அவை ஒரேவிதச் சிகரங்களை உடை யன. மைசூர் மாகாணத்திலுள்ள **கம்படஹல்லி** என்ற இடத் தில் ஒரு சமணபஸ்தி காணப்படுகிறது. அஃது ஐந்து தளிகளை உடைய கோயில்; இவ்வைந்து கற்றளிகளில் மூன்று ஒரு புறத் தில் அமைந்து திரிகூடாசலம் என்று வழங்கப்படுகின்றன. இம்மூன்று தளிகளும் முறையே **வட்டம், சதுரம், எண்கோணம்** என்ற மூன்று வித அமைப்புடைய **சிகரங்களை** உடையன. இச் சமணக் கோயிலும் ஒன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்த திராவிடக் கலைப் பாணியில் நிறுவப்பட்டதே. மைசூர் மாகா ணத்து **நந்தி** என்ற ஊரிலுள்ள போகநந்தீசுவரர் கோயிலும் கீழையூர் அகத்தீசுரமும் பல விதங்களில் கலைப்பாணியில்

ஒத்து ஒரே காலத்தனவாக விளங்குவதை நோக்க, அரசியல் எல்லையையும் மதப் பற்றையும் கடந்து ஆதரிப்பாருள்ளவிடத்தில் கலை மடைதிறந்த வெள்ளம்போலப் பாய்ந்து பரவுகிறது என்ற உண்மை வெளியாகிறது.

கீழையூர் வடதளியாகிய அருணாசலேசுவரத்தை நீலகண்ட சாஸ்திரியார் தம் 'சோழர் வரலாறு' என்ற நூலில் அகத்தீசுவரம் என்று தவருகக் குறிப்பிட்டதோடு படத்தின் மூலமும் விளக்கியுள்ளார். (அகத்தீசுவரம் சதூரமான சிகரமுடையது. அருணாசலேசுவரமோ வட்டமான சிகரமுடையது).

கல்வெட்டிலாகா அறிக்கை வடவாயில் ஸ்ரீகோயிலை அகத்தீசுவரம் என்றும் தென் தளியையும் அகத்தீசுவரம் என்றும் குறிப்பிட்டிருப்பதும் பொருத்தமற்ற செய்தியாம்.

இதுகாறும் கூறியவற்ருல் கீழையூரிலுள்ள அவனி கந்தர்ப்ப ஈசுவர கிருகம், பல அம்சங்களில் சிறப்புற்ற, முதலாம் ஆதித்தன் காலத்துக் கோயில் என்பது தெற்றென உணரப்படும்.

## சீநிவாசநல்லூர்
## குரங்கநாதர் கோயில்

சீநிவாசநல்லூர் என்ற ஊர் திருச்சி மாவட்டத்தில் திருச்சி நகரிலிருந்து 20 கல் (32 கி.மீ.) தொலைவிலுள்ளதொரு சிற்றூராகும். இது முசிரியிலிருந்து ஆறு கல் தொலைவில் உள்ளது. இவ்வூரில் முற்காலத்தில் விசுவநாதர் கோயில், பட்டாபிராமன் கோயில், லக்ஷ்மீநாராயணப் பெருமாள் கோயில், மாரியம்மன் கோயில் (துர்க்கை பட்டாரியார் கோயில்), குரங்கநாதர் கோயில் என்ற பல கோயில்கள் இருந்தன. இவற்றில் சில இன்னும் சிதைந்த உருவில் காட்சியளிக்கின்றன. இவைகளில் முக்கியமானது திருக்குரங்கநாதர் கோயிலாகும்.

சந்யாசி ஒருவர் இக்கோயிலைக் கட்ட ஆரம்பித்தார் எனவும், குரங்கு ஒன்று இக்கோயிலைத் தீண்டவே கோயில் முற்றுப்பெருமல் நின்றுவிட்டது எனவும் இக்கோயிலைப் பற்றிக் கூறப்படும் கட்டுக்கதை ஆதாரமற்றது.

இக்கோயில் முதலாம் ஆதித்தனின் 24–ஆம் ஆண்டு (கி. பி. 895) முதல் முதலாம் குலோத்துங்கனின் 21-ஆம் ஆண்டு(கி. பி. 1091) வரை ஏறக்குறைய 200 ஆண்டுகள் நல்ல நிலையிலிருந்தது. மன்னர்களும் மக்களும் இக்கோயிலுக்குக் கொடுத்த தானங்களைக் கூறும் கல்வெட்டுக்கள் பலவும் இதன் சுவர்களில் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கோயிலில் வீற்றிருக்கும் பெருமான் திருக்குரக்குத்துறைப் பெருமானடிகள் என்று கல்வெட்டுக்கள் கூறுகின்றன. இராமாயணத்தில் பிரசித்தி பெற்றுள்ள வானரத் தலைவர்களான வாலி அல்லது சுக்கிரீவன் இக் கோயிலைக் கட்டியதாகவோ, அல்லது இக் கோயிலை வழிபட்டதாகவோ ஐதிகம் நிலவியிருக்கலாம்.

திருக்குரக்குத்துறைப் பெருமானடிகள் கோயில் பிரம தேயமான மகேந்திரமங்கலத்திலுள்ளதாகக் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. மகேந்திரன் என்பது கி. பி. ஏழாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவனும், காவிரி தீரத்தை வென்று திருச்சி யில் குடபோகக் கோயில் அமைத்தவனுமான மகேந்திரவர்ம பல்லவனைக் குறிப்பதாகும். சீநிவாசநல்லூருக்கு அருகில் மகேந்திரமங்கலம் என்ற பெயருடன் ஒரு பிடாகை (சிற்றூர்) இன்னும் இருந்து வருகிறது.

கலை-சரித்திர ஆசிரியர் அனைவரும் இக்கோயில் பராந்த கன் காலத்துக் கோயில் என்றும்,பராந்தகன் காலத்துக் கலைப் பாணிக்கு இ∴து ஓர் எடுத்துக்காட்டு என்றும் கூறுவாராயி னர்; ஆனல், இக்கோயில் ஆதித்தன் காலத்ததேயன்றிப் பராந்தகன் காலத்தது அன்று என்பதே என் துணிவு.

இக்கோயிலிலுள்ள கருவறை, அந்தராளம், அர்த்த மண்டபம் என்ற உறுப்புக்கள் ஒரே காலத்தில் அமைக்கப்பட்டு இன்னும் பண்டை நிலை குறையாமல் விளங்குகின்றன. அர்த்தமண்ட பத்தின் தென் சுவரின் அடிப்படையில் இராசகேரியின் 24-ஆம் ஆண்டுக் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் ''பிரமதேயம் மகேந்திர மங்கலத்துத் திருக்குரக்குத் துறைப் பெருமானடிகளுக்கு ஒரு நொந்தா விளக்கு வைப்பேனென்று சபை வாரியரையும், ஆரிகப்படாரரையும் அழைப்பிச்சுக்கொண்டு சாதவேத நீலன் என்பான் தன் னுடைய தோட்டத்தில் ஒரு மாவரை அட்டிக்

கொடுத்த'' செய்தி உணரப்படுகிறது. இதிலுள்ள 24 என்ற உயர்ந்த ஆட்சியாண்டு ஆதித்தனுக்கே பொருந்தும். இதன் எழுத்தும் ஒன்பதாம் நூற்றுண்டைச் சார்ந்ததே. இக் கல்வெட்டின் மேலேயும் பக்கத்திலும் பராந்தகச் சோழனின் இரண்டு கல்வெட்டுகள் உள. ஆதலின் குரங்கநாதர் கோயில் ஆதித்த சோழன் காலத்திலேயே கி.பி. 895-க்கு முன் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்று கொள்ள லாம்.

குரங்கநாதர் கோயில் இருதளக் கற்றளியாகும். இதன் கருவறையின் வெளிப்புறம் 26 அடி 8 அங்குலம் சதுரமாகும். உட்புறம் 8 அடி சதுரமாகும். இதற்குமுன் உள்ள அந்தராளம் 4 அடி 4 அங்குலம் நீளமுடையது. அதனையடுத்து நான்கு தூண்கள் தாங்கும் வகையில் அமைந்திருக்கும் அர்த்தமண்டபம் 22 அடி சதுரமாகும். அதிஷ்டானம் 5 அடி 2 அங்குல உயரமுள்ளது. குமுதப் படையும் யாளி வரிசையும் சீரிய முறையில் அமைந்துள்ளன.

கருவறையில் வெளிச்சுவரிலுள்ள தேவகோஷ்டங்கள் மூன்றில் தெற்கே தக்ஷிணுமூர்த்தி சிலையும் வடக்கே பிரமன் சிலையும் காட்சியளிக்கின்றன. மேற்குக் கோஷ்டம் காலியாக உள்ளது; ஆனுல் அதன் மேலுள்ள மகரதோரணத்தின் நடுவில் யோகநரசிம்மனின் சிலை உள்ளது. அர்த்தமண்டபத்தின் இரு மருங்கிலும் உள்ள தேவகோஷ்டங்களில் தற்போது சிலைகள் காணப்படவில்லை. அங்ஙனமே அர்த்தமண்டபத்தின் வாயிலின் இரு பக்கங்களிலும் துவார பாலகர் இருந்த கோஷ்டங்கள் மாத்திரம் உள்ளன. தேவ கோஷ்டங்களின் நடுவிலுள்ள இடைவெளிகளில் அநேக அழகுவாய்ந்த சிலைகள், ஆதித்தன் காலத்துக் கோயிலான கும்பகோணம் நாகேசுவரர் கோயிலில் காணப்படுவன போலவே, காட்சியளிக்கின்றன.

கொடுங்கை வரையிலுள்ள விமானமே பழைமையானது. அதன் சதுர கிரீவமும் சதுர சிகரமும். கருங்கல்லாலேயே கட்டப்பட்டிருக்க வேண்டும். ஆனுல் பிற்காலத்தில் புதுப்பிக்கப் பட்டுள்ளன.

இக்குரங்கநாதர் கோயிலும் ஆதித்தன் காலத்துக் கோயில்களில் முக்கியமானது.

## திருக்கழுக்குன்றம்
### திருமூலத்தானம்

திருக்கழுக்குன்றம் ஒரு சிறந்த சிவத்தலம். இது செங்கல் பட்டு புகைவண்டி நிலயத்திலிருந்து ஒன்பது கல் தொலைவி லும் மாமல்லபுரத்திலிருந்து பதினொரு கல் தொலைவிலும் உள்ளது. இங்குள்ள கோயில் பழம் பெருமை வாய்ந்தது.

இங்குள்ள மலையின் பெயர் வேதகிரி என்பது. வேதங் களே மலைவடிவெடுத்து நிற்பனவாக ஐதிகம். சாபத்திற்குள் ளான முனிவர் இருவர் கழுகு வடிவெடுத்து இம்மலையை நாடோறும் வழிபட்டு வருகிறார்கள் என்பது மக்கள் நம் பிக்கை. நாடோறும் நடுப்பகலில் நிவேதனத்தின் பின்னர் இரண்டு கழுகுகள் வந்து கோயில் பண்டாரத்திடம் சர்க்க ரைப் பொங்கல் பெற்றுத் தின்று பின் திரும்பிச் செல்லும் காட்சியைக் காணவே மக்கள் பெரும்பாலும் திரள்திரளாக் வருகிறார்கள்.

இம் மலையின் இடையில் கிழக்கு நோக்கிய குகைக் கோயில் ஒன்றும் உச்சியில் கட்டுக்கோயில் ஒன்றும் உள்ளன. குகைக்கோயில் கருவறையும் அர்த்தமண்டபமும் கொண் டது. இக்கோயிலில் நான்கு சதுரத் தூண்களும் அரைத் தூண்களும் உள்ளன. கருவறையின் நடுவில் பண்டு இலிங்கம் இருந்திருக்க வேண்டும். கருவறையின் இரு மருங்கிலும் துவார பாலகர் சிலைகளும், பிரமன், விஷ்ணு ஆகியோர் சிலை களும் உள்ளன. சதுரத்தூண் ஒன்றில் பழைய பல்லவர் கல் வெட்டொன்று சிதைந்த நிலையில் காணப்படுகிறது. அது குளத்தூர்க்கோட்டத்துத் திருக்கழுக்குன்றத்து ஸ்ரீமலைமேல் மூலத்தானத்துப் பெருமாள் அடிகளுக்கு வழிபாட்டுப்புறமாக வாதாபி கொண்ட நரசிம்மப் போத்தரையர் வைத்த தானத்தைப் பற்றிய தாகும். இக் கல்வெட்டை நோக்க இக்கோயில் ஏழாம் நூற் றாண்டில் ஆட்சிசெய்த வாதாபி கொண்ட நரசிம்மவர்மன் காலத்திலோ அல்லது அவன் தகப்பன் காலத்திலோ குடை விக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது போதருகிறது. மேலும் இங்கிருந்த இலிங்கத்தின் பெயர் ஸ்ரீமலைமேல் மூலத்தானத் துப் பெருமானடிகள் என்பதும் புலனாகிறது.

மலையின் உச்சியிலுள்ள கற்றளி மலைமேலுள்ள திருக்கழுக் குன்றமுடைய நாயனார் கோயில் அல்லது வேதகிரிநாதர் கோயில்

என்று வழங்கப்படுகிறது. கருவறையின் உட்புறம் சோமாஸ்கந்தர், தக்ஷிணாமூர்த்தி, அர்த்தநாரி ஆகியவர் சிலைகள் காணப்படுகின்றன. கருவறையினுள் சிலைகள் அமைக்கப் பட்ட காலம் பல்லவ இராசசிம்மன் காலம் முதல் இரண்டாம் நந்திவர்மன் காலம் வரையில் தான் என்ற செய்தி வரையறுக் கப்பட்ட உண்மையாகும். ஆதலின் இக்கோயில் இராசசிம்மன் காலத்ததாக இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

மலையடிவாரத்தில் ஒரு பெரிய கோயில் உள்ளது. பக்த வத்சலர் கோயில் என்ற பெயருடைய இக் கோயிலே இவ்வூரி லுள்ள மூன்று கோயில்களிலும் புதியதும் பெரியதும் ஆகும். சடையவர்மன் சுந்தரபாண்டியன் தன் ஆட்சி 9–ஆம் ஆண் டில் (கி. பி. 1260) இக்கோயில் பணிக்காக நிலம் வழங்கிய செய்தி இக்கோயில் கல்வெட்டொன்றால் புலனாவதால் இக் கோயில் 13–ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்பது வெளிப் படை.

இக்கோயிலின் வடபுறத்திலுள்ள இரண்டாம் பிராகாரத்தில் தூங்கானை வடிவு வாய்ந்த கருவறையும், சுவரும், கொடுங் கைகளும் கொண்டு, கிரீவம், சிகரம், ஸ்தூபி முதலியவை அழிந்துபோன கட்டிடம் ஒன்று உள்ளது. தற்போது இது திருவாபரணக்கொட்டடி (கருவூலம்) என்று வழங்கப்படுகிறது. இதுவே இவ்வூரின் மிகப் பழைய திருக்கழுக்குன்றத் திரு மூலத்தானமுடையார் கோயிலாகும். பண்டு தெற்குப் பார்த்து அமைந்திருந்த சந்நிதி தற்போது அடைபட்டுவிட் டது. ஆதித்த சோழனின் 27–ஆம் ஆண்டு (கி. பி. 898) முதல் இரண்டாம் இராசாதிராசனின் 9–ஆம் ஆண்டு (கி. பி. 1172) வரையிலுள்ள கல்வெட்டுகள் பலவும் இப்பண் டைக் கோயிலின் வெளிச் சுவர்களின்மீது காணப்படு கின்றன.

இக் கல்வெட்டுகளில் ஆதித்த சோழனின் 27–ஆம் ஆண் டுக் கல்வெட்டு மிகவும் சரித்திரச் சிறப்பு வாய்ந்தது. அதன் வாசகம் பின்வருமாறு :

"ஸ்வஸ்தி ஸ்ரீகோ இராசகேசரி வர்மற்கு யாண்டு இருபத் தேழாவது களத்தூர்க் கோட்டத்துக் களத்தூர்க் கூற்றத் துத் திருக்கழுக்குன்றத்து ஸ்ரீமூலத்தானப் பெருமானடிகளுக்கு இறையிலியாக ஸ்கந்தசிஷ்யர் கொடுத்தமையில் அப்படியே

வாதாபிகொண்ட நரசிம்மப்போத்தரையரும் அப்பரிசே ரக்ஷித் தமையின் அந்துரையன் குணவன் மகன் புக்கன் விண் ணப்பத்திருல் பூர்வராஜாக்கள் வைத்தபடியே வைத்தேன், இராசகேசரி பன்மனேன்—இத்தன்மம் ரக்ஷித்தான் அடி என் தலை மேலன"

இக் கல்வெட்டு, இவ்விடத்தில் கோயில் கொண்டெழுந் தருளியிருந்த திருக்கழுக்குன்றத்துத் திருமூலத்தானத்துப் பெருமானடிகளுக்குப் பழைய பல்லவ மன்னனுன ஸ்கந்த சிஷ்யன் வழங்கியிருந்த தானத்தை வாதாபி கொண்ட நரசிம் மன் உறுதி செய்தபடியே, ஆதித்த சோழனும், தொண்டை மண்டலத்தை வென்ற பிறகு பண்டைத் தானத்தை நிலை நாட்டிய செய்தியைத் தெரிவிக்கிறது. எனவே, ஸ்கந்த சிஷ்யன்காலத்தில் மண்டளியாயிருந்த மூலத்தானத்துப் பெருமானடிகள் கோயில் ஆதித்தன் காலத்தில் கற்றளியாக மாறியது என்பதும், இதுவே திருக் கழுக்குன்றத்திலுள்ள கோயில்களில் மிகப் பழைமையானது என்பதும், தற்போது இது பிற்காலக் கோயிலான பக்தவத்ச லர் கோயிலின் ஒரு கூருகப் பழம் பெருமையற்றுக் காணப் படுகிறது என்பதும் போதருகின்றன.

இக் கோயிற் சுவர்களில் ஒன்பதாம் நூற்ருண்டுக் கலைப் பாணியில் அமைந்த கணபதி, தக்ஷிணுமூர்த்தி, திருமால், பிரமன், துர்க்கை ஆகிய தெய்வங்களின் சிலைகளைக் காண லாம். அமைப்பில் இக்கோயில் திருத்தணி வீரட்டானேசுவரர் கோயிலை ஒத்திருக்கும் செய்தி முன்னரே குறிப்பிடப்பட் டுள்ளது.

இதுகாறும் இராசகேசரி ஆதித்தன் காலத்துக் கோயில் கள் சிலவற்றையும் அவற்றின் கலைப்பாணியையும் நோக்கி ேனும். இனி, முதலாம் பராந்தகன் காலக் கோயில்களை நோக்குவோம்.

## அத்தியாயம் 7

## (முதலாம் பராந்தகன் கி.பி. 907-955)

முற்பட்ட சோழர்களுக்குள் பராந்தகன் சிறந்த வெற்றி வீரன். அவன் வீரஸ்ரீக்கு இருப்பிடமாக இருந்தான் என்று கன்னியாகுமரிக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. இவன் பாண்டியரை வென்று மதுரையை அழித்ததால் மதுராந்தகன் என்றும், இராட்டிரகூட (இரட்ட) மன்னனான இரண்டாம் கிருஷ்ண ராசனை வென்றதால் வீரசோழன் என்றும், கடல் கடந்து சென்று சிங்கள நாட்டை வென்றதால் சிங்களாந்தகன் என்றும், பலவாறு புகழப்படுகிறான். மறத்துறையில் சிறந்து விளங்கிய இம் மன்னன் அறத்துறையிலும் மேம்பட்டு விளங்கினான் என்பதற்குச் சான்றுகள் பல உள்ளன. வேதங்களில் வல்ல அந்தணர்களின் நல்வாழ்வு குறித்து அவர்களுக்கு வீர நாராயணம் என்ற பெயருடன் அநேக சதுர்வேதி மங்கலங்களை அமைத்துக் கொடுத்தான். அவற்றுள் சிறந்தது தற்போது காட்டுமன்னார்குடி என்று வழங்கப் பெறும் வீர நாராயண சதுர்வேதி மங்கலமாகும். தான் அமைத்த அப் புத்தூரின் அருகே பராந்தகன் வீரநாராயணன் ஏரி (வீராணத்தேரி) என்ற பெரிய நீர்த்தேக்கத்தை ஏற்படுத்தி நாட்டை வளம் பெறச் செய்தான்.

முதல் பாண்டிய ஏகாதிபத்தியத்தின் கடைசி மன்னனான இரண்டாம் இராசசிம்மன் பராந்தகனிடம் தோற்று முதலில் ஈழத்திலும் (இலங்கை) பிறகு கேரளத்திலும் சரண் புக்கு மறைந்தான். சுசீந்திரம் தாணுநாதர் கோயிலில் பரகேசரி வர்மனின் 14-ஆம் ஆண்டுக் கல்வெட்டு காணப்படுகிறது. இக் கல்வெட்டில் குறிப்பிடப்பட்ட பரகேசரி விசயாலயன் அல்லன்; முதற்பராந்தகனே என்பது வெளிப்படை.

முதற் பராந்தகன் காலத்தில் பல்லவப் பேரரசு வலிமை குன்றி விட்டது. தொண்டைமண்டலத்தைப் பல பகுதிகளா

கப் பிரித்துக் கொண்டு அப்பகுதிகளை நிருபதுங்கவர்மன் (கி.பி. 858—896), அபராசிதவர்மன் (கி.பி. 879—897), கம்ப வர்மன் (கி.பி. 878—910) என்பவர் ஆட்சிபுரிந்து வந்தனர். பராந்தகன் பல்லவ மன்னனை வென்று அவனுடைய பொருள்கள், ஊர்தி, நாடு ஆகியவற்றைக் கைப்பற்றிப் பல்லவர்களுடைய ஆட்சியையே ஒழித்ததாகக் கரந்தைத் தமிழ்ச் சங்கச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன. பராந்தகனால் ஒழிக்கப்பட்ட கடைசிப் பல்லவ மன்னன் கம்பவர்மன் என்றே கொள்ள வேண்டியவராக உள்ளோம்.

பராந்தகனுடைய ஆட்சி தெற்கே கன்னியாகுமரி முதல் வடக்கே நெல்லூர் வரையில் பரவியிருந்தது. ஆனால் காஞ்சி நகர்தான் சோழநாட்டின் நிலைத்த வட எல்லை என்பதும் உணரப்படுகிறது.

நெல்லூர்ப் பகுதியை ஆண்ட பாணர்கள், வைதும்பர்கள் என்ற சிற்றரசர்களோடு போரிட்டுத் தன்நாட்டு வடஎல்லையை விரிவாக்கிய பராந்தகனின் இச் செயலே அவனுடைய பிற்காலப் பெருந் தோல்விக்குக் காரணமாக அமைந்தது. பராந்தகனிடம் தோற்று நாட்டை இழந்து இக் குறுநில மன்னர்கள் இராட்டிர கூட மன்னனான மூன்றும் கிருஷ்ணதேவனின் உதவியை நாடவே, பழம் பகைமை கொண்டிருந்த இரட்ட (இராட்டிரகூட) மன்னன் சோணாட்டின் மீது படையெடுத்து அதன் வடபகுதியை வென்று காஞ்சிமுதல் தஞ்சைப்பகுதி வரை கைப்பற்றிக் **'கச்சியும் தஞ்சையும் கொண்ட கன்னரதேவன்'** என்ற பட்டப் பெயர் புனைந்தான். சோணாட்டின் வடபகுதி ஏறத்தாழ 25 ஆண்டுகள் அவன் வசம் இருந்தது. முதல் இராசராசன் (கி.பி. 985—1014) காலத்தில் தான் இழக்கப்பட்ட வடபகுதி சோணாட்டுடன் நிரந்தரமாக இணைந்தது.

அந்தணர் பலருக்குச் சதுர் வேதிமங்கலங்களை அமைத்துக் கொடுத்த இம் மன்னன் தில்லை நடராசப் பெருமானிடம் எல்லையற்ற பற்றுடையவன். புராரியின் (சிவபெருமான்) பாத கமலங்களில் படியும் தேனீயாகப் பராந்தகன் விளங்கி வந்தான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் இவனுடைய சிவ பக்தியைப் புகழ்கின்றன. வெள்ளிமலை நாதனான கைலாயபதிக்கு இவன் பொற்சபையை (ஹேம சபை) நிறுவினான். இவன் காலம் முதலே தில்லையம்பலம் கனகசபை,

பொன் மன்றம், ஹேம சபை என்ற பல பெயர்களால் பாராட்டி வழங்கப்படுவதாயிற்று. இவன் காலம் முதல் நடராசப்பெரு மான் சோழர்களின் குலதெய்வமாகக் கொள்ளப் பட்டார். இவன் 'கோயில் பொன் வேய்ந்த பெருமாள்' என்ற பெயரால் அழைக்கப் படுவான் ஆயினுன்.

மறத்துறையிலும் அறத்துறையிலும் ஒப்பற்றவகையில் இணைந்து திகழ்ந்த இம்மன்னன் ஆட்சியில் கோயில்கள் பல புதியனவாக எடுப்பிக்கப்பட்டன. மண்டளிகள் பல கற்றளி களாக மாறின எனவும் அறிகிறோம்.

## பராந்தகன் காலத்துக் கோயில்கள்

## கீழைப்பழூர்

## திருவாலந்துறை மகாதேவர் கோயில்

கீழைப்பழூர், திருச்சி-அரியலூர்ப் பெருவழியில் கீழை யூருக்குக் கிழக்கே மூன்றுகல் (5 கி.மீ) தொலையில் உள்ளது. கல்வெட்டுக்களில் இவ்வூர் பிரமதேயமான சிறுபழூர் என்று குறிப்பிடப்படுகிறது. தற்போது இவ்வூர் இறைவன் பெயர் வடமூலநாதர் என்பது. (வடம், பழு என்பன ஆலமரத்தைக் குறிக்கும் சொற்கள்.) பண்டைய கல்வெட்டுக்களில் இறைவன் பெயர் திரு ஆலந்துறை மகாதேவர் என்றே வழங்கப்படுகிறது. இங்குள்ள இறைவியின் பெயர் அருந்தவநாயகி என்பது. இத் தலம் திருஞான சம்பந்தருடைய பாடல் பெற்ற 46-ஆவது தல மாகும். இவ்வூரைப்பற்றித் திருஞானசம்பந்தர் ஒரு பதிகம் பாடியுள்ளார். அப்பதிகத்தில்

'ஒன்றும் இருமூன்றும் ஒருநாலும் உணர்வார்கள்
மன்றினில் இருந்துடன் மகிழ்ந்த பழூர்'

'அந்தணர்கள் ஆகுதியில் இட்ட அகில் மட்டார்
பைந்தொடி மாதர் சுவடு ஒற்று பழூர்'

'பூவையை மடந்தையர்கள் கொண்டு புகழ் சொல்லிப்
பாவையர்கள் கற்பொடு பொலிந்த பழூர்'

'மண்ணின்மிசை ஆடிமலையாளர்கள் தொழுதேத்திப்
பண்ணினெலி கொண்டு பயில்கின்ற பழூர்'

'வேதமொழி சொல்லி மறையாளர் இறைவன்தன்
பாதமவை யேத்த நிகழ்கின்ற பழூர்'

'அந்தணர்களான மலையாளரவர் ஏத்தும்
பந்தம் மலிகின்ற பழுவூர் அரன்'

என்ற சொற்றொடர்களால் கற்பில் சிறந்த மாதர்களும், நற்செயல் நல்லொழுக்கங்களில் சிறந்த மலையாள நாட்டு அந்தணர்களும் அவ்வூரில் திருஞானசம்பந்தர் காலத்து வாழ்ந்தனர் எனவும், அத்திருக்கோயிலில் வழிபாடு நிகழ்த்திய அந்தணர்கள் மலையாள நாட்டவரே எனவும், மாதவர் நோன்பும் மடவார் கற்பும் அக்கால மன்னன் ஆட்சியில் சிறக்கவே நாடும் சிறப்புற்று விளங்கியது எனவும் கூறப்பட்டுள்ளன.

'விரை செய் நறும் பூந்தொடை இதழி வேணியார் தம் கழல் பரவிப்
பரசுபெறு மாதவமுனிவன் பரசுராமன் பெறுநாடு
திரைசெய் கடலின் பெருவளனும் திருந்துநிலனின் செழுவளனும்
வரையின் வளனும் உடன் பெருகி மல்குநாடு மலைநாடு'

என்ற பெரிய புராணப் பாடலால் பரசுராமரால் படைக்கப்பட்டது கேரள நாடு என்பது தெளிவாகிறது. கேரளநாட்டு அந்தணர்கள் இக்கோயில் பூசையை ஏற்று நடத்துவதற்குத் தொடர்பாக இவ்வூர்த்தலபுராணம் பரசுராமரை இக்கோயிலுடன் இணைத்துக் கூறுகிறது. இவ்வூரில் ஆலமரத்து அடியில் ஒரு 'சுவயம்பு' லிங்கம் மறைந்து இருந்தது எனவும், பரசுராமர் தம் தாயை வாளால் வெட்டிய பாவம் தீர இந்த லிங்கத்தை வெளிப்படுத்திப் பூசித்து வீடு பேறு அடைந்தார் எனவும் இத்தல வரலாறு குறிப்பிடுகிறது.

பழுவூர்ப் பகுதியை யாண்ட குறுநில மன்னர்களான பழுவேட்டரையருக்கும் சோழமன்னர் குலத்தினருக்கும் மணவினைத் தொடர்பும் ஏனைய நட்புறவும் நெடுநாட்களாக இருந்து வந்த செய்தி கீழையூர் வரலாற்றில் கூறப்பட்டுள்ளது.

இவ்வூரில் பசுபதீசுவரம், திருவாலந்துறை மகாதேவர் கோயில் என்ற இரண்டு பழைய கோயில்கள் உள்ளன. இவ்விரு கற்றளிகளும் முதலாம் பராந்தகன் காலத்திலேயே எடுப்பிக்கப் பட்டனவாதல் வேண்டும்.

**பசுபதீசுவரம் :** இதன் பழைய பெயர் மறவனீசுவர மகாதேவர் கோயில் என்பது. இக்கோயில் பழுவேட்டரைய மன்னனான மறவன் என்பான் மகன் கண்டன் என்பவனால் தன் தந்தை

பெயரில் எடுப்பிக்கப் பட்டகோயிலாகும். இப்பொழுது இதன் கருவறையின் சுவர்களே எஞ்சியனவாகக் காணப்படுகின் றன. இங்குள்ள நான்கு கல்வெட்டுக்களில் இரண்டு மதுரை கொண்ட பரகேசரியான பராந்தகன் என்ற பெயரில் உள் ளவை. ஏனைய இரண்டும் வாளா பரகேசரிவர்மன் என்ற பெய ரில் இருப்பவை. எழுத்தமைப்பு முதலியவற்றை நோக்க நான் கும் பராந்தகன் காலத்துக் கல்வெட்டுகளே என்ற செய்தி புலனாகிறது.

**திருவாலந்துறை மகாதேவர்கோயில் :** அரியலூர் திருச்சிப் பெரு வழிக்குத் தெற்கிலும் பசுபதீசுவரத்துக்கு வடக்கிலு மாகத் திருவாலந்துறை மகாதேவர் கோயில் என்ற பெருங் கோயிலும் அக்கோயிலுக்கே எதிரே குளமும் காட்சியளிக்கின் கின்றன. இங்குள்ள மகாதேவர் கிழக்கு நோக்கி வீற்றிருக்கி றார். வெளிக்கோபுரத்தைக் கடந்து உட்புறம் சென்றதும் தொடக்கத்தில் காட்சியளிப்பது அருந்தவநாயகி என்று அழைக்கப்படும் அம்பிகையின் திருக்கோயிலாகும். இக்கோயி லும் இதனை அடுத்துக்காணப்படும் திருவிழா மண்டபமும் பிற் காலத்திருப்பணிகளே. அடுத்த வாயிலைக்கடந்ததும் புலனாவது முகமண்டபமாகும். இது கீழ் மேலாக 29 அடியும் தென் வட லாக 24 அடியும் உள்ளது. இதன் மேற்கே அர்த்த மண்டபத் தின் வெளிச் சுவரை ஒட்டிக் காலசம்காரர், அர்த்த நாரீசு வரர், கல்யாணசுந்தரர், கங்காளமூர்த்தி, பைரவர் ஆகியோ ரின் அழகிய சிலைகளைக் காணலாம். தென் புறத்தில் அமைக் கப் பட்டுள்ள மேடைமீது நாயன்மார் அறுபத்து மூவர், திரி புராந்தகர், நர்த்தன பாலசுப்பிரமணியர் (சம்பந்தர்?) இஷப வாகனர் முதலியோரின் செப்புத் திருமேனிகள் திகழ்கின்றன.

முகமண்டபத்திலிருந்து பிரர்காரத்தை அடையலாம். பிராகாரத்தைச் சுற்றி அமைந்துள்ள திருச் சுற்றுலையில் காணப்படும் திண்ணைகளின் மீது தற்போது துர்க்கை, சண் டேசுவரர், அப்பர், சம்பந்தர், தட்சிணாமூர்த்தி, கணபதி யோடும் வீரபத்திரரோடும் கூடிய சப்தமாதர்கள், ஆகியோ ரின் அழகிய கற்சிலைகள் தோற்றம் அளிக்கின்றன, இவற்றுள் சப்தமாதர்கள் சிலையும், சண்டேசுவரின் சிலையும் பராந்தகன் காலத்தனவாகிய பரிவார தேவதைகளின் கோயில்களைச் சேர்ந் தனவாக இருக்கக் கூடும்.

பராந்தகன் காலத்ததாகிய இந்த ஒரு தளக்கற்றளியின் கருவறையும் அர்த்தமண்டபமுமே மிகப் பழைமையான பாகங்களாம். இதன் கருவறை பதினான்கடிப் பக்கமுள்ள சதுர வடிவானது. இதன் முன், அர்த்த மண்டபம் ஆறடி நீண்டுள்ளது. இவற்றின் சுற்றுச் சுவர்களில் ஐந்து தேவ கோஷ்டங்கள் உள்ளன. இதன் சிகரம் வட்டவடிவமானது.

கருவறையின் சுவரில் தெற்கே தட்சிணாமூர்த்தி, மேற்கே லிங்கோத்பவர், வடக்கே பிரமன் ஆகியவரின் அழகிய சிலைகள் காணப்படுகின்றன. அர்த்த மண்டபத் தென் சுவரில் கணபதியின் சிலையும் வட சுவரில் துர்க்கையின் சிலையும் காட்சியளிக்கின்றன. அர்த்த மண்டப வாயிலின் சரத்தின்மீது அநந்தசயனப் பெருமாளின் சிலையைக் காணலாம். உள்ளூர் மக்கள் இச்சிலையைப் பரசுராமரோடு இணைத்து அவருடைய தவக்கோல நிலை என்று குறிப்பிடுவது பொருத்தமற்றது.

தேவ கோஷ்டங்களின் மேல் புறத்தில் நடுவில் அழகிய சிறு கற்சிலைகளால் அலங்கரிக்கப்பட்ட மகர தோரணங்கள் செதுக்கப்பட்டுள்ளன. தட்சிணாமூர்த்தியின் கோஷ்டத்தின்மேல் உள்ள தோரணத்தில் நடராசர் உருவமும், ஏனைய தோரணங்களில் யோக நரசிம்மர், கஜசம்ஹாரமூர்த்தி, பார்த்தசாரதி, அர்ச்சுனன், பள்ளி கொண்ட பெருமாள், லிங்கபூசை ஆகிய அரிய சிற்பங்களும் காட்சிக்கு இனியன. கொடுங்கையின் மீதுள்ள கூடுகளிலும் திரிபுராந்தகர், லிங்க பூசை முதலிய சிற்பங்கள் நேர்த்தியாக அமைந்துள்ளன.

கருவறையிலும் அர்த்த மண்டபச் சுவர்களிலும் முதலாம் பராந்தகனுடைய பல கல்வெட்டுக்களைக் காணலாம். வட சுவரில் பராந்தகனுடைய 19-ஆம் ஆண்டுக்கல்வெட்டும் மேற்குச் சுவரில் 10, 12, 37-ஆம் ஆண்டுக் கல்வெட்டுகளும் தென் சுவரில் 19, 22, 26-ஆம் ஆண்டுக் கல்வெட்டுகளும் உள்ளன.

1925-26-ஆம் ஆண்டுக் கல்வெட்டிலாகா அறிக்கையில் இக்கோயில் பழைமையானது எனவும், இங்குமுதலாம் ஆதித்தன், முதலாம் பராந்தகன் ஆகியோருடைய கல்வெட்டுக்கள் உள்ளன எனவும் குறிப்பிடப்பட்டுள்ளன. இங்கு முதலாம் ஆதித்தன் காலக் கல்வெட்டு எதுவும் காணப்படவில்லை. இது

முதலாம் பராந்தகன் காலத்திலேயே கற்றளியாக எடுக்கப் பட்ட கோயிலாகும். இங்கு இராசகேசரி என்ற பெயரில் அமைந்துள்ள இரண்டு கல்வெட்டுகளும் இராசகேசரியான சுந்தர சோழன் காலத்தவை என்பது அறிந்து உளங்கொளத் தக்க செய்தியாகும்.

இக் கோயிலிலுள்ள முதலாம் பராந்தகனுடைய 12–ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று வரலாற்றுராய்ச்சிக்குப் பெரிதும் பயன் தருவதாகும். அக்கல்வெட்டு அவ்வாண்டில் குன்றக் கூற்றத்துச் சிறு பழுவூரிலுள்ள திருவாலந்துறை மகாதேவ ருக்கு ஒரு நுந்தா விளக்கு எரிப்பதற்கு 90 ஆடுகள் விடப் பட்டதானச் செய்தியைத் தெரிவிக்கிறது. சோழ சேனுதிபதி யான பழுவேட்டரையன் கண்டன் அமுதன் பாண்டியர்களே யும் சிங்களர்களேயும் வெள்ளுர் என்ற இடத்தில் முறியடித்து வாகை சூடிய மாபெரும் வெற்றியைக் கொண்டாடவே இவ் விளக்கு எரிப்பதற்கான தானம் செய்யப்பட்டது. இதே வெற்றியைக் கொண்டாடவே ஏற்பட்ட மற்ருெரு தானத் தைத் திருப்பாற்கடலிலுள்ள கல்வெட்டொன்றும் குறிப்பிடு கிறது. இவ்வெற்றியினுல் பாண்டிய மன்னன் இரண்டாம் இராசசிம்மன் தோற்கடிக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது கொள்ளக் கிடக்கிறது.

பரகேசரிவர்மனின் ஆரும் ஆண்டில் திருவாலந்துறை மகாதேவருடைய திருவிழாக் காலத்தில் சாக்கைக் கூத்து* மூன்று நாட்கள் நடைபெறுவதற்கு ஒன்றரைக் கழஞ்சுப் பொன்னே முதலாக .வைத்து, ஆடுபவருக்கு ஊதியமாக மூன்று கல நெல் தருவதற்கு வசதி செய்யப்பட்ட செய்தி கல்வெட்டொன்ருல் அறியப்படுகிறது. இப் பரகேசரிவர்மன் பராந்தகனே பிற்பட்ட ஒருவனே என்பதைத் துணிந்து கூற முடியவில்லே.

---

* சாக்கைக் கூத்து என்பது சங்ககாலம் முதற்கொண்டே தமிழ் நாட்டில் பிரபலமாக ஆடப்பட்டுவந்த கூத்தாகும். சேரன் செங்குட்டு வன் வடநாடு சென்று வெற்றி வீரனுக மீண்டு வந்த அன்று அவன் தலைநகரான வஞ்சிமாநகரில் அவன் வெற்றி விழாவைக் கொண் டாடும் முகத்தான் மறையோர் நிரம்பிய பறையூரைச் சார்ந்த கூத்தச் சாக்கையனுல் கொடுகொட்டியாடல் என்ற சிறந்த கூத்து ஆடப்பட் டது. சிவபெருமான் அம்மையப்பர் வடிவிலிருந்து அக்கூத்தை ஆடிய போது அவருடைய வலப்பாதி மட்டும் ஆடவும் பார்வதிக்குரிய இடப்

பரகேசரிவர்மனின் 15-ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று திருவாலந்துறை மகாதேவர் கோயிலைப் பழு வேட்டரையன் மறவன் கண்டன் கட்டினான் என்று குறிப்பிடுகிறது. இக் கோயிலில் பரகேசரிவர்மனின் 10-ஆம் ஆண்டுக் கல்வெட்டே மிகப் பழைமையானதால் பராந்தகனுடைய 10-ஆம் ஆண்டாகிய கி. பி. 917-க்குச் சற்று முன்னதாக இக் கோயில் கட்டப்பட்டிருக்கலாம். இப் பரகேசரிவர்மன் முதலாம் பராந்தகன் அல்லனெனின், பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அரியணையேறிய உத்தம சோழன் காலத்தில் இத் திருப்பணி முற்றுப் பெற்றிருக்கலாம் என்று கொள்ள நேரிடும்.

இக் கோயிலில் பல செப்புத் திருமேனிகள் காணப்படுகின்றன. அவற்றுள் இஷபவாகனர், திரிபுராந்தகர், ஆடும் பாலசுப்பிரமணியர் ஆகியதிருமேனிகள் மேதக்க சிற்ப நுட்பம் உடையவை.

அழகிய துவாரபாலகர் சிலையொன்று இக் கோயிலின் வெளிப் பிராகாரத்தையடுத்த உட்பகுதியில் காணப்படுகிறது. இது பசுபதீசுவரத்தின் வாயிற் காவலர் சிலைகளில் ஒன்றாகவா இருந்திருக்க வேண்டும். பராந்தகன் காலத்ததாகிய

---

பாதி அசையவில்லையாம். எனவே, அக் கூத்தினை ஆட முன்வந்த சாக்கையன் தன் வலப் பாதியை ஆணாகவும் இடப் பாதியைப் பெண்ணாகவும் அலங்கரித்துக் கொண்டு இடப்பாதியில் அசைவு தோன்றாது வலப்பாதியின் மட்டும் அசைவு தோன்ற ஆடிய செய்தி, சிலப்பதிகாரத்தில்,

திருநிலைச் சேவடி சிலம்புவாய் புலம்பவும்
பரிதரு செங்கையில் படுபறை ஆர்ப்பவும்
செங்கண் ஆயிரம் திருக்குறிப்பு அருளவும்
செஞ்சடை சென்று திசைமுகம் அலம்பவும்
பாடகம் பதையாது சூடகம் துளங்காது
மேகலை ஒலியாது மென்முலை அசையாது
வார்குழை ஆடாது மணிக்குழல் அவிழாது
உமையவள் ஒருதிறன் ஆக ஓங்கிய
இமையவன் ஆடிய கொட்டிச் சேதம்
பாத்தகு நான்மறை மறையோர் பறையூர்
கூத்தச் சாக்கையன் ஆடலின் கண்டு'

என்று வருணிக்கப்பட்டுள்ளது. அத்தகைய மேதக்க சாக்கைக் கூத்து சிலப்பதிகார காலத்துக்கு மிகவும் பிற்பட்ட சோழர் காலத்தும் நம் நாட்டில் ஆதரிக்கப்பட்டு வந்தசெய்தி பாராட்டத் தக்கது.

இச்சிலை பத்தாம் நூற்றுண்டின் முற்பகுதியைச் சேர்ந்த சிறந்த சிலைகளில் ஒன்ருகக் கொள்ளக் கிடக்கிறது.

## புள்ளமங்கை

### பிரமபுரீசுவரர் (திருவாலந்துறை மகாதேவர்) கோயில்

புள்ளமங்கை என்பது தஞ்சை மாவட்டத்தில் தஞ்சாவூரிலிருந்து ஒன்பது கல் (14½ கி. மீ.) தொலைவில் பசுபதி கோயில் புகை வண்டி நிலையத்துக்கு அருகில் உள்ளது. இங்குள்ள கோயில் பிரமபுரீசுவரர் கோயிலென்று வழங்கப்படுகிறது. பண்டைக் காலத்தில் இதுவும் திருவாலந்துறை மகாதேவர் கோயிலென்று வழங்கப்பட்டது. பராந்தகன் காலத்துக் கோயில்களில் இது எல்லா விதங்களிலும் தலைசிறந்தது. இது சம்பந்தரால் பாடப் பெற்ற ஸ்தலம்.

பராந்தகன் என்று தெளிவாகப் பெயர் சுட்டப்படாத பரகேசரிவர்மன் பெயரால் அமைந்த கல் வெட்டுகள் சில இக் கோயிலில் காணப்படுகின்றன. அவை பெரும்பாலும் பராந்தகனுக்கே உரியனவாக இருக்கலாம் என்றே ஆராய்ச்சியறிஞர் துணிகின்றனர்.

பரகேசரிவர்மன் மூன்ரும் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று அவ்வூர்ச் சபையோர் திருவாலந்துறை மகாதேவரின் கோயிலின் முன் மண்டபத்தில் கூடி இருபத்தைந்து காசு பெற்றுக் கொண்டு நடுவிற் சேரி (நல்லுச் சேரி?) யில் எழுந்தருளியுள்ள காலபிடாரியாருக்கு ஒன்றரை மா நிலத்தை விற்றுக் கொடுத்து அந்நிலத்தை இறையிலியாகவும் ஆக்கிக் கொடுத்த செய்தியைக் குறிப்பிடுகிறது. இது பராந்தகன் கல்வெட்டாயின் இதுவே கோயிலிலுள்ள மிகப் பழைய கல்வெட்டாக அமையும். அங்ஙனமாயின் இக் கோயில் கி. பி. 910-க்கு முன்னரே எடுப்பிக்கப்பட்டதாதல் வேண்டும்.

பரகேசரியின் ஆரும் ஆண்டுக் கல் வெட்டு ஒன்று இக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் மகா தேவருக்குச் செம்பியன் மாவலி வாணராயன் வழங்கிய நிலத்தானத்தைக் குறிக்கிறது. இம் மாவலி வாணராயனென்பான் கங்ககுலக் குரிசிலான பிருதிவீபதி என்பான். உதயேந்திரச் செப்பேடுகளும் பரகேசரி பராந்தகனின் 9-ஆம் ஆண்டினதாகிய சோளிங்கபுரம் கல்வெட்டும் இவ்விரண்டாம் பிருதிவீபதியின் செயல்களையும்

தானங்களையும் குறிப்பிடுகின்றன. பராந்தகன் தன் ஆட்சி ஆறும் ஆண்டுக்குள் (கி. பி. 911-12) பாணர்களைப் போரில் வென்றபோது அவனுக்கு உறுதுணையாக உதவியவன் இவ் விரண்டாம் பிருதிவீபதியே. பராந்தகன் பாண மன்னனையும் அவனுக்கு உதவியாக வந்த இரட்ட மன்னனான இரண்டாம் கிருஷ்ணனையும் திருவல்லத்தில் கி. பி. 913-இல் தோற்கடித்த பின், இவ்விரண்டாம் பிருதிவீபதிக்குப் பாணநாட்டையும், பாணாதிராசன், செம்பிய மாவலி வாணராயன் என்ற பட்டங்களையும் வழங்கினான். இப் பிருதிவீபதி இக் கோயிலுக்கு நிலத்தானம் வழங்கினான். எனவே, இக் கல் வெட்டில் குறிக்கப் பட்டுள்ள பரகேசரி பராந்தகனே என்பது தெளிவு.

பராந்தகனின் 11-ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று இவ் வூர் மகாதேவருக்கு வழங்கப்பட்ட விளக்குத் தானம் ஒன் றைக் குறிப்பிடுகிறது. பராந்தகனின் 18-ஆம் ஆண்டுக் கல் வெட்டு ஒன்று பராந்தக மன்னனே இம் மகாதேவருக்கு 500 கலம் நெல் விளையக் கூடிய ஐந்து வேலி நிலத்தைக் குடி நீக்கிய தேவதானமாக வழங்கியதோடு ஐந்து கழஞ்சு பொன் னும் வழங்கியதாகக் குறிப்பிடுகிறது. ஆகவே இக் கோயில் சோழ மன்னனின் நேர் கொடையைப் பெற்ற தனிச் சிறப்பு உடையது என்பது குறிப்பிடத்தக்கது. கி. பி. ஏழாம் நூற் றாண்டிலேயே மண்டளியாக அமைந்திருந்திருக்கக் கூடிய இக் கோயில் பராந்தகன் காலத்தில் கற்றளியாக எடுப்பிக்கப் பட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

கிழக்கு நோக்கிய சந்நிதியை உடைய இக் கோயிலின் கரு வறையும் அர்த்த மண்டபமும் பராந்தகன் காலத்தைச் சேர்ந்தவை. கருவறை 25 அடி பக்கமுடைய சதுரமாக அமைந்துள்ளது. இதனுடைய அதிஷ்டானத்திலுள்ள குமுதம், கண்டம், கபோதம், வரிமானம் என்ற பல உறுப்புகளும் நேர்த்தியான வேலைப்பாடுடையவை.

இக் கோயிலின் வெளிச் சுவரில் ஐந்து தேவ கோஷ்டங்கள் உள்ளன. கருவறையின் தென் சுவரில் தட்சிணாமூர்த்தியும் மேலைச் சுவரில் லிங்கோத்பவரும் வட சுவரில் பிரமனும் அர்த்த மண்டபத்தின் தென் பாகத்தில் கணபதியும் வட பாகத்தில் துர்க்கையும் வீற்றிருக்கின்றனர்.

**கணபதி :** கணபதியின் கோஷ்டத்தில் இரு பக்கங்களிலும் தேவகணங்கள் காணப்படுகின்றனர். இடம்புரித் துதிக்கையை யும், ஏனைய நான்கு கரங்களையும், மேலே அரைவட்டக் குடை யையும், அதன்மேல் பிரபாவளியையும், குடையின்மேல் அஞ் சலி செய்யும் கந்தருவர் இருவரையும், இரட்டைப் பத்ம இதழ் உடைய பீடத்தையும் கொண்டு உட்கார்ந்த நிலையில் காணப் படும் விநாயகப் பெருமானின் சிலை தலைசிறந்த சிற்ப மேம் பாட்டோடு திகழ்கிறது.

**லிங்கோத்பவர் :** அடி முடி காண இயலா அண்ணலாக, ஒளிப்பிழம்பாகக் காட்சியளிக்கும் இலிங்கத்திலிருந்து சிவ பெருமான் வெளிப்படும் தோற்றம், கீழ், 'அடி தேடி அறிவல்' எனச் சென்ற வராகம், மேலே, 'முடிதேடி முன்வருவல்' என முனைந்த அன்னம், இருபுறமும் பிரமன், திருமால் இவர்களின் நின்ற திருக்கோலம் ஆகியவற்றுடன் லிங்கோத்பவ மூர்த்தி யின் சிலை காட்சியளிக்கிறது.

**பிரமன் :** அரைவட்டக் குடையின் கீழ், தலையில் சடா மகுடம் திகழ நான்கு முகங்களுடன், நான்கு கைகளில் மேல் கைகளில் கடமும் அக்ஷமாலையும் விளங்க, கீழ் வலக்கையை அபய ஹஸ்தமாகவும் கீழ் இடக்கையைக் கடியவலம்பித (துடைமீது அமர்ந்த) நிலையதாகவும் கொண்டு, காதில் குண்டலங்களும், மார்பில் ஆரமும், இடத்தோளில் குறுக் காகப் பூணூலும், வயிற்றில் உதரபந்தமும், இடையில் கடிசூத் திரமும், அழகிய அந்தரீயமும், நேர்த்தியான உத்தரீயமும் தாங்கி இரு புறங்களிலும் முனிவர் இருவர் புடை நிற்ப நீண்ட மெல்லிய உருவத்தோடு காட்சியளிக்கும் பிரமன்சிலை பராந் தகன் காலத்துச் சிற்பத்திறமைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு எனலாம்.

**துர்க்கை :** துர்க்கை மகிடாசுரன் மீது நின்ற திருக் கோலத்தில் காட்சி யளிக்கிறாள். அவளுடைய இரு பக்கமும் அவள் வாகனங்களான சிங்கமும் கலைமானும் காட்சியளிக் கின்றன. துர்க்கைக்குத் தலைப் பலி வழங்கும் வீரர் சிலைகள் விம்மிதத்துடன் காட்சியளிக்கின்றன. எட்டுக் கைகளுடன் காட்சியளிக்கும் துர்க்கையின் முன் வலக்கை அபயஹஸ் தமாக உள்ளது; முன் இடக்கை கடியவலம்பித நிலையில் உள்ளது. ஏனைய கைகளில் தேவி சக்கரம், வாள், அம்பு,

சங்கு, கேடயம், வில் இவற்றை ஏந்தியவளாய்க் காட்சியளிக்கிருள். நல்ல உயரத்துடனும் மென்மையுடனும் நல்லுடையும் சிறந்த ஆபரணங்களும் கொண்டு மிளிரும் இத்துர்க்கையின் சிலை பிரமனின் சிலையைப்போல நுட்பமான சிற்பத்திறமைக்கு எடுத்துக் காட்டாகத் திகழ்கிறது,

இக் கோஷ்டங்களின் கீழும், கபோதத்திற்கு அடியில் உள்ள கண்டப் படையிலும், மிக நுட்பமான கலைநலம் பொருந்திய கஜசம்ஹாரமூர்த்தி, அந்தகாசுரவதமூர்த்தி, பூமி தேவியைச் சுமந்துவரும் ஆதிவராகமூர்த்தி, அனந்தசயன மூர்த்தி, சிவதாண்டவ மூர்த்தி ஆகிய சிற்றுருவங்கள் காணப் படுகின்றன.

கோஷ்டங்களுக்குக் கீழ்வரிசையில் நடுவில் யாளி வரிமானமும் இரு கோடியிலும் திறந்த வாயினிடை நிற்கும் மானிட வடிவங்களைக் கொண்ட மகரமீன்களும் காணப்படுகின்றன. கபோதப் படையின் அடிப்பகுதியும் கொடுங்கையின் ஓரங்களும் வட்ட வடிவங்களால் அணி செய்யப் பட்டுள்ளன. கொடுங்கையின் புறத்திலும் கோடியிலும் பூக்கள் செதுக்கப்பட்டுள்ளன.

தேவ கோஷ்டத்தின் இரு மருங்கிலும் அரைத்தூண்களும் அவைகளின்மேல் மகரதோரணங்களும் அமைந்துள்ளன. அரைத்தூண்களை யடுத்துத் தேவகோஷ்ட தேவதைகளின் பரிவாரங்களும் வாகனங்களும் காட்சியளிக்கின்றன. இவற்றை யடுத்துத் தூண்கள் நிறுத்தப்பட்டுள்ளன. இத்தூண்களின் ‘கால்’ என்று சொல்லப்படும் அடிப்பகுதி சதுரமாயும் எட்டுப் பட்டை தீட்டப்பட்டும் காணப்படும். மேற் பகுதியில் பூக்கள், மாலைகள், வட்டங்கள் போன்ற பல சித்திர வேலைப் பாடுகளைக் காணலாம். தூணின் மேற்பகுதி கலசம், கும்பம், பத்மம், பலகை, போதிகை என்ற பல உறுப்புக்களை உடையது. காஞ்சி ஸ்தூபத்தின் தோரணத்தை அலங்கரிக்கும் சாலபஞ்சிகைச் சிற்பங்களைப் போன்ற பல அழகிய கற்சிலைகள் போதிகையின் மேற்புறத்திலும் பக்கங்களிலும் உள்ளன. மனிதர்கள் சவாரி செய்வனவாக அமைந்து நிற்கும் யாளிகளையும் போதிகைகளின் பக்கங்களில் காணலாம். போதிகையின் பக்கங்கள் கோணவடிவினவாகவும் வரந்தைகள் உடையனவாகவும் நடுவிலுள்ள மேடைகளில் சிற்றுருவச் சிலைகளைப் பெற்றனவாகவும் திகழ்கின்றன.

இரு தேவகோஷ்டங்களின் நடுவில் 'இருதள கோஷ்ட ஞ்சரம்' சித்திரிக்கப்பட்டுள்ளது. கொடிக்கருக்கு தீட்டப்பெற்ற கொடுங்கை, யாளிவரிமானம் இவற்ருேடு மேல்தளத்தின் நடுவில் அமைக்கப்பெற்ற அழகிய பெண் சிலையையும் காணலாம். கோஷ்டத்தின் தலைப்பாகம் விமானக் கீழ்த்தளக் கொடுங்கையிலுள்ள கூடுகளுக்குள் செருகப்பட்டது போலக் காணப்படுகிறது.

கருவறைக்கு மேல் இரு தளங்கள் சாலைகளாலும் கூடங் களாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளன. கிரீவம் சதுர வடிவமானது. இதன் அடிப்படையின் கோடிகளில் இரட்டை நந்திகள் காணப்படுகின்றன. கிரீவத்தின் நடுவில் நான்கு திசைகளையும் நோக்கித் தேவதைகளோடு கூடிய கூடுகளால் அலங்கரிக்கப் பட்ட நான்கு தேவகோஷ்டங்களிலும் வனப்புடைய தெய்வச் சிலைகள் காணப்படுகின்றன. இதன் சிகரமும் ஸ்தூபியும் கிரீவத்தைப் போன்று சதுரவடிவுடையனவே. அண்மைக் காலத்தில் இவை பழைமை அமைப்புக் கெடாதவாறு புதுப்பிக் கப்பட்டுள்ளன.

முதற் பராந்தகன் காலத்துக் கோயில்களில் இப் புள்ள மங்கைக் கோயில் இணையற்ற கலைச் செல்வமாகும். இக் கோயிலையும் இதில் திகழும் ஒப்பற்ற சிலைகளையும் நன்முறை யில் காக்க வேண்டுவது நம்மனோர் கடமையாகும்.

## எறும்பூர் (உறுமூர்)

### கடம்பவனேசுவரர் கோயில்

தென்னார்க்காடு ஜில்லாவில் சிதம்பரத்திலிருந்து விருத் தாசலம் செல்லும் பெருவழியில் 14–ஆம் கல்லில் (22·5 கி.மீ.) எறும்பூர் என்ற சிற்றூர் உள்ளது. பெருவழியின் இடப்பக் கத்தில் பழம்பெருமை வாய்ந்த கோயில் ஒன்று காணப்படு கிறது. இப்பொழுது அது கடம்பவனேசுவரர் கோயில் என்று வழங்கப்படுகிறது. ஆனால் பழங்காலத்தில் அக்கோயிலின் பெயர் "வடகரை நல்வயலூர்க் கூற்றத்துத் தேவதானம் உறுமூர்" எனவும், கோயிலிலுள்ள இறைவனின் பெயர் 'சிறுத் திருக் கோயில் பெருமானடிகள்' எனவும் வழங்கியனவாக அக்கோயில் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

இக்கோயிலில் பரகேசரிவர்மன் ஆட்சியாண்டுகள் 5-ஆவது முதல் 16-ஆவது முடியப் பல ஆண்டுகளைச் சேர்ந்த கல்வெட்டுகள் பல காணப்படுகின்றன. இவைகள் முதலாம் பராந்தகன் காலத்தையே சேர்ந்தவை போலும். ஆனால் இக்கோயிலில் உள்ள மிக முக்கியமான கல்வெட்டு பராந்தகனுடைய 28-ஆம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டாகும். அதன் வாசகம் பின்வருமாறு :

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மதுரை கொண்ட கோப்பர கேசரி வர்மற்கு யாண்டு இருபத்தெட்

2. டாவது வடகரை நல்வயலூர்க் கூற்றத்துத் தேவதானம் உறுமூர்ச் சிறுத் திருக்கோயில்

3. பெருமானடிகளுக்கு ஸ்ரீ விமானக் கற்றளி எடுப்பித்து அஷ்ட பரிவார கோயில்

4. செய்வித்து உடையார் சோழப் பெருமானடிகள் ஸ்ரீ பராந்தக தேவர்க்கு இளங்கோள

5. ன் குணவன் அபராஜிதன் விண்ணப்பம் செய்ய......

இக்கல்வெட்டினால், இக் கோயில் முதலாம் பராந்தகன் காலத்திற்கு முன்பே மண்டளியாக இருந்தது என்பதும், பராந்தகன் அனுமதிபெற்ற இளங்கோளன் குணவன் அபராஜிதன் ஸ்ரீ விமானத்தைப் பராந்தகனுடைய 28-ஆம் ஆண்டில் (கி.பி. 935) கற்றளியாகச் சமைத்தான் என்பதும், அக்கோயிலில் அஷ்டபரிவாரக் கோயில்களையும் (எட்டுச் சுற்றுக்கோயில்) அமைத்தான் என்பதும் அறியப்படுகின்றன.

முற்பட்ட சோழர்கள் காலத்தில் மூலத்தானத்தைச் சுற்றிலும் எட்டுப் பரிவார தேவதைகளின் கோயில்கள் இருந்து வந்தன என்று முன்பே கூறியுள்ளோம். விசயாலய சோளீசுவரத்திலும், திருக்கட்டளை சுந்தரேசுவரர் கோயிலிலும் இப்பரிவாரக் கோயில்கள் இன்றும் இருந்து வருவதை விளக்கிக் கூறியுள்ளோம். பரிவாரக் கோயில்களின் எண்ணிக்கை எட்டு இருப்பதுதான் பழையமுறை என்ற வரையறைக்குரிய கல்வெட்டுச் சான்று இக்கோயிலில்தான் உள்ளது. இக்கல்வெட்டு இக்கோயிலுக்குத் தனிச்சிறப்பைக் கொடுத்துள்ளது. கல்வெட்டு குறிப்பிட்டிருப்பது போலத் தற்போது இக்கோயிலில் சுற்றுக் கோயில்களைக் காண இயலவில்லை. சிலவற்றின் அடிப்படைகள் மாத்திரம் காணப்படுகின்றன.

கோயில் கற்றளியாகச் செய்யப்படுவதன் முன் அதற்குச் செய்யப்பட்ட தானங்கள் தனிக்கருங்கல் பலகைகளில் பொறிக்கப்பட்டிருக்க வேண்டும். கோயில் கற்றளியாக எடுப்பிக்கப்பட்ட பிறகு அக் கோயிலின் நிபந்தங்கள் சம்பந்தமான கல்வெட்டுகள் புதுக்கோயிலின் கற்சுவர்கள்மீது பொறிப்பிக்கப் பட்டிருத்தல் வேண்டும்.

இக்கற்றளி எடுப்பிக்கப்பட்ட காலத்தில், இது கருவறை; அர்த்த மண்டபம் என்ற இரண்டு உறுப்புக்களையே கொண்டு விளங்கியது. பின் எடுக்கப்பட்ட அம்மன் கோயிலும் முக மண்டபமும் பாண்டியர் ஏகாதிபத்திய காலமான 13–ஆம் நூற்றுண்டைச் சேர்ந்தவை.

சந்நிதி கிழக்கு நோக்கி உள்ளது. கருவறை சதுரமானது. கருவறையின் பக்க அளவு வெளிப்புறம் 15 அடி 2 அங்குலம், உட்புறம் 8 அடி 4 அங்குலமாகும். கருவறையின் முன்பாக உள்ளஅர்த்த மண்டபம் 11 அடி நீளமும்7 அடி அகலமும் உடையது. இதன் கிரீவமும், வட்ட வடிவமான சிகரமும் ஸ்தூபியும் புதியனவாகக் கட்டப்பட்டுள்ளன. பழைய உறுப்புக்கள் சிதைந்துபோகவே இப் புதிய அமைப்புகள் அமைக்கப்பட்டிருக்கவேண்டும்.

கருவறையின் வெளிச்சுவர்களில் மூன்று தேவகோஷ்டங்கள் இருக்கின்றன. இக்கோயிலைச் சேர்ந்த நந்தி, பைரவர் ஆகிய சிலைகள் முகமண்டபத்தில் காணப்படுகின்றன.

தெற்குச் சுவரில் உள்ள கோஷ்டத்தில் முகமண்டபத்தில் தஷிணுமூர்த்தியின் சிலை காணப்படுகிறது; 3 அடி 6 அங்குல உயரமும் ஆறுஅங்குலஅகலமும் முக்கண்களும் சடாபாரமும் கொண்டு பத்மபீடத்தின் மீது அமர்ந்து காணப்படும். இச்சிற்பத்தின் இடக்கால் தொங்க விடப்பட்டுள்ளது; வலக்கால் இடத்துடைமீது அமர்ந்துள்ளது, பின் வலக்கையில் அக்ஷமாலையும் பின் இடக்கையில் பத்மமும் (அக்கினி ?) முன்கைகளில் சின்முத்திரையும் வரதஹஸ்தநிலையும் கொண்ட இந்த ஞான தஷிணுமூர்த்தி, கழுத்தில் ஆரங்களும் மார்பில் பூணூலும் வயிற்றில் உதரபந்தமும் கைகளில் வளையல்களும் புயங்களில் கேயூரங்களும் அணிந்திருப்பதோடு முகத்தெளிவாலும் மௌனத்தாலுமே போதிக்கும் ஆற்றலுடைய ஞானச் செல்வராகவும் காட்சியளிக்கிருர்,

மேற்குக் கோஷ்டத்தில் அருணுசலேசுவரர் என்றும் சிவயோகி என்றும் வழங்கப்படும் சிற்பம் ஒன்று இரண்டடி ஒன்பது அங்குல உயரமும் ஓரடி ஏழங்குல அகலமும் உடையதாய்ப் பீடத்தில் அமர்ந்து, பின்கைகளில் மானும் மழுவும் ஏந்திக் காட்சியளிக்கிறது. சடாபாரமும் ஏற்ற அணிகளும் கொண்டு முகச் சாந்தியும் அகப்பொலிவும் உடையதாய் விளங்கும் இச் சிலையின் முன்கைகள் யோக முத்திரையை உடையன. தனிச் சிறப்புடைய இம் மூர்த்தி காண்டற்கினியது.

வடக்குக் கோஷ்டத்தில் காணப்படும் பிரமனுடைய சிலை இரண்டரையடி உயரமும் ஓரடி எட்டங்குல அகலமும் உடைய தாய்க் காணப்படுகிறது. முன்னிருகைகளும் யோக முத்திரை யுடன் அமையப் பின்னிருகைகளில் அக்ஷமாலையும் குண்டி கையும் கொண்டு நான்கு முகங்களுடன் பத்ம பீடத்தில் அமர்ந்து பலவகை அணிநலன்களோடு காணப்படும் இச் சிலையும் உவகையளிக்கும் வனப்பினதே.

இ.்.து,ஏனையகோயில்கள் போலவன்றி, நிச்சயமாக முதல் பராந்தகனின் 28-ஆம் ஆண்டாகிய கி. பி. 935-இல் கட்டப் பட்டது என்பது உறுதியாக உணரப்படுவதால் இக்கோயிலில் உள்ள சிலைகள் பராந்தகன் காலச் சிலைகளுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும். முற்பட்ட சோழர்களுடைய கற்றளி களில் எட்டுப் பரிவார தேவதைகளுக்குச் சுற்றுக் கோயில் அமைக்கும் வழக்கம் உண்டு என்பதை நாம் அறிவதற்குக் கருவியான கல்வெட்டினைத் தன்னிடத்துக் கொண்டிருப்பதும் இக்கோயிலின் சிறப்பாகும்.

## தொண்டை மாநாடு

### ஆதித்தேசுவரம் (கோதண்ட ராமேசுவரம்)

தொண்டைமாநாடு என்ற ஊர் காளத்தியிலிருந்து 6 கல் (9·6 கி. மீ.) தொலைவில் உள்ளது. பண்டைக் காலத்தில் இவ்வூர் தொண்டைமான் ஆற்றூர் எனவும், தொண்டைமான் பேராற்றூர் எனவும் வழங்கப்பட்டதாகக் கல்வெட்டுக்களால் அறிகிறோம்.

காஞ்சிக்கு அருகில் உள்ள திருமால்புரம் என்ற ஊரில் கோநேரின்மை கொண்டானுடைய 14-ஆம் ஆண்டுக் கல் வெட்டு காணப்படுகிறது. இக்கல்வெட்டு உத்தமசோழ

னுடைய காலத்ததாகும். இச்சாசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ள பழைய கொடை ஒன்று 'தொண்டைமான் ஆற்றூர்த் துஞ்சிய தேவரின்' 21-ஆம் ஆண்டில் கொடுக்கப்பட்டதாக அறிகிறோம். 'தொண்டைமான் ஆற்றூர்த் துஞ்சியதேவர்' என்ற தொடர் முதலாம் ஆதித்தனையே குறிப்பதாகும். இக் கல்வெட்டி லிருந்து ஆதித்தனுடைய 21-ஆம் ஆண்டில் தொண்டை நாட்டுத் திருமால்புரம் சோழர் ஆட்சிக்கு உட்பட்டிருந்ததை அறியலாம். எல்லைப்புறத்தில் போர் நடத்திய ஆதித்தன் தொண்டைமான் ஆற்றூரில் இறந்தானாகவே, அவன் மகன் பராந்தகன் தன் தந்தை உயிர் துறந்த புனித இடத்தில் தனது 34-ஆம் ஆண்டிற்கு முற்பட்டே, கோதண்டராமன் என்று மறு பெயரைக் கொண்ட தன் தந்தையின் நினைவால் ஆதித் தேசுவரம் அல்லது கோதண்டராமேசுவரம் என்ற பள்ளிப் படைக் கோயிலை எடுப்பித்திருக்க வேண்டும் என்று அறி கிறோம். கோதண்டராமன் என்பது ஆதித்தனுடைய மறு பெயர் என்பது வீர ராசேந்திரனுடைய கன்னியா குமரிக் கல் வெட்டால் உணரப்படுகிறது. இக்கோயில் சுவரில் காணப் படும் பராந்தக சோழனுடைய 34-ஆம் ஆண்டுக் கல்வெட்டும் இச்செய்தியை வலியுறுத்தும். இக்கல்வெட்டு:—

மதுரை கொண்ட கோபர கேசரியின் 34-ஆவது ஆண்டு திருவேங்கடக் கோட்டத்து ஆற்றூர் நாட்டுத் தொண்டை மான் பேராற்றூர்ச் சபையோரும் நகரத்தோரும் பள்ளிப் படை வாகீசுவர பட்டாரர் ஸ்ரீ கோதண்டராமேசுவரமாகிய ஆதித்தேசுவரத்து ஆழ்வாருக்குப் புரட்டாசித் திங்கள் திருக் கேட்டை முதல் எதிர் ஏழு நாளும், திருநட்சத்திரமாகிய சதை யத்தன்றும் திருஉற்சவம் செய்வதற்கும் பெருந்திருவமுதுக் கும் உடலாகப் பொன் 105 கழஞ்சும் 4000 காடி நெல்லும் கொண்டு இவைகளின் பலிசையால் ஏழுநாள் திருவிழா நடப் பிக்கவும் அச்சமயம் தபசிகள் 200 பேர், பிராமணர் 300 பேர், பல சமயத்தார் 500 பேர் ஆகிய 1000 பேர்களுக்கு உணவளிக் கவும், இத்திருவிழாவின் போது தேவர்க்குத் திருவமுது, திருக்காளத்தி ஆழ்வாருக்குப் பெருந் திருவமுது, ஊட்டுச் சாலைக்கு வேண்டிய பொருள்களாகிய அரிசி, நெய், கறி, மோர், உப்பு, புளி, விறகு, இலை, மஞ்சள், வெற்றிலை, பாக்கு, சுண்ணும்பு ஆகியவற்றைத் திட்டப்படி அளிக்கவும், நீரட்டு வானுக்கும், குசக்கலம் இடுவானுக்கும், பூவிடுமாலைக்காரனுக்

கும், விழாக் காலங்களில் கூத்தாடிஞருக்கும், பாடிஞருக்கும், அவ்வூர் மத்தியஸ்தனுக்கும் திட்டப்படி உதவி செய்யவும் ஒத்துக்கொண்டு அத்தருமத்தைச் சந்திராதித்தவல் வழுவாமல் நடத்துவாராக உறுதிகூறிய செய்தியைத் தெரிவிக்கிறது.

புனித அஸ்தியைப் புதைத்தவிடத்தில் அதீதகிருகமும், அதன் நினைவாக லிங்கப்பிரதிஷ்டை செய்த கோயிலும் அமைப்பது பண்டை மரபு என்பது இக் கல்வெட்டால்மட்டுமன்றிப் பல்லவ மன்னன் கம்பவர்மனின் எட்டாம் ஆண்டில் கங்க மன்னஞன பிருதிவீபதி இறக்கவே அவனுடைய மகன் இராசாதித்த மகாதேவன் தன் தந்தையைப் பள்ளிப்படுத்த விடத்து ஆலயமும் அதீதகிருகமும் சோழபுரத்தில் எடுப்பித்தான் என்ற செய்தியாலும் வலியுறுகிறது.

ஆதித்தேசுவரம் இருதளக் கற்றளி. கருவறையும் அர்த்த மண்டபமும் கொண்ட இக் கோயிலின் கருவறையில் உருண்டை வடிவான இலிங்கம் காணப்படுகிறது. இக்கோயிலைச் சுற்றித் தேவகோஷ்டங்கள் இருக்கின்றன. இதன் இரண்டாம் தளத்தின் வெளிப்புறத்தைச் சாலைகளும் கூடங்களும் அணி செய்கின்றன. இதன் சதுர வடிவமான கிரீவமும் சிகரமும் உருண்டை வடிவான ஸ்தூபியும் தற்போது புதுப்பிக்கப்பட்டனவே. கிரீவத்தின் நான்கு திக்கிலும் உள்ள கோஷ்டங்களில் சிலைகள் உள்ளன. கிரீவத்தின் அடித்தளத்தில் நான்கு மூலைகளிலும் ரிஷபங்கள் காணப்படுகின்றன. தன் தந்தையின் பள்ளிப்படையாகப் பராந்தகன் கட்டிய இக் கோதண்டராமேசுவரம் சரித்திரச் சிறப்புடையது. ஆதலின் இதனை நன்முறையில் பாதுகாக்க மத்திய தொல்கலை இலாகா அதிகாரிகளும் ஆந்திரப் பிரதேச அரசாங்கத்தாரும் ஆவன செய்வார்களாக.

## அத்தியாயம் 8

# இராசகேசரி சுந்தரசோழன் என்ற இரண்டாம் பராந்தகன்

இராசகேசரி சுந்தரசோழன் அரிஞ்சிகையின் மகன்; இரண்டாம் பராந்தகன் என்று குறிப்பிடப்படுபவன். "ஆற்றலில் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளான சிவபெருமானுக்குச் சமமானவன். பகை மன்னரின் வலியை அழித்தவன்; குடிமக்களைத் தன் நற்குணங்களால் வசீகரித்துக் கொண்டு ஆழிசூழ் உலகை ஆண்டவன். செவ்வூர் என்றவிடத்தில் நிகழ்ந்த போரில் பகை வீரர்களைத் தன் அம்பினாலும், பகைவருடைய யானைகளைத் தன் வாளாலும், வெட்டி வீழ்த்தி மலையுச்சியிலிருந்து இரத்த ஆறு ஓடச் செய்தவன். மன்மதனையொத்த அழகுடையவன் ஆதலின் சுந்தரசோழன் என்று வழங்கப்பட்டான். பராந்தகனோடு சேவூரில் நடந்த போரில் தோற்றோடிய வீரபாண்டியன் மேற்கு மலையில் ஓடி ஒளிந்தான்" என்று ஆனைமங்கலச் செப்பேடுகள் கூறுகின்றன.

"மனுவே இவ்வுலகில் கலியை வென்று மனுநீதியை மறுபடியும் பரப்புவதற்காகவே இம்மன்னனாக அவதாரம் செய்தான்" என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் கூறுகின்றன.

'காஞ்சியிலுள்ள பொன்மாளிகையில் துஞ்சினதேவன்' என்று இம்மன்னன் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படுகிறான்.

இவனுடைய பட்டத்தரசியான வானவன் மாதேவி கற்பில் அருந்ததியை நிகர்த்தவள். தன் கணவன் உயிர் நீத்ததும் "தேவலோகக் கந்தருவப் பெண்கள் அவனைக் கவர்ச்சி செய்துவிடுவார்களோ என்றஞ்சித்" தானும் உடன்கட்டையேறி அவ்வரசனைச் சுவர்க்கத்திலும் பின்தொடர்ந்தாள்,

இவளுடைய மகளான குந்தவையாழ்வார், முதல் இராச ராசன் காலத்தில், தம் தாயாருக்குப் பிரதிமை (உருவச் சிலை) ஒன்று தஞ்சைப் பெருங் கோயிலில் செய்து அமைத்த செய்தி தஞ்சைக் கல்வெட்டால் அறியப்படுகிறது.

## கொடும்பாளூர் (கொடும்பை)

சுந்தரசோழன் காலத்தில் எடுப்பிக்கப்பட்ட கோயில் களில் தலைசிறந்தது கொடும்பாளூர் மூவர்கோயிலாகும். சோழர் தலைநகரான உறையூரிலிருந்து பாண்டியர் தலைநக ரான மதுரைக்குச் செல்லும் பெருவழியின் இடையிலுள்ள மாநகர் இது என்ற செய்தி

நெடும்பேரத்தம் நீந்திச் சென்று
கொடும்பை நெடுங்குளக் கோட்டகம்புக்கால்
*(சிலப்பதிகாரம்—11; 70—71 அடி)*

என்ற சிலப்பதிகாரப் பகுதியால் உணரப்படுகிறது.

சேக்கிழார் தம் திருத்தொண்டர் புராணத்தில் 'குருகு உறங்கும் கோனாட்டுக் கொடி நகரம் கொடும்பாளூர்' என்று இவ்வூரவரான இடங்கழி நாயனார் புராணத்தில் கொடும்பாளூ ரைக் குறிப்பிட்டுள்ளார். இக் கொடும்பாளூர் கோயில்கள் மலிந்த நகரமாகும். பண்டொருகால் இங்கு 108 கோயில்கள் இருந்தன என்று கூறப்படுகிறது. இங்கு வாழ்ந்த இடங்கழி நாயனாரின் குடியில் சோழன் ஆதித்தன் பிறந்தான் என்று கூறுவதுண்டு.

திருச்சியிலிருந்து 23 கல் (37 கி.மீ) தொலைவுள்ள இவ் வூரில் முந்திய சோழர் காலத்துக் கோயில்கள் இரண்டுள.

## முசுகுந்தேசுவரர் கோயில்

கொடும்பையிலுள்ள பழங் கோயில்களில் ஒன்று தற் போது முசுகுந்தேசுவரர் கோயில் என்று வழங்கப்படும் கோயி லாகும். அக்காலத்தில் இது முதுகுன்றமுடையார் கோயில் என்று வழங்கப்பட்டது. இக்கோயில் முதலாம் பராந்தகன் காலத்தில் மகிமாலய இருக்குவேள் என்பவனால் கட்டப்பட்ட செய்தி இக்கோயிலின் மிகப் பழைமையான கல்வெட்டால் அறியப்படுகிறது.

இக்கோயிலின் முன்பக்கத்து மண்டபம் பிற்காலத்தில் கட்டப்பட்டது. இம் மண்டபத்தைச் சேர்ந்த தூண் ஒன்றின் மீதுள்ள கல்வெட்டு இவ்வூரில் ஆதித்த சோழன் காலத்தில் எடுப்பிக்கப்பட்ட கோயில் ஒன்றைப் பற்றிக் குறிப்பிடுகிறது. அக் கல்வெட்டு இராசகேசரிவர்மனின் 21-ஆம் ஆண்டில் திருப்பூதீசுவரத்து மகாதேவருக்கு வழங்கப்பட்ட விளக்கு தானம் ஒன்றைப் பற்றிக் குறிப்பிடுகிறது. 21 என்ற உயர்ந்த ஆட்சியாண்டு பண்டைய இராசகேசரிகளுள் ஆதித்தனுக்கே உரியது. இதனை நோக்க முதுகுன்றமுடையார் கோயிலின் முன் மண்டபத்தில் காணப்படும் அத்தூண் பண்டு ஆதித்தன் காலத்துக் கட்டப்பட்ட கோயிலான திருப்பூதீசுவரக் கோயிலைச் சார்ந்தது என்பதும், அக்கோயில் அழிவுற்றதனால் அதன் தூண்கள் முதுகுன்றமுடையார் கோயில் முன் மண்டபத்துக்குப் பயன்படுத்தப்பட்டன என்பதும், ஆராய்ச்சியாளர்களுள் சிலர் கருதுவதைப் போலத் திருப்பூதீசுவரம் என்பது முசுகுந்தீசுவரம் அல்லது மூவர் கோயில் என்பனவற்றின் பழைய பெயர் அன்று என்பதும் உணரத்தக்கன.

## கொடும்பை—மூவர் கோயில்

மூவர் கோயில் என்பது மூன்று விமானங்கள் (விமானத் திரயம்) அமைந்துள்ள கோயில். இங்கு ஆண்ட பூதி விக்கிரம கேசரி என்ற சிற்றரசன் தன் பெயராலும் தன் இரு தேவியர்களான வரகுணபெருமானார், கற்றளிப் பிராட்டியார் என்பவர் பெயராலும் மூன்று கற்றளிகளை அமைப்பித்தான். இம்மூன்று கோயில்களும் ஒரே வரிசையில் ஒரே மாதிரியாக மேற்குப் பார்த்த சந்நிதிகளை உடையனவாய் அமைந்தன. தற்போது வடக்கில் இருந்த தளி அழிந்து போய்விட்டது. அதன் அடித்தளம்தான் தற்போது எஞ்சியுள்ளது. வடக்கில் உள்ளது போக நடுவிலும் தெற்கிலும் உள்ள தளிகள்தான் தற்போது உருச்சிதையாமல் எஞ்சியுள்ளன. பழைய புதுக்கோட்டை சமஸ்தானத்தார் தக்க பாதுகாப்பு முறையைக் கையாண்டதால்தான் இவ்விரு தளிகளாவது நமக்குக் கிடைத்துள்ளன.

நடுத்தளியின் தென் சுவரில் கிரந்தலிபியிலும் வடமொழியிலும் ஒரு கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டு பூதி

விக்கிரமகேசரியைப் பற்றியும் அவர்களுடைய மூதாதையர்களைப் பற்றியும் குறிப்பிடுகிறது. கல்வெட்டெழுத்துக்கள் சில இடங்களில் சிதைந்து காணப்படுவதால் இவ்வமிசத்தின் குல முதல்வன் யாவன் என்பது அறியப்படவில்லை. ஏழாவது தலைமுறையில் வந்தவன் 'வாதாபி கொண்ட பரதுர்க்க மர்த்தனன்' ஆவான். இவன் மகன் 'சமராபிராமன்' எனப்படுவான். இவன் சளுக்கிய மன்னனை அதிராஜமங்கலத்தில் (திருவதிகை) போரில் வென்று கொன்றான். சோழகுல திலகமான அனுபமாவை மணந்தான். அவனுடைய மகனே பூதி விக்கிரமகேசரி. காவிரியாற்றங்கரையில் இவன் பல்லவர்களைத் தோற்கடித்தான். வீரபாண்டியனை வென்றான். வஞ்சி வேந்தனைக் கொன்றான். இவன் கொடும்பையில் ஒரு பெரிய அரண்மனையை அமைத்தான். இவனுக்குக் கற்றளி, வரகுணா எனத் தேவியர் இருவர் இருந்தனர். கற்றளிக்குப் பிறந்த புதல்வர் இருவர் பராந்தகனும் ஆதித்தவர்மனும் ஆவர். இப் பூதி விக்கிரமகேசரியே மூவர் கோயிலை எடுப்பித்தான். சைவ பாசுவத வகுப்பைச் சேர்ந்த காளாமுக யதியான மல்லிகார்சுனனுக்கு ஒரு பெரிய மடம் கட்டிக் கொடுத்து அங்கு நாள்தோறும் 50 தபோதனர்களுக்கு நைவேத்தியம், கந்தம், புஷ்பம், தூபம், தீபம், தாம்பூலம் முதலியவற்றை உதவும்படிப் பதினோரு கிராமங்களை அம்முனிவன் பெயரால் தானம் செய்தான். தன் ஆதரவைப் பெற்ற காளாமுக குருமார்களின் உதவியைக் கொண்டே பூதி விக்கிரமகேசரி இம்மூவர் கோயிலைக் கட்டியிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

## வெங்கையாவின் கருத்து

கல்வெட்டு இலாகாவைச் சேர்ந்த வெங்கையா என்பவர் மூவர் கோயிலிலுள்ள கல்வெட்டின் எழுத்து பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருத்தல் வேண்டும் எனவும், பூதி விக்கிரமகேசரியின் எதிரியான வீரபாண்டியனும், சுந்தர சோழனின் மூத்த மகனும் 'பாண்டியன் முடித்தலை கொண்டவன்' என்ற விருதுப் பெயர் பூண்டவனும் ஆன இரண்டாம் கரிகால ஆதித்தனின் எதிரியான வீரபாண்டியனும் ஒருவனே எனவும் குறிப்பிட்டுள்ளார். ஆகவே அவர் கருத்துப்படி பூதி விக்கிரம கேசரியும், பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த சுந்தரசோழன், அவன் மகன் கரிகால ஆதித்தன்

என்பவரும் ஒரே காலத்தவர் என்று கொள்ளவேண்டியவராகி யுள்ளோம்.

## ஹீராஸ் பாதிரியாரின் கருத்து

இயேசுநாதர் சங்கத்தைச் சேர்ந்தவரும் சரித்திர ஆராய்ச்சியில் வல்லவரும் ஆன ஹீராஸ் பாதிரியார் பூதி விக்கிரம கேசரியின் பாட்டன் வாதாபியில் வெற்றி கண்டதாகக் கூறப்படுவதால் (வாதாபி வெற்றியின் காலம் கி. பி. 642) பூதி விக்கிரம கேசரி மூவர் கோயிலை எடுப்பித்த காலம் கி. பி. 670 ஆக இருக்கலாம் என்று குறிப்பிட்டுள்ளார். அங்ஙனம் ஆயின் கி. பி. 670-ஐச் சேர்ந்த இரண்டாம் இராசசிம்ம பல்லவன் காலத்தனவாகிய மாமல்லபுரம் கடற்கரைக் கோயிலும், காஞ்சி கைலாசநாதர் கோயிலும் இம்மூவர் கோயிலும் அமைப்பிலும் பாணியிலும் அணிவகையிலும் ஒரே காலத்தைச் சேர்ந்தனவாகக் கொள்ளவேண்டும். ஹீராஸ் பாதிரியாரே மூவர் கோயில் பல்லவர் காலத்துத் தளிகளைப் போல் அல்லாமல் கி. பி. 10–ஆம் நூற்றாண்டின் சோழக் கோயில்களை ஒத்திருக்கின்றன எனவும் இவை கட்டிடக் கலையின் ஒரு புதிர் எனவும் இவற்றிற்கு முன்னே பின்னே எடுத்துக் காட்டாகக் குறிப்பிடத் தக்க யாதொரு கோயிலும் இல்லை எனவும் குறிப்பிட்டுள்ளளார். இம்முடிவு கலைச் சரித்திரத்திற்கு முரணானது. மாமல்லபுரத்து அருகேயுள்ள வளையன்குட்டை விமானம், திருக்கட்டளை சுந்தரேசுவரர் கோயில், கீழையூர் அவனி கந்தர்ப்ப ஈசுவரம், கொடும்பை முசுகுந்தேசுவரர் கோயில் இவைகள் மூவர் கோயிலோடு ஒப்பிடத்தக்க கலைநலமுடையன என்பது உளங்கொளத்தக்கது.

## கிருஷ்ணனின் கருத்து

கிருஷ்ணன் என்பவர் 'எபிகிராபியா இண்டிகா' என்ற பத்திரிகையில் சுப்பிரமணிய ஐயர், வைத்தியநாதய்யர் ஆகியோருடைய கருத்துக்களை ஒட்டியே ஓர் ஆராய்ச்சி எழுதியுள்ளார். அதனை நோக்குவோம்.

திருக்கோவலூருக்கு அருகே பெண்ணையாற்றின் தென் கரையில் உள்ள கீழூர்ச் சிவன் கோயிலில் காணப்படும் மூன்றாம் நந்திவர்மனின் 16-ஆம் ஆண்டுக் கல்வெட்டு, தென்னவன் இருங்கோவேள் ஆன மறவன் பூதி திருக்கோவலூர் நகரத்தார்

வசம் 24 கழஞ்சுப் பொன்னை முதலாக வைத்து அதன் வட்டியைக் கொண்டு கீழூர் மகாதேவர்க்கு ஒரு நந்தா விளக்கு எரிப்பதற்கு ஏற்பாடு செய்த செய்தியைக் குறிப்பிடுகிறது. கிருஷ்ணன் தம் கட்டுரையில் தென்னவன் இளங்கோவேள் ஆன மறவன்பூதியும் மூவர் கோயில் கல்வெட்டில் குறிப்பிடப் பட்டுள்ள பூதி விக்கிரமகேசரியும் ஒருவரையே குறிக்கும் இருபெயர்களாம் என்று முடிவு செய்துள்ளார்.

## சுப்பிரமணிய ஐயர், வைத்தியநாதய்யர் கருத்து

இவ் விருவர்களின் வாதம் பின்வருமாறு :

1. மூன்றும் நந்திவர்மன் வழங்கிய வேலூர்ப் பாளையச் செப்பேடுகளில் குமராங்குசன் என்ற சோழ மன்னன் செங்கற் பட்டு மாவட்டத்தைச் சார்ந்த திருக்காட்டுப்பள்ளியை அவ் வூர்த் தேவர்க்குத் தானம் செய்தான் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. சோழன் குமராங்குசனும் சோழன் விசயாலயனும் ஏறக்குறைய ஒத்த காலத்தவராதல் வேண்டும். இக்குமராங்குசன் கோனாட்டு யாதவ குலத்தைச் சேர்ந்த சமராபிராமனுக்குச் சோழ குலதேவியான அனுபமாவை மணம் செய்வித்து இரு குலத்தினருக்கும் உள்ள உறவைப் பெருக்கியுள்ளான். சமராபிராமனுடைய காலம் கி. பி. 883–897 ஆகவே, அவனுடைய மகன் விக்கிரமகேசரி ஆதித்தசோழன் காலத்தவனாதல் வேண்டும்;

2. பூதி விக்கிரமகேசரி பல்லவர்களைக் காவிரியாற்றங் கரையில் தோற்கடித்தான் என்று மூவர் கோயில் கல்வெட்டு குறிப்பிடுவதாக முன்னர்க் குறிப்பிட்டுள்ளோம். பல்லவ மன்னன் அபராசிதனை கி. பி. 890 என்ற ஆண்டிலோ அதற்குச் சற்று முன்னரோ ஆதித்தன் வென்ற வெற்றியே பல்லவர் மீது சோழர்கள் அடைந்த கடைசி வெற்றியாகும். அதன் பிறகு பல்லவர் பூண்டே அழிந்துவிட்டது எனலாம்.

3. பூதி விக்கிரமகேசரி வீரபாண்டியனை வென்றான் என்று மூவர் கோயில் கல்வெட்டு குறிப்பிடுகிறது. இவ்வீர பாண்டியன் சுந்தரசோழன், இரண்டாம் ஆதித்தன் ஆகிய சோழ மன்னர் காலத்தவனான வீரபாண்டியன் என்று சிலர் கருதுகிறார்கள். பல்லவர்களை வென்ற பூதி விக்கிரமகேசரி இவ் விரண்டாம் ஆதித்தன் காலத்துக்கு மிக முற்பட்டவனாதல் வேண்டும். எனவே, அவனால் வெல்லப்பட்ட வீரபாண்டியனும்

இரண்டாம் ஆதித்தன் காலத்து வீரபாண்டியனுக்கு முற்பட்ட வேருெரு பாண்டியனுதல் வேண்டும்.

1. இனி, இக்கூற்றுக்களை நோக்குவோம். சுப்பிரமணிய ஐயர் முதலியோர் குமராங்குசனும் சோழ விசயாலயனும் சம காலத்தவர் என்று முடிவு செய்ததற்குரிய ஆதாரம் யாது என்பது புலப்படுத்தப்படவில்லை,

2. ஆதித்த சோழன் அபராசிதனை முறியடித்த பிறகு பல்லவர்கள் அடியோடு அழிந்து விட்டனர் என்று கூற முடியாது. நிருபதுங்க வர்மன் (கி. பி. 855-896) அபராசிதன் (கி. பி. 879-897) கம்பவர்மன் (கி. பி. 878-910) ஆகியோர் ஆதித்தனுடைய வெற்றிக்குப் பின்னும் பல்லவ நாட்டைப் பல இடங்களில் இருந்து ஆண்டு வந்தனர் என்று கொள்வதற்குரிய கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. முதலாம் பராந்தகன் ஆட்சியிலேயேதான் பல்லவர் ஆட்சி முடிவுற்றது என்பது கரந்தைச் தமிழ்ச் சங்கச் செப்பேடுகள் தெரிவிக்கும் செய்தியாகும்

3. வீரபாண்டியன்: பூதி விக்கிரமகேசரி காலத்தில் இருந்த வீரபாண்டியன் யாவன் என்பதை நோக்க வேண்டும். சரித்திர வாயிலாக வீரபாண்டியன் என்பவன் ஒருவனே உணரப்படுகிருன். இராசசிம்ம பாண்டியனுடைய 20-ஆவது ஆண்டில் வீரபாண்டியன் என்பான் ஒரு தானம் செய்ததாகத் தெரிவிக்கும் கல்வெட்டொன்று உள்ளது. இக்காலம் கி. பி. 923 ஆகவே, அதற்கு முன் வீரபாண்டியன் என்ற பெயரில் யாரும் இருந்தாராக அறிவதற்குக் கருவியில்லை. இவன் இராசசிம்மனுக்குப் பின் சுமார் கி. பி. 947-இல் முடி சூடியிருக்கலாம். இவன் தன் ஆட்சியின் ஆரும் ஆண்டில் (கி. பி. 953) 'சோழன் தலைகொண்ட பாண்டியன்' என்று குறிப்பிடப்படுகிருன்,

கி. பி. 963-இல் சுந்தரசோழன் பாண்டியர்களைச் சேவூரில் அடியோடு முறியடித்துப் 'பாண்டியனைச் சுரம் இறக்கின சோழன்' என்ற பட்டம் புனைந்தான். இரண்டாம் ஆதித்தன் தன் ஆட்சியின் இரண்டாம் ஆண்டான கி. பி. 966-இல் பாண்டியனை வென்று 'வீரபாண்டியன் தலைகொண்டவன்' என்ற விருது பூண்டான். இவன் தன் இளமையிலேயே வீரபாண்டியனேடு விரப்போர் நிகழ்த்திஞன் என்று ஆனைமங்

கலம் செப்பேடுகளும், பாண்டியன் தலையை வெட்டி ஒரு கம்பத்தின் மேல் நிறுத்திப் பாண்டியன் தலைநகரான மதுரையில் ஜயஸ்தம்பம் நாட்டினான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகளும் குறிப்பிடுகின்றன. கி. பி. 969–இல் இரண்டாம் ஆதித்தன் துரோகிகளால் கொலை செய்யப்பட்டான். (சோழ குலத்தைச் சேர்ந்த பார்த்திவேந்திர வர்மன் என்பானும் "பாண்டியன் முடித்தலை கொண்ட" என்ற பட்டம் சூடியுள்ளான்.)

ஆகவே வீரபாண்டியன் என்பவன் கி. பி. 923 முதல் சரித்திரத் தொடர்புடையவன் என்பதும், கி. பி. 947 முதல் 966 வரை சுமார் 20 ஆண்டுகள் பாண்டிய நாட்டை ஆண்டவன் என்பதும், இவன் இரண்டாம் ஆதித்தனால் கொல்லப்பட்டவன் என்பதும், இவன் பூதி விக்கிரமகேசரிக்கும் பகைவனாய் விளங்கினான் என்பதும், இவ் வீரபாண்டியன் 10-ஆம் நூற்றாண்டின் இடைக்காலத்தவன் ஆகவே, பூதி விக்கிரம கேசரியும் இக்காலத்தவனாதல் வேண்டும் என்பதும் மூவர் கோயிலும் 10–ஆம் நூற்றாண்டின் பிற்காலக் கற்றளி என்பதும் கொள்ளத்தக்கன.

## கீழூர் மறவன் பூதியும் மூவர் கோயில் பூதி விக்கிரமகேசரியும்

இவ்விருவரும் ஒருவரா அல்லது வெவ்வேறானவரா என்பதை ஆராய்வோம்.

1. **கீழூர்க் கல்வெட்டு :** இது நந்திவர்ம பல்லவனின் 16–ஆவது ஆண்டில் இளங்கோவான மறவன் பூதி செய்த தானத்தைக்குறிக்கிறது. இவனைப்பற்றி வேறு சில கல்வெட்டுகள் உள்ளன.

2. திருப்பராய்த்துறையில் ஆட்சியாண்டு சிதைந்துபோன கோவிராசகேசரியின் கல்வெட்டு ஒன்று உள்ளது. இக் கல்வெட்டில் தென்னவன் இளங்கோவேளான மறவன் பூதியின் தேவி கற்றளிப் பிராட்டியார் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. இதே கோயிலில் உள்ள இராசகேசரி வர்மனின் 27-ஆம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டில், தானங்கள் செய்தவர்களாகக் குறிப்பிடப்பட்ட பலரில் தென்னவன் இளங்கோவேளான

மறவன் பூதியின் பெயரும் காணப்படுகிறது. இந்த இராச கேசரி ஆதித்த சோழனாக இருக்கலாம்.

3. திருச்செந்துறை: பரகேசரிவர்மனின் இரண்டாம் ஆண்டினதாகிய ஒருகல்வெட்டு தென்னவன் இளங்கோவேள் ஆன மறவன் பூதியின் மற்றொரு தேவியான நக்கன் விக்கிரம கேசரி செய்த தானத்தைக் குறிக்கிறது.

4. கொடும்பை: இங்குள்ள முசுகுந்தேசுவரர் கோயில் முன் மண்டபத் தூணிலிருந்து இராசகேசரியின் 21-ஆம் ஆண்டுக்கு முற்பட்ட திருப்பூதீசுவரக் கோயிலைப் பற்றி அறி கிறோம். இக்கோயில் மறவன் பூதியால் கட்டப்பட்டுப் பின் அழிந்திருக்கலாம்.

ஆகவே தென்னவன் இளங்கோவேள் ஆன மறவன் பூதி நந்திவர்ம பல்லவனுடைய 16-ஆவது ஆண்டு (கி. பி. 851) முதல் முதற் பராந்தகனின் இரண்டாம் ஆண்டு (கி. பி. 909) வரையிலாவது வாழ்ந்தவனான ஒரு சிற்றரசனாக அறியப்படுகி றான். இவனுடைய தேவிமார்களாக நங்கை கற்றளிப் பிராட்டியாரும் நக்கன் விக்கிரம கேசரியாரும் அறியப்படுகின்றனர்.

## செம்பியன் இருக்குவேள் ஆன பூதி பராந்தகன்

இனி, பூதி விக்கிரம கேசரியைப் பற்றி முடிவு செய்யும் முன், பூதி பராந்தகன் என்பானைப் பற்றிச் சற்று நோக்கு வதும் பொருத்தமாக அமைகிறது. நங்கபுரத்திலும் அந்த-நல்லூரிலும் கிடைத்துள்ள கல்வெட்டுக்களில் செம்பியன் இருக்குவேள் ஆன பூதிபராந்தகன் என்ற தலைவனுடைய பெயரைக்காணலாம். பரகேசரி வர்மனுடைய 10-ஆவது ஆண் டில் தன்பிறந்த நாளில் நிகழ்ந்த சூரிய கிரகணத்தன்று பூதி பராந்தகன் தேவியார் சோழப் பெருந்தேவியார் ஆன பெரிய நங்கை 1080 கழஞ்சு பொன்னை அரிஞ்சிகைச் சதுர்வேதி மங்கலத்தின் (நங்கவரம்) பெருங்குறிச் சபையாரிடம் அளிக்கவே, அவர்கள் அப்பொன்னைப் பெற்றுக் கொண்டு மறவனீசுவரத்துப் பெரு மான் அடிகளுக்கு (சுந்தரேசுவரர் கோயிலின் பழம் பெயர்) பூசைக்கும் விழாவிற்கும் உதவும்படி நிலம் வாங்கிய செய்தி அறியப்படுகிறது. நங்கவரத்திலுள்ள இக்கல்வெட்டில் காணப் படும் பரகேசரிவர்மன் முதல் பராந்தகனாக வேண்டும்.

அந்தநல்லூர் திருவாலந்துறை மகாதேவர் கோயிலில் உள்ள பரகேசரிவர்மனின் 10-ஆம் ஆண்டுக் கல்வெட்டு செம்பியன் இருக்குவேள் ஆனபூதிபராந்தகனின்தேவியாரான புலியூர் நாட்டடிகள் இம் மகாதேவருக்குச் செய்த தானத் தைக்குறிக்கிறது. பரகேசரிவர்மனின் 11-ஆம் ஆண்டுக் கல் வெட்டு அந்தவநல்லூர்த் திருவாலந்துறைப் பெருமான் அடி கட்குச் செம்பியன் இருக்குவேளான பூதிபராந்தகன் கற்றளி எடுப்பித்துத் தேவதானம் செய்வதற்குப் பரகேசரி வர்மற்கு விண்ணப்பம் செய்து அந்தவநல்லூர்க் காணிப்பால் நிலத்தில் பெற்ற நீர்நிலம் (நன்செய்) மூவேலியைக் குடி நீக்கிய தேவதானம் செய்து கொடுத்த செயலைச் சுட்டுகிறது.

பரகேசரிவர்மனின் 18-ஆம் ஆண்டில் இத்தலைவன் அரசனுடைய ஸ்ரீமுகம் பெற்று இத்தான நிலத்தை அரசனின் தல அதிகாரியான அரையன் வீர சோழன் பேரில் மாற் றவே, அவன் பரகேசரிவர்மனின் 25-ஆம் ஆண்டில் அந்தவ நல்லூர் (அந்தநல்லூரின் பழம்பெயர்) ஊரார் வசமே இத் தானத்தை ஒப்படைத்தான்.

இக் கல்வெட்டுக்களில் காணப்படும் நீண்ட ஆட்சி யாண்டை உடைய பரகேசரி முதல் பராந்தகனேயாவான். ஆகவே இம் மன்னன் காலத்துச் செம்பியன் இருக்குவேளான பூதி பராந்தகனும், மூவர் கோயில் கட்டிய பூதி விக்கிரம கேசரியின் மகனாகிய; பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த, பராந்தகனும் ஒருவனையே குறிக்கும் என்று கூறுவது சாலாது.

பரகேசரிவர்மனின் 14-ஆம் ஆண்டுக் கல்வெட்டு பூதி பராந்தகன் அந்தவநல்லூர்க் கற்றளி எடுப்பித்ததையும் விழா எடுத்ததையும் குறிப்பிடுகிறது. பரகேசரிவர்மனின் 13-ஆம் ஆண்டுக் கல்வெட்டு பூதி பராந்தகனின் மற்றொரு தேவியான திங்கள் நிம்மடிகள் விளக்கிற்காக 30 கழஞ்சுப் பொன் அளித்த செய்தியைக் குறிப்பிடுகிறது. பரகேசரியின் 10-ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று செம்பியன் இருக்குவேள் ஆன பூதி பராந்தகனின் மற்றொரு தேவியான புலியூர் நாட்டடிகளின் தானத்தைக் குறிப்பிடுகிறது. இக்கல் வெட்டுக்களில் காணப் படும் பரகேசரி முதலாம் பராந்தகனே; ஆராய்ச்சியாளர் சிலர் கூறுவதுபோல உத்தம சோழன் அல்லன் என்பது

நீண்ட ஆட்சியாண்டாலும் கல்வெட்டுச் செய்தி ஒற்றுமை யாலும் கொள்ளத்தக்கதாம்.

ஆகவே, கீழூர்க் கல்வெட்டில் கூறப்பட்ட தென்னவன் மறவன் பூதி ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சார்ந் தவன் எனவும், மூவர் கோயில் கட்டிய பூதி விக்கிரமகேசரி வீரபாண்டியன் காலத்தவனாகவே பத்தாம் நூற்றாண்டின் பிற் பகுதியினன் எனவும், அந்தநல்லூரில் குறிப்பிடப் பட்ட பூதிபராந்தகன் விக்கிரம கேசரிக்குச் சற்று முற்பட்டுப் பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதியினன் ஆகவே, அவனும் பூதி விக்கிரமகேசரியின் மகன் பராந்தகனும் வெவ்வேறானவர் எனவும், சுந்தர சோழன் காலமாகிய பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலேயே மூவர் கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும் எனவும் உறுதியாகக் கூறலாம்.

மூவர் கோயிலின் கருவறைகள் 21 அடி பக்கமுடைய சதுரங்களாக உள்ளன. அர்த்தமண்டபம் 18 அடி பக்க முடைய சதுரமானது; அர்த்தமண்டபத்துக்குத் தற்போது கூரையில்லை; முகமண்டபத்தின் அடித்தளம் 91 அடி நீளமும் 41 அடி அகலமு முடையது. அதுபோலவே நந்தி மண்டபம், பலிபீடம், கொடிமரம் இவற்றின் அடித்தளத்தைக் காணலாம்; 15 சுற்றுக் கோயில்களும் திருமதிலும் இரு கோபுரவாயில் களும் இருந்த சுவடுகள் தென்படுகின்றன.

அதிஷ்டானத்தில் உபபீடம், பத்மம், குமுதம் என்ற படைகளையும், கோடியில் திறந்த வாயையுடைய மகரங் களோடு கூடிய யாளிவரிசையும் காணலாம்.

மூன்று வெளிச் சுவர்களிலும் தேவ கோஷ்டங்கள் உள்ளன. ஒவ்வொரு தேவகோஷ்டத்தையும் அரைத்தூண் களும் முழுத்தூண்களும் மேலே மகர தோரணமும் அலங்கரிக் கின்றன. தூண்களின் முக்கியப் பகுதிகளான கால், கலசம், பத்மம், கும்பம், பலகை, போதிகை என்பன சிறப்பாக அமைந்துள்ளன. கொடுங்கையின் அடியில் பூதவரிசையும், மேலே இரு கோடிகளிலும் மகரங்களோடு கூடிய யாளி வரிசையும் உள்ளன. கொடுங்கையில் இரட்டைக் கூடுகளும் நுனிப்பகுதியில் வட்டங்களும் (Circles) திகழ்கின்றன.

இவ்விருதளக் கற்றளியின் இரண்டாவது தளத்தில் சாலை களையும் கூடங்களையும் காணலாம். சாலையின் நடுவில

நேர்த்தியான சிலைகள் உள்ளன. இரண்டாம் தளத்துச் சுவர் மீது கூடுகளால் அலங்கரிக்கப்பட்ட கொடுங்கையும் அதன் மேல் யாளிவரிசையும் உள்ளன.

கிரீவமும் சிகரமும் சதுரவடிவானவை. கிரீவத்தின் அடித்தளத்தில் நான்கு கோடியிலும் ரிஷபங்கள் காணப் படுகின்றன. மத்தியில் விமான தேவதைகளோடு கூடிய கோஷ்டங்கள் உள்ளன. கோஷ்டங்களின் மீது சிங்கத் தலையால் அலங்கரிக்கப் பட்ட கூடுகள் காணப்படுகின்றன சிகரம் நடுவில் பிதுங்கியும் கீழே உள்ளடங்கியும் உள்ளது. இதன் கோடியில் கொடிக்கருக்குகள் உள்ளன. பத்ம பட்டியல் மீது சதுரமான ஸ்தூபி உள்ளது. இம் மூவர் கோயில் சிகரம் மாமல்லபுரத்தில் உள்ள துர்க்கை ரதத்தின் சிகரத்தை ஒத்திருக்கிறது.

விமான தேவதைகள் அக்காலக் கலைத்திறனைக் காட்டும் செல்வங்களாக மிளிர்கின்றன.

நடுத்தளி விமானத்தின் கிழக்குப் பக்கத்தில் கருவறையில் அர்த்தநாரீசுவரரும் இரண்டாம் தளத்தில் சிவனும் பார்வதியும் கிரீவத்தில் இந்திரனும் காணப்படுகின்றனர். வடக்குப்புறத்தில் கருவறையில் நின்ற திருக்கோலத்திலுள்ள சிவபெருமானையும் இரண்டாம் தளத்திலும் கிரீவத்திலும் இருந்த திருக்கோலச் சிவபெருமானையும் காணலாம்.

தெற்குப் புறக் கருவறைச் சுவரில் சிலையேதும் இல்லை. இரண்டாம் தளத்தில் தட்சிணாமூர்த்தியும் மூன்றாம் தளத்தில் வீணாதர தட்சிணாமூர்த்தியும் காட்சியளிக்கின்றனர். மேற்குப் புற கிரீவத்தில் சிவ ஆலிங்கன மூர்த்தியின் சிலை காணப் படுகிறது.

தென் தளி விமானத்தின் கிழக்குப்புறக் கருவறைச் சுவரில் கங்காதரரும் இரண்டாம் தளத்தில் காலாரி மூர்த்தியும் கிரீவத்தில் அந்தகாசுரவத மூர்த்தியும் காட்சியளிக்கின்றனர். வடக்குப் புறத்தில் நின்ற திருக்கோலத்திலுள்ள சிவபெருமா னும் இரண்டாம் தளத்தில் சங்கரநாராயணரும் காணப்படு கின்றனர். கிரீவத்தின் வடபுறத்திலும் மேற்குப்புறத்திலும் இப்போது சிலைகள் காணப்பட வில்லை.

தென்புறத்துக் கருவறைச் சுவரில் வீணாதரதட்சிணா மூர்த்தியும் மேல்தளத்தில் காலாரி மூர்த்தியும் கிரீவத்தில் கஜசம்ஹார மூர்த்தியும் காணப்படுகின்றனர். மேல்புறச் சுவரில் தற்போது சிலைகளே காணப்படவில்லை.

இவைகளைத் தவிரப் பரிவாரக் கோயிலைச் சேர்ந்த ஜேஷ்டாதேவியின் சிலை, வீரசுப்பிரமணியர், பிக்ஷாடனர் ஆகியோருடைய சிலைகள் கிடைத்துள்ளன. இவை புதுக் கோட்டை, சென்னை ஆகிய நகர்களிலுள்ள கண்காட்சி சாலை களில் காணப்படுகின்றன. கலையேணியின் உச்சிப் படியில் உள்ள வெகு நேர்த்தியான இச்சிலைகள் பத்தாம் நூற்றாண்டில் சிற்பக்கலை எய்தியிருந்த சீரிய நிலைக்கு எடுத்துக்காட்டாக இலங்குகின்றன.

மூவர் கோயிலுக்கு அருகில் அண்மைக் காலத்தில் தோண்டியெடுக்கப்பட்ட திரிபுராந்தகர், திரிபுரசுந்தரி என்ற சிலைகள் தற்போது சென்னைக் கண்காட்சி சாலையை அலங் கரிக்கின்றன.

## அத்தியாயம் 9

## உத்தம சோழனான மதுராந்தகன்

முதலாம் பராந்தகனுடைய இரண்டாம் புதல்வன் கண்டராதித்தன். அவனுடைய மகன் உத்தமசோழன்.

இவன் இந்திரனை யொத்த ஆற்றலுடையவன் என்று ஆனைமங்கலச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன.

கலியின் கொடுமையைத் தீர்க்க அருள்மொழித் தேவனை (முதல் இராசராசன்) முடிசூட வேண்டும் என்று மக்கள் வேண்டியும், தன் பெரிய தந்தையான உத்தம சோழன் அரசுரிமையில் இச்சை கொண்டிருந்ததால் அரியணையேற்க மறுத்தான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் தெரிவிக்கின்றன. அருள்மொழித் தேவனின் தமையனும் சுதந்தர சோழனுடைய புதல்வனுமான இரண்டாம் ஆதித்தன் படுகொலை செய்யப்பட்டமைக்கு உத்தம சோழனே காரணமானவன் என்று கூறுவாரும் உண்டு. முதலாம் இராசராசன் ஆட்சிக் காலத்தில் அப்படுகொலை செய்த குற்றவாளிகள் விசாரிக்கப்பட்டுத் தண்டனை அளிக்கப் பட்டனர் என்று காட்டுமன்னார்குடிக் கல்வெட்டு தெரிவிக்கிறது. உண்மை எவ்வாறாயினும் உத்தம சோழன் ஆட்சிக் காலத்தில் அருள்மொழித் தேவன் இளவரசனாக இருந்து, அவன் காலமான பிறகே முதலாம் இராசராசன் என்ற பட்டத்துடன் அரியணையேறினான். இவன் உத்தம சோழனுடைய மகனான மதுராந்தகனுக்கு உயர் பதவியளித்துச் செவ்வனே யாண்டு வந்தான்.

கண்டராதித்தனுடைய தேவி பராந்தகன் மாதேவடிகளான செம்பியன் மாதேவியாவாள். இவள் மழவராயர் குலத்துப் பெண் ஆவாள். இவள் உத்தம சோழனுடைய தாய்; இவள் இளம்

பிராயத்திலேயே கணவனை இழந்துவிட்டாள், கணவனுக்குப் பிறகு தான் வாழ்ந்த தன் நீண்ட வாழ்நாளாகிய முப்பது ஆண்டுகளில் கோயில்கள் கட்டியும், திருப்பணிகள் செய்தும், நிவந்தங்கள் அளித்தும், தன் வாழ்க்கையை ஆன்மீகப் பற்றுடன் கழித்து வந்தாள், முந்திய சோழர் காலத்தில் விளங்கிய சோழர்குலத் தேவிமார்களுக்குள் இவள் திலகம் போல விளங்குகிருள்,

## கோனேரிராசபுரம்

உத்தமசோழனுடைய ஆட்சியில் செம்பியன்மாதேவி குறைந்தபட்சம் பன்னிரண்டு கோயில்களாவது கட்டியிருக்க வேண்டும் என்று அறிகிறோம்; செம்பியன் மாதேவி நாகைப் பட்டினத்தின் அருகே தன் பெயரால் **செம்பியன் மாதேவி** என்ற புதியதோர் ஊரை நிறுவி அவ்வூரில் கைலாசநாதர் கோயில் என்ற புதியதொரு கோயிலையும் எடுப்பித்தாள், இத் தேவியைத் தவிர உத்தம சோழனுடைய தேவிமார்கள் பலரும் இக்கோயிலுக்கு நிவந்தங்கள் பல வழங்கியுள்ளனர்.

செம்பியன் மாதேவியால் கட்டப்பட்ட கோயில்களுள் மிக முக்கியமானது கோனேரிராசபுரத்திலுள்ள உமாமகேசுவரர் கோயிலாகும். கோனேரிராசபுரம் கும்பகோணத்திலிருந்து காரைக்கால் செல்லும் பாதையில் 15 கல் (24 கி.மீ) தொலைவில் உள்ளது; அப்பர் இவ்வூர்த் தேவாரத்தில் இவ்வூரைத் திருநல்லம் என்றும் இதில் எழுந்தருளியுள்ள தேவரை உமைக்கு நல்லான் என்றும் கூறுகின்றனர், இப்பழைய கோயிலைச் செம்பியன்மாதேவி தன் கணவரின் பெயரால் அவர் நினைவாகக் கற்றளியாகக் கட்டினுள், இக் கோயிலின் தென் சுவரில் உள்ள கல்வெட்டு:

'ஸ்வஸ்தி ஸ்ரீ கண்டராதித்த தேவர் தேவியார் மாதேவடிகளான ஸ்ரீ செம்பியன் மாதேவியார் தம்முடைய திருமகனுர் ஸ்ரீ மதுராந்தக தேவரான ஸ்ரீ உத்தம சோழன் திருராஜ்யம் செய்தருளா நிற்க த்தம்முடையார் ஸ்ரீ கண்டராதித்த தேவர் திருநாமத்தால் திருநல்லமுடையாருக்குத் திருக்கற்றளி எழுந்தருளுவித்து திருக்கற்றளியிலே திருநல்லம் உடையாரைத் திருவடி தொழுகின்ருராக எழுந்தருளிவித்த ஸ்ரீ கண்டராதித்த தேவர் இவர்' என்று காணப்படுகிறது.

இக்கல் வெட்டின் பக்கத்தில் இலிங்கமும், இலிங்கத்தைத் தொழுகின்றாராக அமைக்கப்பட்ட கண்டராதித்தர் சிலையும் சற்று அப்பால் செம்பியன்மாதேவியாரின் சிலையும் காணப் படுகின்றன.

உத்தம சோழனின் மூன்றும் ஆண்டுக் கல்வெட்டு இந்நாயனாருக்குத் திருப்பள்ளித்தாமத்துக்காக நிலத்தானம் செய்யப்பட்ட செய்தியைக் குறிப்பிடுவதால் அவ்வாண்டிலோ சற்று முன்னரோ இக் கற்றளி எடுப்பிக்கப் பட்டிருத்தல் வேண்டும் என அறிகிறோம். இவ்வாண்டு செம்பியன் மாதேவியால் திருநந்தனவனப்புறமாக இரண்டு வேலி நிலம் கோயிலுக்குத் தானம் செய்யப்பட்டது.

உத்தம சோழனின் ஆறும் ஆண்டுக் கல்வெட்டு இக்கோயிலில் எழுந்தருளியுள்ள ஆதித்தேசுவரம் உடையாருக்கு (சூரியன்) அளிக்கப்பட்ட ஒரு நந்தாவிளக்குத் தானத்தைக் குறிப்பிடுகிறது.

உத்தம சோழன் தன் ஏழாம் ஆண்டு 240– ஆம் நாள் பிச்சன் கோயில் என்ற ஊரிலிருந்த மாளிகையில் தங்கி யருளா நின்றபோது; அரசனுடைய அதிகாரியான பரகேசரி மூவேந்த வேளான், மன்னன் தாயாரான செம்பியன் மாதே வியார் தம் கணவனாரின் ஆன்ம நலத்துக்காக நாள்தோறும் 25 அந்தணர்களை உண்பிப்பதற்கு ஒரு ஊட்டுச்சாலையை அமைக்க விரும்புவதாக அரசனிடம் தெரிவிக்கவே, உத்தம சோழன் இக் கோயில் தேவதான நிலங்கள் மூலம் தனக்குக் கிடைத்துவந்த பஞ்சவார நெல்லை இத்தருமத்திற்காக நன் கொடை உதவினான். அதன் பிறகும் வருவாய் போதாமல் போகவே, 1590 கலம் நெல் தரக்கூடிய 12 வேலி நிலத்தை இக் கோயிலுக்குத் தானமாக அளித்தான்; அதனுடன் ஏனைய வருவாய்களையும் உதவவே, புதிய பெருந்திட்டப்படிச் செலவுக்கு இவ்வூர்ச் சபையார் ஏற்பாடு செய்தனர்.

நைவேத்தியம், சந்தனம், தீபம், ஸ்ரீபலித்தேவைக்கு வேண்டிய பொருள்கள் பற்றியும், செம்பியன் மாதேவியின் பிறந்த நட்சத்திரமான கேட்டையன்றும், மார்கழித் திருவா திரை, வைகாசி விசாக நட்சத்திரங்களிலும் நிகழும் திரு விழாக்கள் பற்றியும், அவற்றிற்கு வேதம் ஓதுவோர், சந்தனம் அரைப்போர், திருப்பதிகம் ஓதுவோர், மேளதாளம் சங்கு

முதலிய கருவிகளோடு இசைபாடுவோர், கோயில் தளத்தைச் சாணத்தால் மெழுகிச் சுத்தம் செய்வோர், அபிஷேகத்திற்குக் காவிரியில் இருந்து நீர் கொணர்வோர், கோயில் காரியம் செய்வோர், கணக்கர், மண்கலம் இடுவோர், ஆடை வழங்குவோர், கணக்குப் பரிசோதனை செய்யும் அரசாங்கத்ததிகாரிகள், நாள்கோள் நிலையின் ஓலையை வாசிப்போர், ஸ்தபதி, தச்சன், கொல்லன், ஆகியோருடைய ஊதியம் பற்றியும், ஏனைய செலவுகள் பற்றியும் விரிவான விவரங்கள் எழுதப் பட்டுள்ளன. இக்கோயிலில் செம்பியன் மாதேவியால் செய்யப்பட்ட திரிபுரவிஜயர் (திரிபுராந்தகர்), விருஷப வாகனர், கணபதி முதலிய திருமேனிகளின் விசேஷ பூசைக்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. இச் செப்புத் திருமேனிகளை இக்கோயிலில் இன்றும் காணலாம்.

கருவறையின் தென் சுவரில் இக்கோயிலை எடுப்பித்த ஸ்தபதியின் உருவமும் பெயரும் பொறிக்கப்பட்டுள்ளன. இந்த ஸ்தபதியின் பெயர் ஆலத்தூர் சாத்தன் குணபட்டனை அரசரண சேகரன் என்பது. இவன் தொண்டினைப் பாராட்டி இவனுக்கு 'இராசகேசரி மூவேந்த வேளான்' என்ற பட்டம் அளிக்கப்பட்டது.

கருவறையைச் சுற்றிலும் தூண்கள் தாங்கும் மூடு மண்டபம் ஒன்று உள்ளது. இது முதலாம் இராசராசன் காலத்தில் நிறுவப்பட்டிருக்கலாம்; இதன்பெயர் 'திருநடை மாளிகை' என்பது கல்வெட்டால் அறியப்படுகிறது.

ஒருதளக் கோயிலாகிய இக்கற்றளி மேற்குப் பார்த்த சந்நிதியை உடையது. இதன் கருவறை 20 அடி சதுரமானது. இதன் கருவறைக்கும் அர்த்த மண்டபத்துக்கும் இடையே உள்ள அந்தராளத்தில் கல் ஜன்னல்கள் உள்ளன. அர்த்த மண்டபம் முன்னால் 20 அடி நீண்டுள்ளது.

கருவறையின் வெளிச்சுவர்களில் தேவகோஷ்டங்கள் உள்ளன. தேவகோஷ்டங்களின் நடுவில் உள்ள புரைகளில் சிலைகள் உள்ளன. புரையையடுத்து இரு சிறு அரைத்தூண்களும் சற்று அப்பால் இரு பெரிய அரைத்தூண்களும் மேலே மகர தோரணங்களும் இருக்கின்றன. கருவறையை அடுத்த தேவகோஷ்டங்களில் வடபுறம் பிரமன் சிலையும் கிழக்கே

இலிங்கபுராணதேவர்சிலையும் தெற்கே தட்சிணமூர்த்தியின் சிலையும் காணப்படுகின்றன.

அர்த்தமண்டபத் தென்சுவரில் நடேசர், காளி, ரிஷபாரூடர் (நந்தி விஷ்ணு பிரமன் இவர்களுடன்) ஆகிய சிலைகளையும், வடசுவரில் பிச்சைத்தேவர், துர்க்கை, அர்த்தநாரீசுவரர் ஆகியசிலைகளையும் காணலாம். தேவகோஷ்டச் சிலைகளின் எண்ணிக்கை இச் செம்பியன் மாதேவி காலத்தில் மிகுக்கப் பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

இக்கோயிலின் சிகரம் எட்டுப் பட்டை திட்டப்பட்டது. அது தற்போது புதுப்பிக்கப்பட்டுள்ளது.

செம்பியன் மாதேவி காலத்ததாகிய இக் கோயில் இன்றும் மிக நல்ல நிலையில் பரிபாலிக்கப்பட்டுவரும் செய்தி போற்றற்குரியது.

## அத்தியாயம் 10

# முற்பட்ட சோழர் கலை வளர்ச்சி

### விசயாலயன்

தொடக்கத்தில் மண்டளிகளாக இருந்த கோயில்கள் பல முற்பட்ட சோழர் காலத்தில் கற்றளிகளாக மாற்றப் பட்டன.

### ஏனுதி

ஏனுதி என்பது திருச்சி மாவட்டத்தில் உள்ள சிற்றூர். இங்கு ஒருதளக் கற்றளி ஒன்று உள்ளது. தற்போது கருவறை மாத்திரமே உள்ளது. இதன் முன் மண்டபம் பிற் காலத்தில் இரு தூண்கள் மேல் இணைக்கப்பட்டிருக்க வேண்டும். மாமல்லபுரத்திலுள்ள கங்காவதரணம் அல்லது அர்ச்சுனன் தவக்கோலம் என்ற பாறைச் சிற்பத்திலுள்ள கோயிலின் அமைப்பை இஃது ஒத்துள்ளது.

விசயாலயன் காலத்துக் கற்றளிகளில் மிகமுக்கியமா னவை அழகுவாய்ந்த விமான தேவதைகளையும் பிரணவ வடிவ மூலஸ்தானத்தையும் பரிவாரக் கோயில்களில் ஆறு தளிகளை யும் கொண்ட நார்த்தாமலையிலுள்ள விசயாலய சோளீசுவர மும், காளியாபட்டி, பனங்குடி, விரலூர் என்ற ஊர்களி லுள்ள அழகிய சிறிய ஒருதளக் கற்றளிகளுமேயாகும்.

### முதலாம் ஆதித்தன்

முற்பட்ட சோழர்களுக்குள் இவன் காலத்திலேயே அதிக மான கோயில்கள் கட்டப்பட்டன. அவற்றில் பல கற்றளிகள். என் விமரிசனத்தில் அடங்கிய 113 கோயில்களில் 47 கோயில் கள் ஆதித்தன் காலத்தைச் சேர்ந்தவை.

## கண்ணனூர்

கண்ணனூரிலுள்ள பாலசுப்பிரமணியருடைய கோயில் ஆதித்தன் காலத்தில் கட்டப்பட்டது. யானை ஊர்தியை உடைய முருகப் பெருமானை சுயம்பிரதான மூர்த்தியாகக் கொண்டு கட்டப்பட்ட இக் கோயில் சோழ நாட்டின் தென்கோடி எல்லையில் இருந்திருக்க வேண்டும்.

## திருவெண்காடு

திருவெண்காடு பண்டைக் காலத்தில் நாங்கூர் என்று அழைக்கப்பட்டது. இங்குள்ள சுவேதவனேசுவரர் திருவெண்காட்டுத் தேவர் என்று பண்டைய கல்வெட்டுக் களில் குறிப்பிடப்பட்டுள்ளார். இக்கோயிலிலுள்ள மிகப் பழையகல்வெட்டு இராசகேசரிவர்மனான பெருநற்கிள்ளி என்ற முதலாம் ஆதித்தனின் இரண்டாம் ஆண்டுக் கல்வெட் டாகும்.

## திருப்பழனம்

இங்குள்ள ஆபத்சகாயேசுவரர் கோயிலில் சோழப் பெரு மானடிகள் பெருநற்கிள்ளி சோழரின் இரண்டாம் ஆண்டுக்கல் வெட்டு காணப்படுகிறது. இங்குள்ள பெருநற்கிள்ளி ஆதித் தனையே குறிப்பிடுவதாம். இக்கோயில் திருவையாற்றிலிருந்து கும்பகோணம் செல்லும் பெருவழியில் இரண்டு கல் தொலைவி லுள்ளது.

## திருமயானம்

இது கும்பகோணத்திலிருந்து 9 கல் தென் கிழக்கிலுள்ள தோர் ஊராகும். இங்குள்ள கோயில் பண்டைக் காலத்தில் ஸ்ரீமூலத்தானத்து மகாதேவர் கோயில் எனப்பட்டது. தற் போது இது ஞானபரமேசுவரர் கோயில் எனப்படுகிறது. இதன் கருவறைச் சுவரில் இராசகேசரியின் இரண்டாம் ஆண்டுக் கல்வெட்டு உள்ளது. இக் கல்வெட்டு இவ்வூர்ப் பெருங்குடிமக்கள் பல பண்டங்களின் அங்காடிக் கூலியை இப்பெருமானுக்கு அளித்த செய்தியைக் குறிப்பிடுகிறது. இக் கல்வெட்டில் மெய்யெழுத்துகளின் மீது புள்ளிகள் பொறிக் கப்பட்டுள்ளன.

## செந்தலை

தஞ்சை மாவட்டத்தில் தஞ்சை—திருக்காட்டுப்பள்ளி பெருவழியில் திருக்காட்டுப்பள்ளிக்குக் கிழக்கே 3 கல் தொலைவில் உள்ள இவ்வூரில் உள்ள திருக்கோயில் பண்டு திருப்பெருந்துறை மகாதேவர் கோயில் என்று வழங்கப்பட்டது. இங்குள்ள இறைவன் பெயர் தற்போது சுந்தரேசுவரர் என்பது. இஃது ஆதித்தனுடைய இரண்டாம் ஆண்டில் கற்றளியாக மாற்றப்பட்டது.

## திருக்கட்டளை

புதுக்கோட்டை நகருக்கு இரண்டு கல் கிழக்கே உள்ள இவ்வூருக்குக் கற்குறிச்சி என்பது பண்டைப் பெயராகும். இங்குள்ள இறைவன் பெயர் கற்குறிச்சித் திருக்கற்றளிப் பெருமான் அடிகள் என்று கல்வெட்டுக்களால் அறிகிறோம். இக்கோயில் கருவறை, அர்த்தமண்டபம், சுற்றுக்கோயில், சதுரச்சிகரம் முதலியவை கொண்ட இருதளக் கற்றளியாகும்.

## திருவெறும்பூர்

தஞ்சை திருச்சிப் பெருவழியில் திருச்சிக்கு 6 கல் தொலைவில் உள்ள திருவெறும்பியூர் ஆதித்த சோழனின் நான்காம் ஆண்டில் கற்றளியாகக் கட்டப்பட்டது. இவ்வூர் திருமலைமேல் ஆதித்தபட்டாரருக்குத் தத்தன் சேந்தி எடுப்பித்த திருக்கோயிலாகும்.

## சப்தஸ்தலங்கள்

திருவையாற்றைச் சேர்ந்த ஏழு ஸ்தலங்கள் முதல் ஆதித்தன் காலத்தனவே. திருப்பழனத்தில் ஆதித்தனின் இரண்டாம் ஆண்டுக் கல்வெட்டும், திருவையாறு பஞ்சநதீசுவரர் கோயிலில் 5–ஆம் ஆண்டுக் கல்வெட்டும், திருநெய்த்தான நெய்யாடியப்பர் கோயிலில் 8–ஆம் ஆண்டுக் கல்வெட்டும், திருப்பூந்துருத்தி புஷ்பவனேசுவரர் கோயிலில் 11–ஆம் ஆண்டுக் கல்வெட்டும், திருச்சோற்றுத்துறை ஓதவனேசுவரர் கோயிலில் 13–ஆம் ஆண்டுக் கல்வெட்டும், திருவேதிகுடி வேதபுரீசுவரர் கோயிலில் 19–ஆம் ஆண்டுக்கல்வெட்டும், திருக்கண்டி

யூர் பிர்மசிரக்கண்டீசுவரர் கோயிலில் ஆதித்தன் காலத்தவனை நிருபதுங்கவர்மனின் 21–ஆம் ஆண்டுக் (கி. பி. 876) கல்வெட்டும் காணப்படுகின்றன.

## திருக்காட்டுப்பள்ளி—நியமம்

தஞ்சை மாவட்டத்துத் திருக்காட்டுப்பள்ளியில் உள்ள தீயாடியப்பர் கோயிலும் அதற்கு 3 கல் மேற்கிலுள்ளதும் சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்பட்ட சிறப்புடையதுமான நியமம் ஐராவதேசுவரர் கோயிலும் ஆதித்தன் காலத்தனவே. நியமத்தில் இராசகேசரிவர்மனின் 24-ஆம் ஆண்டுக் கல்வெட்டு காணப்படுகிறது.

## திருவிசலூர்

தஞ்சை மாவட்டத்துக் குடந்தையை அடுத்துள்ள இவ்வூரில் காணப்படும் சிவலோகநாத சுவாமி கோயில் பிரசித்தி பெற்றது. இப்பொழுதுள்ள கோயில் கட்டிடம் முதலாம் பராந்தகன் காலத்ததாகத் தோன்றுகிறது. இக்கோயில் கல்வெட்டொன்று முதலாம் இராசராசன் துலாபாரம் செய்ததாகவும் அவன் தேவி ஹேமகர்ப்பதானம் செய்ததாகவும் குறிப்பிடுகிறது. இக்கோயிலின் தென் பிராகாரத்தில் உக்கிராண அறையாக ஒரு கட்டிடம் உள்ளது. அதில் தேவகோஷ்டங்களோடு கூடிய கருவறைப் பகுதி காணப்படுகிறது. இக்கோஷ்டமொன்றில் வீணாதர தட்சிணாமூர்த்தியின் சிலை இருப்பதால் இச்கட்டிடம்தான் பழைய கோயில் என்று ஊகிக்கப படுகிறது.

## கீழையூர்

திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த மன்னுபெரும்பழுவூரில் உள்ள அவனிகந்தர்ப்ப ஈசுவரகிருகம் ஆதித்தனுடைய 13-ஆம் ஆண்டில் இருதளியாக எடுப்பிக்கப்பட்டது.

## கோயில் தேவராயன்பேட்டை

தஞ்சை மாவட்டத்திலுள்ள பண்டாரவாடை என்ற ஊரில் உள்ள திருச்சேலூர் பரமேசுவரர் கோயிலில் இராசகேசரியின் 17-ஆம் ஆண்டுக் கல்வெட்டு இருந்தது. ஜெய்

மினிய சாமத்தைப் போட்டியில் நல்ல முறையில் ஒப்பிப்பவருக்குப் பரிசு வழங்குவதற்குச் சுந்தரசோழன் காலத்தில் ஒரு நிபந்தம் செய்யப்பட்டது.

## திருவக்கரை

தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள திருவக்கரையில் சந்திரமௌளிசுவரர் கோயில் காணப்படுகிறது. இக்கோயில் கருவறையின் வாயிலிலுள்ள அரிகால்களில் இராசகேசரியின் 19-ஆம் ஆண்டுக் கல்வெட்டும் 25-ஆம் ஆண்டுக் கல்வெட்டும் காணப்படுகின்றன. இக்கோயில் செம்பியன் மாதேவியால் புதுப்பிக்கப்பட்டதாகும்.

## பிரமதேசம்

செய்யாறு என்ற ஊருக்கு அருகில் உள்ள பிரமதேயம் மேலைக்கங்கர்களால் ஆளப்பட்டதாகும். இங்குள்ள சந்திர மௌளீசுவரர் கோயிலில் இராசகேசரியின் 20–ஆம் ஆண்டுக் கல்வெட்டும், 27–ஆம் ஆண்டுக் கல்வெட்டும் காணப்படுகின்றன. இங்குள்ள தேவகோஷ்ட சிலைகள் அபகரிக்கப்பட்டுவிட்டன. இக்கோயில் விமானம் சீர்கேடான நிலையிலுள்ளது. இதனைப் பாதுகாக்க வேண்டியது அவசியமாகும்.

## உக்கல்

செங்கல்பட்டு மாவட்டத்தில் உள்ளது. விக்கிரமாபரண சதுர்வேதிமங்கலம் என்ற பழம் பெயர் உடையது. இங்குள்ள புவன மாணிக்க விஷ்ணு கிருகம் பல்லவ கம்பவர்மன் காலத்தில் கட்டப்பட்டது. இங்கு இராசகேசரி ஆதித்தனின் 23–ஆம் ஆண்டுக் கல்வெட்டு காணப்படுகிறது. கருவறை அர்த்த மண்டபம் என்ற இரண்டின் சுவர்களும் பழைய கல்வெட்டுக்களோடு காணப்படுகின்றன. கூரைப்பகுதி இடிந்து போகவே கோயில் கற்றுண்டுகள் நிரப்பி பாழாய்க் கிடக்கிறது. எளிய செலவில் இக்கோயிலை மீண்டும் புதுப்பிக்க வேண்டியது அவசியமாகும்.

## தக்கோலம்

இவ்வூரிலுள்ள கோயில் திருவூறல் மகாதேவர் கோயில் என்பது. இ..து ஆதியில கங்கர் நாட்டில இருந்த கோயிலாகும்.

இக்கோயிலில் இராசகேசரிவர்மனின் 21-ஆம் ஆண்டுக் கல்வெட்டும், 24-ஆம் ஆண்டுக் கல்வெட்டில் கங்க அரசனுன இரண்டாம் பிருதிவீபதி மகாதேவருக்குக் கொடுத்த தானமும் குறிப்பிடத்தக்கன. இவ்வூரிலேயே பராந்தகன் மகன் இராசாதித்தனுக்கும் இரட்டபாடி மன்னன் மூன்ரும் கிருஷ்ண னுக்கும் போர் நிகழவே இராசாதித்தன் கொலையுண்டான் என அறிகிருேம்.

## தீக்காலி வல்லம்

இது செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ளது. திருவல்லம் எனவும் வாணபுரம் எனவும் வழங்கப்படுகிறது. இது பாணர் களின் தலைநகரம். இங்குள்ள இறைவனுக்குத் தென் தளித் தீக்காலிப் பெருமானடிகள் என்பது பெயர். இக்கோயில் முத லில் பாணர்களால் கட்டப்பட்டிருக்க வேண்டும். பாணமன்னர் சிலருடைய கல்வெட்டுக்கள் இங்குக் காணப்படுகின்றன. இப் பாணர் கல்வெட்டுக்களில் ஒன்றுதான் மூல சாஸனம். இக் கற் பலகை கோயில் தளத்தில் புதைக்கப்பட்டுள்ளது. மற்றவை சோழர்கள் புதிதாக எடுப்பித்த கற்றளியின் சுவர்களில் பதிக்கப்பட்டுள்ளன. சிகரம் எட்டு கோணங்களை உடையது, விமானம் அழகியது. கிரீவத்தின் நாற்றிசைகளிலும் அழகிய சிலைகள் உள. அண்மையில் கோயில் புதுப்பிக்கப்பட் டுள்ளது.

## திருச்செந்துறை

திருச்சி மாவட்டத்துத் திருச்செந்துறையில் சந்திரசேகரர் கோயில் காணப்படுகிறது. இக்கோயிலை ஆராய்ச்சியாளர் முதற் பராந்தகன் காலத்தது என்று கூறுகின்றனர். இக் கோயிலுக்குத் திருச்செந்துறைப் பெருமானடிகள் கற்றளி என்பது பழம் பெயர். இதைத் தென்னவன் இளங்கோவேளார் மகளும் சோழப் பெருமானடிகள் (முதற் பராந்தகன்) மகனுன அரிகுல கேசரியாரின் தேவியுமான பூதி ஆதிச்ச பிடாரியார் கற்றளியாக எடுப்பித்தார் என்ற செய்தி பரகேசரியின் மூன்ரும் ஆண்டுக் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. ஆனுல் இதே கோயிலில் இராசகேசரியின் 23-ஆம் ஆண்டிலேயே ஆதிச்ச பிடாரியார் ஒரு நிவந்தம் அளித்த செய்தி கூறப்படுவதால், இக்கோயில் ஆதிச்ச பிடாரியால் இராசகேசரி ஆதித்தன் காலத்திலேயே

கட்டப்பட்டிருத்தல் வேண்டும். இதன் தென் தேவகோஷ்டத்தில் தட்சிணாமூர்த்தியின் சிலைக்குப் பதிலாக ரிஷபவாகன தேவரின் சிலையைக் காணலாம்.

### சீநிவாசநல்லூர்

திருச்சி மாவட்டத்துச் சீநிவாசநல்லூரிலுள்ள குரங்கு நாதர் கோயில் ஆராய்ச்சியாளரால் பராந்தகன் காலத்துக் கலைப்பாணிக்கு உதாரணமாகக்காட்டப்படுவது. ஆனால் இக் கோயிலிலுள்ள இராசகேசரியின் 24-ஆவது ஆண்டுக் கல் வெட்டு ஆதித்தன் காலத்தைச் சேர்ந்தது. இக்கோயில் ஆதித்தன் காலம் முதல் முதலாம் குலோத்துங்கன் காலம்வரை (கி. பி. 895—1091) பல நன்கொடைகள் பெற்றுச் சிறப்புற்று வந்தது என்பது கல்வெட்டு அறிவிக்கும் செய்தியாகும்.

### ஆலம்பாக்கம்

திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த ஆலம்பாக்கம் என்ற ஊர் தந்திவர்ம பல்லவன் காலத்திலிருந்து சிறப்புற்று விளங்கியது. தந்திவர்ம மங்கலம் என்பது இவ்வூரின் பெயர். இவ்வூரையடுத்து வெட்டப்பட்ட ஏரி இப் பல்லவனுடைய விருதுப் பெயரால் மாற்பிடுகு ஏரி என்று குறிப்பிடப்பட்டது. இவ்வூர்ச் செல்லியம்மன் கோயில் இராசகேசரி ஆதித்தனின் 23-ஆம் ஆண்டிற்கு முன் எடுப்பிக்கப்பட்ட சப்தமாதர் கற்றளியாகும்.

இங்குள்ள கைலாசநாதர் கோயில் என்ற சிவன் கோயிலும் மேற்குப் பகுதியிலுள்ள திருமேற்றளிப் பெருமான் கோயில் என்று பண்டு வழங்கிய வரதராசப் பெருமான் கோயிலும் பழஞ் சிறப்புடையன.

### லால்குடி

திருச்சி மாவட்டத்தில் உள்ள லால்குடியிலுள்ள சப்தரிஷீசுவரர் கோயில் பண்டு திருத்தவத்துறைப் பெருமான் கோயில் என்று குறிப்பிடப்பட்டு வந்தது. பல்லவர் காலத்தில் இது மண்டளியாக இருந்து இராசகேசரியின் 27-ஆம் ஆண்டோ அதற்குச் சற்று முன்னரோ கற்றளியாகக் கட்டப் பட்டிருக்க வேண்டும்.

இவ்வொருதளக் கற்றளி வட்டமான சிகரமுடையது.

## திருக்கழுக்குன்றம்

செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள திருமூலத்தானப் பெருமானடிகள் கோயில் ஆதித்தனுடைய 27-ஆம் ஆண்டில் தூங்கானை மாட அமைப்பில் கற்றளியாக எடுப்பிக்கப்பட்டது. ஆதித்தன் தொண்டை மண்டலத்தை வென்றபின் திருக்கழுக் குன்றப் பெருமானடிகள் கோயிலைக் கற்றளியாக எடுப்பித் துத் தனக்கு முற்பட்ட மன்னர்கள் அக்கோயிலுக்கு வழங்கிய தானங்களைக் காப்பாற்றிக் கல்லில் வெட்டுவித்தான். ஆதித் தன் எடுப்பித்த அக்கோயில் தற்போது வேதகிரி மலையின் அடிவாரத்தில் உள்ள பக்தவத்ஸலர் கோயிலின் இரண்டாம் வடக்குப் பிராகாரத்தில் காணப்படும் திருவாபரணக் கொட் டடியே என்பதும், இதன் பழைய கூரை தற்போது இல்லை என்பதும், இக்கோயில் ஆதித்தன் காலம் முதல் இரண்டாம் இராசாதிராசனின் 9-ஆம் ஆண்டு (1172) வரை நன்னிலையில் இருந்திருக்க வேண்டும் என்பதும், இதனை உள்ளடக்கிய பக்தவத்ஸலர் கோயில் 13-ஆம் நூற்றாண்டில் பாண்டியர் களால் எடுப்பிக்கப்படவே இதன் பொலிவு மழுங்கி விட்டது என்பதும், முன்பு விளக்கப்பட்டன. இஃது ஆதித்தன் காலத் துத் தொண்டை மண்டலத்தில் உள்ள முக்கியமான கோயி லாகும்.

## முதற் பராந்தகன்

இந்த விமரிசனத்தில் பராந்தகன் காலத்தனவாகிய 30 கோயில்கள் பற்றிய கால நிர்ணயத்தைக் காணலாம்.

## திருவாவடுதுறை

தஞ்சை மாவட்டத்துத் திருவாவடுதுறைக் கோமுக்சுவரர் கோயிலில் பரகேசரிவர்மனின் இரண்டாம் ஆண்டுக் கல் வெட்டு ஒன்றில் 'ஆதித்தபன்மர் தெறிந்த கைக்கோளர்' படையின் அங்கத்தினர் ஒருவர் இக்கோயில் நிலத்தில் தென்னை மரம் வளர்க்கவும் நந்தனவனம் அமைக்கவும் நிபந்தம் விட்ட செய்தி கூறப்பட்டுள்ளது. இவ்வரசனின் மூன்றாம் ஆண்டில் பதிகம் பாடுவோர், வாத்தியம் வாசிப்போர், அபிஷேகத்துக்குத் திருமஞ்சன நீர் கொணர்வோர் ஆகியோர் ஊதியத்துக்குக் கற்றளிப் பிச்சன் நிலத்தானம் செய்த செய்தி

குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வரசனின் 25–ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக்கோயிலைக் கற்றளியாக அமைத்தவன் கற்றளிப் பிச்சனே என்று சுட்டுகிறது. மற்றொரு முக்கியமான கல்வெட்டு பராந்தக தேவனே 500 கழஞ்சு பொன் வழங்கி இக்கோயிலின் குடப்படைக்கு மேலுள்ள பாகத்தைக் கட்டிக் கோயில் பணியைப் பூர்த்தி செய்ததைக் குறிப்பிடுகிறது. மற்றொரு கல்வெட்டு இக்கோயிலுக்கு வழங்கப்பட்ட பொன் வெள்ளிப் பாண்டங்களும் திருமேனிகளும் பற்றிச் சொல்லுகிறது. பராந்தகச் சோழனின் நேர்முகத் தொடர்புடைமை இக்கோயிலின் தனிச் சிறப்பாகும்.

இக்கோயிலிலுள்ள தேவகோஷ்டங்களில் கணபதி, அகத்தியர், தட்சிணாமூர்த்தி, லிங்கபுராணதேவர், பிரமன், துர்க்கை என்ற தெய்வங்களின் சிலைகளைக் காணலாம்.

## திருவாமாத்தூர்

தென்னார்க்காடு மாவட்டத்துத் திருவாமாத்தூரிலுள்ள அபிராமேசுவரர் கோயில் 'அருகூர்த்தச்சன் நாரணன் வேகண்டன் ஆகிய திருவாமாத்தூர் ஆசாரி'யால் எடுக்கப்பட்டது. இங்கு பரகேசரிவர்மனின் மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டு ஒரு நந்தாவிளக்குக்கு 10 பொன் வழங்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது.

ஸ்ரீபலி கொணர்ந்த யானையின் மாவுத்தன் பெற்று வந்த ஜீவிதத்தை நிறுத்தியமையால் அச்சடங்கு தடைப்படவே கோயில் பன்மாகேசுவரர்கள் மன்னனிடம் சென்று முறையிட்டு இப் பரிசைத் திரும்பவும் நிலைபெறச் செய்தனர். இக்கோயிலின் அர்த்த மண்டபப் பகுதியின் தென் கோஷ்டத்தில் பிக்ஷாடனதேவர் சிலை காணப்படுகிறது.

## அள்ளூர்

திருச்சியிலிருந்து கருவூர் செல்லும் வழியில் ஆறு கல் தொலைவில் உள்ள அள்ளூரில் சாலையின் அருகே திருவடகுடிப் பரமேசுவரர் என்று பழம் பெயர் கொண்ட பஞ்சநதீசுவரருடைய ஆலயமும், சாலைக்கு 2 கல் தெற்கே உள்ள பசுபதீசுவரர் கோயிலும் பராந்தகன் காலத்துக் கோயில்களே.

## சோமூர்

திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த இவ்வூர் பழைய கொங்கு நாட்டிலிருந்ததோர் ஊராகும். இதிலுள்ள சோமேசுவரமுடையார் கோயிலில் பரகேசரிவர்மனின் ஆறும் ஆண்டுக் கல்வெட்டுள்ளது. அதில் கொங்கு நாட்டை ஆதித்த சோழன் வென்ற செய்தி கூறப்பட்டுள்ளது. சோமூர் சோழ நாட்டுடன் சேர்க்கப்பட்ட பின்னரே இக்கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும்.

## புள்ளமங்கை

பசுபதிகோயிலுக்கு அருகிலுள்ள **புள்ளமங்கைக் கோயில்** பராந்தகன் காலத்தில் எடுப்பிக்கப்பட்டு இன்றும் சீரிய நிலையில் இருந்துவரும் கோயிலாம்.

## உய்யக்கொண்டான் திருமலை

திருச்சி நகருக்கு 3 கல் தொலைவில் உள்ள உய்யக்கொண்டான் திருமலை பண்டு **நந்திபுரமங்கலம்** என்று வழங்கப்பட்டது. இங்குள்ள கோயில் பண்டு 'திருக்கற்றளிப் பரமேசுவரர் கோயில்' என்று வழங்கப்பட்டது. தற்போது உச்சீவனநாதர் கோயில் என்று வழங்கப்படுகிறது. பராந்தகனுடைய 10–ஆம் ஆண்டுக் கல்வெட்டு இத்தேவருக்கு அளிக்கப்பட்ட விளக்கு தானத்தைக் குறிக்கிறது.

## நங்கவரம்

திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த நங்கவரம் பண்டு நங்கை பிர்மதேயமான அரிஞ்சிகைச் சதுர்வேதி மங்கலம் என்று வழங்கப்பட்டது. தற்போது இங்குக் காணப்படும் சுந்தரேசுவரர் கோயில் பண்டு மறவனீசுவரத்துப் பெருமான் கோயில் என்று வழங்கப்பட்டது. பரகேசரிவர்மன் பராந்தகனுடைய 10–ஆம் ஆண்டில் செம்பியன் இருக்குவேளான பூதி பராந்தகனர் தேவியார் சோழப் பெருந் தேவியார் தமது பிறந்த நாளில் சூரிய கிரகணம் நேர்ந்தமையால், 1080 கழஞ்சு பொன்னைப் பூசைக்கும் நைவேத்தியத்துக்கும் விழாவுக்கும் முதலாக நிவந்தம் செய்தார் என்ற செய்தி காணப்படுகிறது, பராந்தகன் 34–ஆம் ஆண்டில் கண்டராதித்தன் தேவியாரான பராந்தகன் மாதேவடிகள் செய்த விளக்குத் தானம் குறிப்

பிடப் படுகிறது. இவ்வூரின் தெற்கிலுள்ள பிடாரியார் சாத்த னூர் நங்கை என்ற பிடாரி கோயிலும் பராந்தகன் காலத்தது. அது தற்போது புதுப்பிக்கப்பட்டுள்ளது.

## திருமால்புரம் (திருமாற்பேறு)—கோவிந்தபாடி

திருமால்புரம் காஞ்சிக்கு அப்பால் அரக்கோணம் செல் லும் பாதையில் உள்ளது. இங்குள்ள சிவன் கோயில் மணி கண்டேசுவரர் கோயில் என்பது. இங்குள்ள பராந்தகனின் 37–ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒரு நிலத்தானம் பற்றிக் குறிப் பிடுகிறது. மற்றென்று 'கோநேர் இன்மை கொண்டான்' ஆகிய உத்தம சோழனின் 14–ஆம் ஆண்டைச் சார்ந்தது. சரித்திர சம்பந்தமான முக்கியமுடைய இக்கல்வெட்டின் செய்தி பின்வருமாறு :

இம்மன்னன் தன் 14–ஆம் ஆண்டு 216–ஆம் நாள் கச்சிப் பேட்டுப் (காஞ்சிபுரம்) பொன்மாளிகையில் கொலு வீற்றிருந்த போது சோழ மூவேந்த வேளான் என்பவன் திருமால் பேற்று மகாதேவருக்குப் பிரமதேயமான புதுப்பாக்கத்துச் சபையா ருக்குத் தேவதான பிரமதேயமாக ஆதித்த சோழனுடைய 12–ஆம் ஆண்டு கொடுத்து, 22–ஆம் ஆண்டு பிடாகை நடந்து சாஸனம் செய்து கொடுத்து வரியிலிடாதே கிடந்த இவ்வூர் முதல் பராந்தகனுடைய நான்காவது ஆண்டில் தேவதான பிரமதேயமாக வரியிலிடப்பட்டது. இப்பரிசின்படி புதுப் பாக்கத்துச் சபையார் செலுத்த வேண்டிய புரவும், இறவும், பொன்னும் செலுத்தாமல் இருந்தார்கள். மேலும் பராந்தக னுடைய 36–ஆவது ஆண்டில் வேறு சில நிலங்களும் திருமாற் பேற்று மகாதேவர்க்குத் தேவதான இறையிலியாக வரியி லிடப்பட்டன. ஆனால், இக்காணியைப் புதுப்பாக்கத்துச் சபையார் பற்றியுண்டு தேவர்க்கு இறை இருது ஒழிந்தனர் என்று அரசனிடம் தேவகன்மிகளும் உண்ணாழிகை உடை யாரும் பன்மாகேசுவரரும் வந்து புதுப்பாக்கத்துச் சபையார் செய்துவரும் அநியாயத்தை முறையிட நிற்பதைத் தெரிவிக் கவே, அரசன் இவர்கள் யாவரையும் கூட்டி ஆராய்ந்த விடத்தே புதுப்பாக்கத்துச் சபையார் குற்றம் செய்த உண்மை புலனாகவே, சிற்றியாற்று ஊரால் புரவு 6000 காடி நெல்லும், இறவு 561 காடி நெல்லும், பொன் 26½ கழஞ்சு மஞ் சாடியும் திருமாற்பேற்று மகாதேவர்க்குப் புதுப்பாகக்கத்துச்

சபையார் இருக்க வேண்டும் என்று மன்னன் ஆணையிட்டான்.

இவ்வரிய செய்தியைத் தாங்கி நின்ற கல்வெட்டு கோயில் புதுப்பிக்கப்பட்ட காலத்தில் கல்வெட்டினைத் தாங்கிய கற்களைப் பிரித்து நாலா பக்கங்களிலும் பொருத்தியதால் சிதறுண்டு வீணாயினமை வருந்தத்தக்கது. இக்கோயிலுக்கு அருகிலேயே விண்ணகரம் ஒன்று இருந்தது. கோவிந்தபாடியிலுள்ள நின்றருளிய பெருமானடிகள் என்பது இப்பெருமாளுடைய பெயராகும். பராந்தகன் 12–ஆம் ஆண்டு முதல் 41–ஆம் ஆண்டு வரை பல காணிக்கைகள் இப்பெருமாளுக்கு வழங்கப்பட்டன. பராந்தக சோழன் மகனான உத்தமசீலியும் சோழதேவிமார்கள் பலரும் பல நிவந்தங்கள் கொடுத்துப் போற்றி வந்த இப்பெருமாள் கோயில் இருந்த இடம் தெரியாமல் அழிந்து போயினமை வருந்தத்தக்கது.

## கீழூர்

விழுப்புரத்திற்கு மேற்கே 25 கல் (40 கி. மீ.) தொலைவில் தென்பெண்ணையாற்றின் தென் கரையில் உள்ள ஊர் கீழூராகும். இது திருக்கோவலூரை அடுத்துள்ளது. சங்க காலத்தில் மலையமான்கள் இப்பகுதியை ஆண்டு வந்தனர். இங்குள்ள விஷ்ணு கோயிலில் எழுந்தருளியுள்ள திருவிடைக்கழியாழ்வாரைத் திருமங்கை மன்னன் மங்களா சாசனம் செய்துள்ளார். இங்குள்ள சிவன் கோயில் சிவபெருமான் அந்தகாசுரனை அழித்த வீரட்டத்தானமாகும். மூன்றும் நந்திவர்மன். நிருபதுங்கன் கல்வெட்டுக்களும், விசயாலயனின் 5–ஆம் ஆண்டுக் கல்வெட்டும் இக்கோயிலில் கிடைத்துள்ளன. எனினும் இதன் கட்டிட அமைப்பு முதற் பராந்தகன் காலத்ததாகத் தோன்றுகிறது.

## திருச்சென்னம்பூண்டி

தஞ்சை மாவட்டத்தில் கொள்ளிடத்தின் தென்கரையில் திருப்பேர்நகர் என்ற பழம் பெயருடைய கோயிலடிக்கு 2 கல் கிழக்கில் உள்ளது திருச்சென்னம்பூண்டி. இங்கிருந்த பழைய சிவன் கோயிலில் வீற்றிருந்த சிவபெருமான் திருச்சடை முடியுடைய மகாதேவர் என்று வழங்கப்பட்டார். இக்கோயிலின் முன் மண்டபத் தூண்கள் மீது நிருபதுங்க பல்லவ

னுடைய பல ஆண்டுக் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. ஆனால் கருவறையின் சுவர்கள்மீது முதற் பராந்தகனின் 14-ஆம் ஆண்டு முதல் 37-ஆம் ஆண்டு முடியப் பல கல்வெட்டுக்கள் காணப்படுவதால் இக்கோயில் நிருபதுங்கன் காலத்திற்கும் பராந்தகச் சோழனின் 14-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் கற்றளியாக எடுப்பிக்கப்பட்டிருத்தல் வேண்டும். இப்பழைய சிவன் கோயில் இப்பொழுது பிடாரி கோயிலாக மாறியிருக்கிறது. இங்குக் கிடைத்த அழகிய அர்த்தநாரீசுவரர் சிலை சென்னைக் கண்காட்சி சாலையில் உள்ளது.

## அந்தநல்லூர்

திருச்சியிலிருந்து கருவூர் செல்லும் பாதையில் 7-ஆவது கல்லில் உள்ள அந்தநல்லூர் பண்டு அந்தவநல்லூர் என்று வழங்கப்பட்டது. இங்குள்ள திருவாலந்துறை மகாதேவர்கோயில் செம்பியன் இருக்குவேளான பூதி பராந்தகனால் கட்டப்பட்டது. இவனும் இவன் தேவியர்களும் இதற்கு வழங்கியுள்ள நிவந்தங்கள் பல. இக் கோயிலில் பராந்தகனுடைய 10-ஆம் ஆண்டு முதல் 25-ஆம் ஆண்டுவரை பல கல்வெட்டுகள் கிடைத்துள்ளன.

## திருவாண்டார் கோயில்

விழுப்புரத்திலிருந்து புதுச்சேரி செல்லும் பாதையில் இவ்வூர் 11 கல் தொலைவில் உள்ளது. இப்போது இங்குள்ள கோயில் பஞ்சநதீசுவரர் கோயில் என்று வழங்கப்படுகிறது. சம்பந்தர் இக்கோவிலை வடுகூர் அடிகள் கோயில் என்றும் இவ்வூரை வடுகூர் என்றும் தம் பதிகத்தில் குறிப்பிட்டுள்ளார். இக்கோயிலில் இராசகேசரிவர்மனின் 5-ஆம் ஆண்டுக் கல்வெட்டு கிடைத்துள்ளது. கோவிலின் கட்டிட அமைப்பிலிருந்து இது முதலாம் பராந்தகன் காலத்தது என்று தோன்றுகிறது. உத்தமசோழன் காலத்திலும் இக்கோயிலில் சில மாறுதல்கள் ஏற்பட்டிருக்கவேண்டும் எனத் தோன்றுகிறது.

## திருவொற்றியூர்

செங்கற்பட்டு மாவட்டத்தில் கடற்கரையை அடுத்துள்ள திருவொற்றியூர் பல்லவர்கள் காலத்திலிருந்தே புகழ்

வாய்ந்தது. இங்கு மூன்றும் நந்திவர்மன், அபராசிதன் ஆகிய பல்லவ மன்னர்களின் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன, முதலாம் பராந்தகன் காலத்தில் இவ்வூரே சோணுட்டின் வட வெல்லையாக இருந்திருக்கவேண்டும். இவ்வூருக்கு வடக்கி லுள்ள சீத்புலிநாடு, நெல்லூர் என்பவற்றைப் பராந்தகன் வென்ற போதிலும் விரைவில் இழந்தான். இக்கோயில் தூண் களில் பராந்தகனுடைய பல கல்வெட்டுகள் காணப்படுகின்றன. ஆனுல் இக் கோயில் முதல் இராசேந்திரன் காலத்தில் முத்தளக் கற்றளியாகச் சீரிய முறையில் கட்டப்பட்டது.

## எறும்பூர் (பண்டைய உறுமூர்)

தென்னுர்க்காடு மாவட்டத்தில் தற்போது எறும்பூர் என்று வழங்கப்படும் ஊரிலுள்ள கடம்பவனேசுவரர் கோயில் பராந்தகனுடைய 28-ஆம் ஆண்டு (கி. பி. 935) கற்றளியாக அஷ்டபரிவாரக் கோயில்களோடு எடுப்பிக்கப்பட்டது.

## காட்டுமன்னுர்குடி—உடையார்குடி

பராந்தகன் தன் பெயரால் நிறுவிய பல சதுர்வேதி மங்கலங்களில் **வீரநாராயண சதுர்வேதிமங்கலம்** என்று பண்டு வழங்கப்பட்ட காட்டுமன்னுர்குடியில் வீரநாராயண விண்ண கரம் என்ற திருமால் கோயில் எடுப்பிக்கப்பட்டது. இக் கோயிலின் பழைய உருவை அழித்துப் பதின்மூன்றும் நூற்ருண்டினனுன சடையவர்மன் சுந்தர பாண்டியன் புதுப் பித்து விட்டான்.

அருகில் உள்ள உடையார்குடி என்ற பிடாகையில் உள்ள அநந்தீசுவரம் என்ற சிவன் கோயிலில் பராந்தக னுடைய 33-ஆம் ஆண்டுக் கல்வெட்டு காணப்படுகிறது. இக்கோயிலின் முக்கிய உறுப்புக்கள் பழைய நிலையில் இன்னும் இருந்து வருகின்றன.

## திருநாவலூர்—கிராமம்

திருநாவலூர், கிராமம் என்ற இரண்டு ஊர்களும் அருகிலேயே உள்ளன. திருநாவலூரிலுள்ள திருத்தொண்டீ சுவரம் தற்போது **பக்த ஜனேசுவரர் கோயில்** என்று வழங்கப் படுகிறது. கிராமம் என்ற ஊரிலுள்ள கோயில் சிவலோக

நாத சுவாமி கோயில் என்று வழங்கப்படுகிறது. இரட்டர்கள் சோழநாட்டின் வடவெல்லையை அடிக்கடித் தாக்கினர். இங்கு எதிரி பயம் இருந்ததால் இப்பகுதியில் படைவீடு ஒன்று அமைத்துப் பராந்தகனின் மூத்தமகனான இராசாதித்தன் படைத்தலைமை தாங்கினான். இவனே, கிராமம் என்ற ஊரில் இளவரசுப்பட்டம் சூட்டப்பெற்றான் (கி. பி. 947). இக் கிராமம் என்ற ஊர் திருமுடியூர் அல்லது மௌலிகிராமம் என்று பண்டு வழங்கப்பட்டது. இராசாதித்தன் கி. பி. 949-இல் தக்கோலப் போரில் கொலையுண்டான்.

கிராமம் சென்னை—திருச்சிப் பெருவழியில் சென்னையிலிருந்து 117 கல் தூரத்தில் மேற்கே திருக்கோயிலூருக்குச் செல்லும் பாதையில் இரண்டு கல் தொலைவிலுள்ளது. இவ்வூர்க்கோயிலில் பராந்தகன் கல்வெட்டுக்கள் பல உள்ளன. அவற்றுள் முக்கியமானது பராந்தகனின் 36-ஆம் ஆண்டுக் கல்வெட்டு. இது கலியுகம் 4044 ஆவது ஆண்டு 14,77,037-ஆம் நாள் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இது கி. பி. 943 ஜனவரி 14-ஆம் நாளுக்குச் சமமானது என்று சோதிட வல்லார் கணக்கிட்டுள்ளனர். இந்நன்னாளில் 'திருமுடியூர் ஆற்றுத்தளிப் பெருமானடிகளை எழுந்தருளுவித்துப் பிரதிஷ்டை செய்வித்தார் சோழர்கள் மூலபிருத்தியர் ஸ்ரீ பராந்தக தேவரான ஸ்ரீ வீரசோழப் பெருமானடிகள் மகனார் ராஜாதித்ய தேவப் பெரும்படை நாயகர் மலைநாட்டு நந்திக்கரைப்புத்தூர் வெள்ளான் குமரன்' என்பது அக்கல்வெட்டால் அறியப்படுகிறது. இக்கோயிலில் பராந்தகனின் 23-ஆம் ஆண்டுமுதல் 41-ஆம் ஆண்டுவரை பல கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. இதன் கருவறையும் அர்த்த மண்டபமும் பழைய கலைப்பாணியைக் காட்டுவன. தேவகோஷ்டங்களில் கணபதி, தட்சிணாமூர்த்தி, விஷ்ணு, பிரமன், துர்க்கை, இவர்களைக் காணலாம்.

## திருநாவலூர்

இவ்வூர் சுந்தரமூர்த்தி நாயனாரின் பிறப்பிடம். இவ்வூரிலுள்ள பராந்தகனின் 32-ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று பிள்ளையார் இராசாதித்த தேவரின் பரிவாரத்தைச் சேர்ந்த ஒருவன் திருமேற்றளி மகாவிஷ்ணுவுக்கு நிவந்தம் செய்து கொடுத்ததைக் கூறுவதால் ஒரு விஷ்ணு கோயில் அக்காலத்

தில் இருந்ததாக ஊகிக்கலாம். அக்கோயில் இப்பொழுது மறைந்து விட்டது.

இப்பொழுது இங்குள்ள முக்கியக்கோயில் **திருத் தொண் டீசுவரம்** ஆன **இராசாதித்தீசுவரம்** என்று வழங்கப்படுகிறது. பராந்தகனின் 28-ஆம் ஆண்டில் இக்கோயிலைத் திருக்கற்றளி செய்வித்த இராசாதித்த தேவர் தாயார் நம் பிராட்டியார் கோக்கிழான் அடிகளின் பரிவாரத்தாள் ஆன சித்திர கோமளம் என்பாள் ஒரு நந்தாவிளக்கு வைத்து அதை முட்டாமல் எரிக்கச் சாவாமூவாப் பேராடு தொண்ணூறுவிட்ட செய்தியைக் குறிப்பிடுவதால் இக்கோயில் பராந்தகன் காலத்தில் கற்றளியாக எடுப்பிக்கப் பட்டது என்பது வெளிப்படை.

## தொண்டைமா நாடு—ஆதித்தேசுவரம்

தொண்டைமான் ஆற்றூரில் பராந்தகன் தன் ஆட்சி 34-ஆம் ஆண்டிற்கு முன் தன் தந்தை **ஆற்றூர்த்துஞ்சிய தேவரான ஆதித்ததேவருக்குப் பள்ளிப்படையாக** எடுப்பித்த கற்றளி ஆதித் தேசுவரம்.

## சித்தூர்

புதுக்கோட்டை–திருச்சிப் பெருவழியில் உள்ள சிற்றூர் என்பதன் பழைய பெயர் **சிற்றையூர்** என்பது. இங்குள்ள கோயில் **திரு அக்நீசுவரத்துப்பரமேசுவரர்** கோயில் என்று வழங் கப்படுகிறது. இங்குள்ள பழைய கல்வெட்டு இராசகேசரி வர்மனின் நான்காம் ஆண்டிற்குரியது. பராந்தகனின் இறுதிக் காலத்திலும் கண்டராதித்தன் காலத்திலும் வாழ்ந்த **மகிமாலய இருக்குவேள் ஆன பராந்தக வீரசோழன்** இப்பரமேசு வரனின் நைவேதனத்திற்கும் ஸ்ரீபலிக்கும் உதவ மூன்று வேலி நிலத்தைத் தானம் செய்த செயலைக் குறிப்பிடுகிறது. இத் தலைவனே திருப்பராய்த்துறை, நீர்ப்பழனி, குடுமியான் மலை முதலிய தலங்களில் பல நிவந்தங்கள் செய்துள்ளான். கொடும் பாளூரில் உள்ள முசுகுந்தேசுவரர் (முது குன்றமுடையார்) கோயிலைக் கட்டியவனும் இவனே.

இம்மன்னன் காலத்தில் ஏறக்குறைய முப்பது கோயில் களாவது கட்டப்பட்டிருக்க வேண்டும். இன்னும் பல இருந் திருக்கலாம், ஆனால் அவைகளுக்குச் சான்றுகள் கிடைத்தில.

## ஆதித்தன் கலைப்பாணி

சோழர் காலக் கலைப்பாணியின் அம்சங்களைப் பரிசீலனை செய்யுங்கால் முற்பட்ட சோழர் காலமான கி. பி. 850க்கும் கி. பி. 985க்கும் இடைப்பட்ட பகுதியையே இரு கூறுகளாகப் பிரிக்கலாம். விசயாலயன், ஆதித்தன், முதற்பராந்தகன் இவர்களுடைய காலத்தை முதற்பகுதியினுடைய முதற் கூருகக் கொள்ளலாம்.

இம்மன்னர் மூவர்களுக்குள் ஆதித்தன் காலத்திலேயே கோயில்கள் மிகுதியாகக் கட்டப்பட்டன என்பதை விளக்கினேம். ஆகவே முற்பட்ட சோழர்கள் நாட்டை வென்று சீர் செய்வதிலேயே தம் கருத்தைச் செலவிட்டதால் கலைகளை நன்கு வளர்க்கவில்லை என்ற கூற்று ஆதாரமற்றது என்பதும் விளக்கப்பட்டது.

இம் முதற் பகுதியின் முற்கூருகிய காலத்துக் கோயில் களில் நார்த்தாமலையிலுள்ள விசயாலய சோளீசுவரமே எல்லா விதங்களிலும் மேம்பட்டது. இக்காலத்தில் கட்டப்பட்ட கோயில்கள் பெரும்பாலும் கற்றளிகளே. முன்னிருந்த மண் டளிகள் சிலவும் கற்றளிகளாக மாற்றப்பட்டன. ஒன்று முதல் நான்கு வரை தளங்கள் கொண்ட விமானங்கள், தளத்தின் மேலுறுப்புகளாகக் கிரீவம், சிகரம், ஸ்தூபி என்பன இக் காலக் கோயிலின் உறுப்புகளாம். சிகரங்கள் சதுரம், வட்டம், அட்டகோணம் என்ற வடிவுகளில் உள்ளன. சப்தமாதர் தளி கள், தூங்கானை மாடக் கோயில்கள் ஆகியவைகளின் கூரை கள் வண்டிக்கூடுகள் போல உள்ளன.

கருவறை சதுரவடிவமானது. கருவறைக்கு முன்னல் அர்த்த மண்டபம் உள்ளது. சில கோயில்களில் கருவறைக்கும் அர்த்தமண்டபத்துக்கும் இடையிலும், அர்த்த மண்டபத் துக்கும் முகமண்டபத்துக்கும் இடையிலும் அந்தராளம் உள் ளது. கீழையூரிலும் திருவையாற்றிலும் கருவறையும் அர்த்த மண்டபமும் இடைவெளியுடன் தனித்து இருந்தன; பிற்காலத் தில் அந்தராளமும் இரு வாயில்களும் அமைத்து இணைக்கப் பட்டன.

தேவகோஷ்டங்கள் மூன்று அல்லது ஐந்து என்ற எண் ணிக்கை உடையன. விசயாலய சோளீசுவரம் போன்ற சில கோயில்களில் தேவ கோஷ்டங்களே இல்லை, தேவகோஷ்டத் தின் மேல் மகரதோரணம் உள்ளது. தேவகோஷ்டத்தில்

தக்ஷிணமூர்த்தி, விஷ்ணு, பிரமன், கணபதி, துர்க்கை என்ற தேவதைகள் உள்ளன. இவைகளைத் தவிரச் சில கோஷ்டங்களில் வேறுசிலைகளும் உள்ளன.

விரலூர்க் கோயிலில் பிரமனுக்குப் பதிலாக பிக்ஷாடனரும், திருக்கட்டளைக் கோயிலில் தட்சிணாமூர்த்திக்குப் பதிலாக திரிபுராந்தக தேவரும், வேற்றுக் கோயில்களில் அர்த்தநாரீசுவரர், அரிகரர், லிங்கோத்பவர், அருணசலேசுவரர், சுப்பிரமணியர் ஆகிய தேவரும் காட்சியளிக்கின்றனர்.

நடுவில் மனிதத்தலை அல்லது அன்னப்பறவை அமைக்கப் பட்ட கூடுகள், கொடிக்கருக்கு, நுனியில் வட்டங்கள் இவற்றால் அலங்கரிக்கப் பட்ட கொடுங்கைக்குக் கீழே பூத கணவரியும் மேலே யாளிவரியும் காணப்படுகின்றன.

இக் காலத்தில் மூலஸ்தானத்தைச் சுற்றிலும் எட்டுப் பரிவார தேவதைகளின் கோயில்கள் மதிலை ஒட்டிக் கட்டப் பட்டன.

சந்நிதிக்கு நேரே உள்ள மதிலின் நடுவில் துவாரபாலகரோடு கூடிய கோபுரம் அமைக்கப்பட்டது. இவ்வுறுப்புக்கள் எல்லாவற்றையும் கீழையூர் அவனிகந்தர்ப்ப ஈசுவர கிருகத்தில் இன்றும் காணலாம்.

திருநாகேசுவரம், கும்பகோணம், திருக்கண்டியூர், புள்ளமங்கை முதலிய கோயில்களில் அரைத் தூண்களுக்கும் தேவ கோஷ்டங்களுக்கும் அடியில் நுட்பவேலைப்பாடு அமைந்த சிற்றுருவக்கற்றகடுகள் பதிக்கப்பட்டுள்ளன.

இக்காலத்தில் தனியே அம்மன் கோயில்கள் ஏற்படவில்லை, அம்மனுடைய செப்புத் திருமேனிகளை வார்த்துப் பிரதிட்டை செய்துவந்தனர். அக்காலத்தில் உமாபட்டாரியார் என்றும் பிற்காலத்தில் போகேசுவரி என்றும் இச்சிலைகள் வழங்கப் பட்டன. கருவறையிலோ அர்த்த மண்டபத்திலோ இச்சிலைகள் இருந்து வந்தன.

பலிபீடம், கொடிமரம், நந்தி மண்டபம், தலவிருட்சம், திருக்குளம் என்பன இக்காலக் கோயில்களின் ஏனைய உறுப்புக்களாம்.

## சுந்தரசோழன்

சுந்தர சோழன் காலத்துக் கோயில்களில் கட்டிடக் கலையிலும் சிற்ப நுட்பங்களிலும் தனிச்சிறப்புப் பெற்றது கொடும்பாளூர் மூவர் கோயிலே.

## புஞ்சை

தஞ்சை மாவட்டத்தில் மாயூரத்திற்கு 6 கல் (10 கி. மீ.) அப்பாலுள்ள புஞ்சை என்ற ஊரில் திருநனிபள்ளி உடையார் கோயிலாகிய நல்துணை ஈசுவரம் உள்ளது. இக்கோயிலிலுள்ள மிகப்பழைய கல்வெட்டு இரண்டாம் ஆதித்தன் காலத்தது ஆகவே, இது அவன் காலத்திலோ அவன் தந்தை சுந்தர சோழன் காலத்திலோ கட்டப் பட்டிருத்தல் வேண்டும். இக்கல் வெட்டு கருவறைச் சுவரில் அமையாமல் சுற்றுக் கோயில்களில் ஒன்றான சண்டேசுவரர் கோயில் சுவரில் உள்ளது.

கருவறை, அந்தராளம், அர்த்த மண்டபம், மற்றொரு அந்தராளம், முக மண்டபம் என்பன இக்கோயிலின் முக்கிய உறுப்புக்களாம். இம்முக மண்டபம் முதலாம் இராசராசன் காலத்தில் கட்டப் பட்டிருக்கலாம். இங்குள்ள தேவகோஷ்டங்களில் கணபதி, அகத்தியர், தட்சிணாமூர்த்தி, லிங்கபுராணதேவர், பிரமன், துர்க்கை என்ற அருமையான வேலைப்பாடுகள் உடைய சிலைகளைக் காணலாம். விமானம் தற்போது புதுப்பிக்கப்பட்டு வருகிறது; விமானத்தைப் புதுப்பிப்பவர்கள்இவ்வரிய சிலைகளைச் சீர்கேடான நிலையில் வைத்துள்ளனர். அவர்களுக்கு மதப்பற்று மிக இருப்பினும் கலையின் உயர்வை அறியாமையே அவர்களின் கவனக் குறைவிற்குக் காரணமாகும்.

## உத்தம சோழன்

உத்தம சோழன் காலம் முழுவதும் அவனுடைய தாயாரான செம்பியன் மாதேவியாரின் சமயத்தொண்டும் கோயிற் பணியுமே சோழ நாட்டைப் பயன்பெறச் செய்தன. அவரால் எடுப்பிக்கப்பட்ட கோயில்கள் பல.

| ஊர்கள் | கோயில்கள் |
|---|---|
| 1. செம்பியன் மாதேவி | கைலாஸநாத சுவாமி கோயில் |
| 2. கோனேரிராசபுரம் | உமாமகேசுவரர் கோயில் |
| 3. ஆடுதுறை | ஆபத்சகாயேசுவரர் கோயில் |
| 4. திருக்கோடிக்காவல் | திருக்கோடீசுவரர் கோயில் |
| 5. குற்ருலம் | சொன்னவாறறிவார் சோளீசுவரம் |
| 6. திருநறையூர் | சித்தநாதசுவாமி கோயில் |
| 7. கண்டராதித்தம் | சிவலோகத்து மகாதேவர் என்னும் சொக்கநாதர் கோயில் |
| 8. விருத்தாசலம் | பழமலைநாதர் கோயில் |
| 9. திருவெண்ணெய் நல்லூர் | திருவருட்டுறை மகாதேவர் கோயில் |
| 10. திருவடந்தை | இடவெந்தை மணவாளப் பெருமாள் கோயில் |

இவையன்றிக் கரந்தை (கருந்திட்டைக்குடி) யிலுள்ள வசிட்டேசுவரர் கோயில், மயூரம் மயூரநாதர் கோயில், திருப்புறம்பயம் ஆதித்தேசுவரமுடையார் கோயில் முதலிய முற்பட்ட கோயில்கள் செம்பியன் மாதேவியார் காலத்தில் புதிய முறையில் செப்பனிடப்பட்டன.

## செம்பியன் மாதேவியின் கலைப்பாணி

செம்பியன் மாதேவியார் காலத்திற்கு முன்பு மூன்று அல்லது ஐந்தாக இருந்த தேவகோஷ்டங்கள் அவ்வம்மையார் காலத்தில் ஒன்பது முதல் பதினாறு வரை விரிவாக்கப்பட்டன. உதாரணமாகத் திருநறையூர் சித்தநாதசுவாமி கோயிலில் அகத்தியர், நடராசர், தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், பிரமன், பிக்ஷாடனர், அர்த்தநாரீசுவரர், துர்க்கை என்ற எட்டு தேவகோஷ்டச்சிலைகளும், கரந்தையில் முருகன், துர்க்கை, பிக்ஷாடனர், யமசம்ஹார மூர்த்தி, வீணாதர தட்சிணாமூர்த்தி, பிரமன், கங்காவிசர்சனமூர்த்தி, லிங்கோத்பவர், அர்த்தநாரீசுவரர், அகத்தியர், தட்சிணாமூர்த்தி, கணபதி, பிக்ஷாடனர், அப்பர், நடராசர், சம்பந்தர் என்ற 16 தேவகோஷ்ட

சிலைகளும் காணப்படுகின்றன. பழைய ஐந்து தேவதைகளைத் தவிர மற்ற தேவதைகள் கோயிற்சுவர்களை வெட்டியெடுக்கப் பட்ட இடங்களில் செருகப்பட்டுள்ளன. இதைத் தவிர கலைப் பாணியில் அதிக மாறுதல் இல்லை.

செம்பியன் மாதேவியோடு முந்திய சோழர் கலைப்பாணி முற்றுப்பெற்றது. முதல் இராசராசன் காலம் முதல் மத்திய காலம் தொடங்குகிறது.

## அத்தியாயம் 11

# இடைக்காலம் (கி. பி. 985 - 1070)

சோழ மன்னர்களுள் முதல் இராஜராஜன் முதல் முதலாம் குலோத்துங்கன் வரையில் உள்ள சிறந்த மன்னர்கள் ஆண்ட காலமே தென்னகத்து வரலாற்றில் மிகச் சிறந்த பகுதியாகும். சோழமன்னர்களுள் மிகச் சிறப்பு வாய்ந்தவர்கள் முதல் இராஜராஜனும், பூர்வதேசமும் கங்கையும் கடாரமும் கொண்ட முதல் இராஜேந்திரனும் ஆவர். இம்மன்னர் இருவரையும் மாசிடோனியா மன்னன் பிலிப்புடனும், அவன் ஒப்பற்ற புதல்வன் மாவீரன் அலெக்சாண்டருடனும் ஒப்பிட்டுக் கூறுவர். இவர்களை அடுத்து ஆட்சிபுரிந்த முதல் இராஜாதி ராஜனும் மிக மேம்பட்ட மன்னனே. இங்ஙனம் தொடர்ந்து மூன்று தலைமுறை பண்பட்ட பெருவீரர்கள் தோன்றுவதற்குச் சோழர் பரம்பரை பெரிதும் நோற்றது. இம்மன்னர் மூவரும் பன்னாடுகளையும் வென்று தம் வீரச்செயல்களை வெளிப்படுத்தினர். மன்னுயிர்களைத் தம்முயிர்களாகக் கருதி அறநெறி தவறாது செங்கோல் செலுத்தி மக்களுடைய உள்ளத்தில் நிலையான இடத்தைப் பெற்றனர். கல்வியும், கலையும், கலாசாரமும் இவர்கள் ஆட்சியில் சிறந்து விளங்கின. திராவிடக் கலை தலைசிறந்து விளங்கிய இக்காலத்தில் சித்திரம், சிற்பம், உலோகத் திருமேனிகள் முதலியன முழு நிறைவு பெற்றன. தென்னகத்தின் பொற்காலமான இக்காலத்தில் சோழவம்சத்தின் புகழும் பெருமையும் குன்றின் மேலிட்ட விளக்காயின.

இச் சோழமன்னர்கள் எடுப்பித்த கோயில்களில் மிகவும் சிறப்பு வாய்ந்தவை முதல் இராஜராஜன் தஞ்சையில் அமைத்த இராஜ ராஜேசுவரமும் அவன் மகன் கங்கை

கொண்ட முதல் இராஜேந்திரன் தான் புதிதாக நிர்மாணித்த கோநகரான கங்கைகொண்ட சோழபுரத்தில் எடுப்பித்த கங்கை கொண்ட சோளீசுவரமுமாம். இவ்விருகோயில்களும் பெரும்பாலும் ஒரேவிதமான அமைப்புடையவை. இனி, இவ்விரு கோயில்களைத் தவிர இவ்விடைக் காலத்தில் எடுப்பிக்கப் பட்ட ஏனைய கோயில்களையும் நோக்குவோம்.

## முதல் இராஜராஜன் (கி. பி. 985—1014)

நாற்றிசைகளிலும் தான் கொண்ட பெருவெற்றிகளால் இராஜராஜன் தன் நாட்டு எல்லையைத் தெற்கே ஈழத்தில் இருந்து வடக்கே ரெய்ச்சூர், வேங்கி, கலிங்கம் என்ற பகுதிகள் வரையில் விரிவடையச் செய்தான். அவன் ஆட்சியில் (ஆந்திர நாட்டிலுள்ள) மகேந்திரமலையில் வெற்றித் தூண் ஒன்று அவன் மகன் இராஜேந்திரனால் நாட்டப்பட்டது. சேரருடைய கப்பற்படையைக் காந்தளூர்ச் சாலையில் வென்றதோடு அண்மையில் அரபிக்கடலில் உள்ள தீவுகளையும் இவன் வென்ற செய்தி சோழரின் கடலாதிக்கத்தையும் வெளிப்படுத்துகிறது. தந்தையை ஒத்த மகனான முதல் இராஜேந்திரன் தன் கப்பற்படை வன்மையை மிகுத்துச் சைலேந்திரவம்ச மன்னருடைய நாட்டின்மீது படையெடுத்துக் கடாரமுள்ளிட்ட பல நாடுகளை வென்றமை குறித்துணரத் தக்கது.

ஈழநாட்டை வென்ற இராஜராஜன் அதன் தலைநகரான **'பொலன்னருவா'**வில் சிவபெருமானுக்கு இருதளக் கற்றளியொன்று எடுப்பித்தான். எண்கோணச் சிகரத்தையும் ஒரு கிரீவத்தையும் கொண்டு விளங்கும் அக்கற்றளியின் முன்புறத்தில் அர்த்தமண்டபம் உள்ளது. தான் வென்ற நாடுகளில் சோழர் பாணியில் திராவிடக் கோயில்களை நிறுவுவதில் இராஜராஜன் காட்டிய பேருக்கத்தை வெளிப்படுத்தும் நினைவுச்சின்னமாக அஃது இலங்குகிறது.

அழகாதிரிப்புத்தூரில் காணப்படும் கோயிலின் மூலத்தானம் இராஜராஜனின் ஏழாவது ஆண்டு கற்றளியாக நிறுவப்பட்டது. அதே ஆண்டில் தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த திருவாரூரில் உள்ள திருவரநெறியாழ்வாருக்கு உத்தம சோழனின் தாயாரான செம்பியன் மாதேவியாரால்

ஒரு கற்றளி எடுப்பிக்கப்பட்டது. இராஜராஜன் ஆட்சி ஒன்பதாம் ஆண்டில் சித்தூர் மாவட்டத்தைச் சேர்ந்த லட்டிகம் என்று தற்போது வழங்கப்பெறும் கோயட்டூர் என்ற பழம் பதியில் 'இருங்கோளீசுவரம்' என்ற கற்கோயில் எடுப்பிக்கப்பட்டது. சிறிய கோபுரவாசல், மூன்றடுக்குகள் கொண்ட சாதாரண கோபுரம், கிரீவம், சிகரம், ஸ்தூபி இவற்றைப் பெற்று விளங்கும் இருங்கோளீசுவரம் தற்போது நீலகண்டேசுவரம் என்று வழங்கப்படுகிறது.

சித்தூர் மாவட்டத்து வீரநாராயணபுரம் என்ற மேல்பாடி யில் (மேற்பாடி) முதற் பராந்தகன் காலத்துக்கு முற்பட்டே செங்கற் கோயில் ஒன்று இருந்தது. இம் மேற்பாடியாகிய இராஜாச்ரய புரத்தில் இராஜராஜனுடைய பதினுன்காம் ஆண்டு 258–ஆம் நாள் பழைய செங்கற் கோயில் கற்றளி யாக்கப்பட்டுச் 'சோளேந்திர சிம்மேசுவரம்' என்ற பெயரால் அழைக்கப்பட்டது.

இம் மேற்பாடியில் தான் இராஜ ராஜனுடைய பாட்டனுன அரிஞ்சயன் காலமானுன். இராஜராஜன் தன் ஆட்சி 29-ஆம் ஆண்டில் அரிஞ்சயனை அடக்கம் செய்த இடத்தில் பள்ளிப் படையாக அரிஞ்சிகை ஈசுவரம் அல்லது சோளீசுவரம் என்ற கோயிலை எடுப்பித்தான்.

சோளேந்திர சிம்மேசுவரமும் அரிஞ்சிகைச் சோளீசுவர மும் அடுத்தடுத்துக் காணப்படுகின்றன.

அரிஞ்சயன் 'ஆற்றூர்த்துஞ்சிய தேவன்' எனவும், முதல் ஆதித்தன் 'தொண்டைமான் ஆற்றூர்த் துஞ்சிய உடையார்' எனவும், வழங்கப்படும் வரலாற்றுச் செய்தி உளங்கொளத் தக்கது.

இராஜராஜனுடைய 16-ஆம் ஆண்டில் தென்னுர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த திருவக்கரை என்ற ஊரிலுள்ள சந்திர மௌளீசுவரம் என்று அக்காலத்து வழங்கப்பட்ட சிவலோகமுடைய பரமஸ்வாமிகோயில் செம்பியன் மாதேவி யாரால் கற்றளியாக்கப்பட்டது. அண்மைக் காலத்தில் இப் பழங்கோயில் புதுப்பிக்கப்பட்டுள்ளது,

கடார மன்னனுன ஸ்ரீமாற விஜயோத்துங்கவர்மன் தஞ்சை மாவட்டத்து நாகைப் பட்டினத்தில் தன் தந்தையான சூடாமணி

வர்மனின் பெயரால் ஒரு பௌத்த விகாரத்தை நிறுவுவதற்கு இராஜராஜனிடம் அனுமதிபெற்றுச் சூடாமணிவர்ம விகாரம் நிறுவிய செய்தியும் அதற்கு இராஜராஜன் ஆனைமங்கலம் என்ற ஊரைப் பள்ளிச் சந்தமாக வழங்கிய செய்தியும் இராஜ ராஜனுடைய 21-ஆம் ஆண்டைச் சேர்ந்த ஆனைமங்கலம் தான சாசனம் என்ற லீடன் சாசனத்தில் இருந்து அறியப்படு கின்றன. இந்த விகாரம் 19-ஆம் நூற்றாண்டுவரை பாழடைந்த நிலையில் இருந்ததாகவும், பின் கிருஸ்துவப் பாதிரிமார்கள் கட்டிய கல்லூரி ஒன்றிற்கு இதன் கற்கள் பயன்படுத்தப் பட்டனவாகவும் அறிகிறோம்.

செம்பியன் மாதேவியாரைப் போலவே, கோயில்கள் கட்டுவதிலும் அவற்றிற்குத் தாராளமாக நன் கொடைகள் வழங்குவதிலும் உளங்கனிந்து ஈடுபட்ட இராஜராஜனுடைய தமக்கையாரான குந்தவை ஆழ்வாரால், இராஜராஜனுடைய 21-ஆம் ஆண்டில் தென்னார்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த தாராபுரத்தில் குந்தவை விண்ணகரம், இரவிகுல மாணிக்க ஈசுவரம், குந்தவை சினாலயம் என்ற திருமால் கோயில், சிவன் கோயில், அருகன் கோயில் என்பன எடுப்பிக்கப்பட்டன. இவ்வம்மையாரின் சமயப் பொது நோக்கம் பலருக்கும் எடுத்துக் காட்டாகத் திகழ்வதொன்றாகும்.

ஏறக்குறைய இதே காலத்தில் நார்த்தாமலையிலுள்ள மேலைக்கடம்பூர் கோயில் கட்டப்பட்டது. தென்னார்க்காடு மாவட்டத்தில்உள்ள அமிர்த கடேசுவரருக்கு எடுப்பிக்கப்பட்ட மேலைக்கடம்பூர் கோயில் இதனின் வேறாகும். இந்நார்த்தா மலை மேலைக்கடம்பூர் கோயில் காஞ்சியிலுள்ள சொக்கேசுவரர் கோயிலைப் போன்றும் விராலூரிலுள்ள பூமீசுவரர் கோயிலைப் போன்றும் ஒருதளக் கற்றளியாக அமைந்துள்ளது. இதன் வடக்குப் பிராகாரச் சுவராக அமைந்த பாறையில் காணப் படுவது இராஜராஜனுடைய 22-ஆம் ஆண்டுக் கல்வெட்டா கும்.இக் கோயில் பூவின் மொக்குப் போன்ற ஸ்தூபியையும் வட்டவடிவமான சிகரத்தையும் உடையது.

இராஜராஜனுடைய 23-ஆம் ஆண்டில் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த ஆத்தூரில் 'இராஜராஜ விண்ணகர்' என்ற பள்ளிகொண்டருளிய தேவர் ஆலயம் கட்டப்பட்டதாக அறிகிறோம். அவ்வாலயத்தின் துர்க்கை, பகவதி, சப்தமாதர்,

க்ஷேத்திரபாலர், கணபதி, ஆகிய சிலேகளேத் திருப்பூவணம் உடையாரான சோமநாததேவர் அமைத்தார் என்ற செய்தி கல்வெட்டால் உணரப்படுகிறது.

இராஜராஜனுடைய ஆட்சி 21-ஆம் ஆண்டிலேயே அவன் பட்டத்தரசியாரான உலோகமாதேவியார் என்னும் தந்தி சக்தி விடங்கியாரால் திருவையாற்று ஐயாறப்பர் கோயிலின் வடக்கு வெளிப் பிராகாரத்தில் உலோகமாதேவீசுவரம் என்று வழங்கப்பட்ட வடகைலாயம் என்ற கோயில் எடுப்பிக்கப் பட்டது. இங்குள்ள பிர்மா, தட்சிணுமூர்த்தி முதலிய தேவகோஷ்ட உருவங்கள் மிக நேர்த்தியானவை. இவற்றைக் கண்ட அளவிலேயே முதல் இராஜராஜன் காலத்தவை என்று கூறிவிடலாம். இக்கோயில் கட்டப்பட்ட அவ்வாண்டிலேயே இதற்காக நிலங்கள் வாங்கப்பட்ட செய்தி இக் கோயில் கல் வெட்டொன்ருல் போதருகிறது. அது பின்வருமாறு:

"திருமகள் போல.........ஸ்ரீ கோவிராஜ கேசரிவர்மர் ஸ்ரீ இராஜராஜதேவர்க்கு யாண்டு இருபத்தொன்ருவது இராஜேந்-திரசிங்க வளநாட்டுப் பொய்கை நாட்டுத் தேவதானம் திருவையாற்று இனிதிருந்தருளின ஸ்ரீ ராஜராஜதேவர் நம் பிராட்டியார் தந்தி சக்தி விடங்கியாரான உலோக மகா தேவியார் திருவையாற்றில் எடுப்பித்தருளின உலோக மகா தேவீசுவரத்து மகாதேவர் கன்மிகளுக்கு விற்றுக்கொடுத்த நிலமாவது... இவ்விசைந்த பெருநான்கெல்லேயிலும் அகப் பட்ட நிலம் மூன்றே மாகாணி அரைக்காணி முந்திரிகைக் கீழ் முக்காலே மாகாணிக் கீழ் முக்காலே ஒரு மாவும்...இந் நிலம் விற்றுக் கொடுத்துக் கொள்வதான எம்மில் இசைந்த விலேப் பொருள் வேலி நூற்றுக்கழஞ்சு பொன்னுக இந் நிலத்தால் வந்த பொன் முந்நூற்று ஏழுகழஞ்சே ஒன்பது மஞ்சாடிப் பொன், முந்நூற்றேழு கழஞ்சே ஒன்பது மஞ்சாடிப் பொன்னும் அறக்கொண்டு விற்று விலே யாவணம் செய்து கொடுத்தோம்...உலோக மகாதேவீசுவரத்து மகாதேவர் தேவ கன்மிகளுக்குத்திருவையாறுடையார் தேவகன்மிகளோம்."

அதே ஆண்டில் உலோகமாதேவீசுவரம் உடையாருக்கு இரண்டு நொந்தா விளக்குகள் வழங்கப்பட்டன.

இம் மன்னனின் 24-ஆம் ஆண்டில் உலோகமாதேவீசுவர முடைய இம் மகாதேவருக்கும் உலோக விடங்கதேவர் உள்

ளிட்ட பல திருமேனிகளுக்கும் பல விலையுயர்ந்த அணிகலன் கள் வழங்கப்பட்டன.

இம் மன்னனின் 29-ம் ஆண்டில் சளுக்கிய வம்சத்து ஸ்ரீ விஷ்ணுவர்த்தன மகாராஜராகிய விமலாதித்த தேவர் எட்டு வெள்ளிக் கவசங்களை இக்கோயிலுக்கு அளித்த செய்தி உணரப்படுகிறது.

இக்கோயில் சுவர்கள் முதல் இராசேந்திரன், முதல் இரா சாதிராசன் முதலியோர் காலத்தில் செய்யப்பட்ட நிவந்தங் களைக் கூறுகின்றன.

இம்மன்னனுடைய 25-ஆம் ஆட்சியாண்டில் திருவலஞ்சு ழிக்கோயில் க்ஷேத்திர பாலருக்கு ஒரு சந்நிதி கட்டுவித்தான் என்று குறிப்பிடும் கல்வெட்டிலேயே உலோகமாதேவியும் அவள் பெண் குந்தவையும் மற்றொரு பெண்ணான மாதேவடி களும் அந்த க்ஷேத்திர பாலருக்குப் பல அணிகலன்கள் வழங் கிய செய்தியும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இராஜராஜன் தன் பட்டத்தரசி உலோகமாதேவியோடு ஹிரண்ய கர்ப்பம் செய்து கொண்ட பொழுது உதவிய தங் கத்திலிருந்து செய்யப்பட்ட பொற்பூக்கள் இரண்டை உலோக மாதேவியார் முதல் இராசேந்திரனுடைய மூன்றாம் ஆண்டில் அதே க்ஷேத்திர பாலருக்கு வழங்கினாராக அறிகிறோம்.

இராஜராஜன் தன் 28-ஆம் ஆண்டில் திருமழபாடியில் உள்ள பழைய வைத்திய நாதீசுவரத்தை இடித்துப் புதிதாகக் கற்றளி யாக்குமாறு ஆணை பிறப்பித்தான். ஆனால் அத் திருப்பணி இராசேந்திரன் காலத்தில்தான் முற்றுப்பெற்றது.

இராஜராஜன் தன் தலைநகரான தஞ்சையில் எடுப்பித்த இராஜராஜேசுவரமே அவன் காலத்துக் கோயில்கள் பலவற் றுள்ளும் தலையாயது. 'இட்டஜி' என்ற இடத்தில் கட்டப்பட்ட மகாதேவர் கோயிலைக் கன்னடக் கல்வெட்டொன்று தேவாலயச் சக்கரவர்த்தி என்று குறிப்பிடுகிறது. அப் பெயர் இராஜ ராஜேசுவரத்திற்கே முற்றும் பொருந்தும் எனலாம். இராஜ ராஜன் தன் வீரமும் கலையறிவும் கடவுட் பற்றும் என்றும் உலகு அறியும் வண்ணம் அமைத்த நினைவுச்சின்னமாக அப் பெருங் கோயில் காட்சியளிக்கிறது. முதல் ஆதித்தன் காலத் திலிருந்தே நடராசப் பெருமானிடத்தில் சோழப் பெரு மன்

னர்களும் அவர்களுடைய அரசியற் பெருந்தலைவர்களும் ஆழ்ந்த பக்திகொண்டனர். அம்மரபுப்படி இராஜராஜனும் அவனுடைய தேவிமார்களும் உறவினர்களும் அரசியல் பெருந்தலைவர்களும் இக்கோயிலுக்குப் பேரளவில் நிவந்தங்கள் வழங்கியுள்ளனர். இக் கோயில் திருப்பணி இராஜராஜனின் பத்தொன்பதாம் ஆண்டில் தொடங்கப் பட்டிருக்கலாம். இருபத்தைந்தாம் ஆண்டு ஸ்ரீவிமானத்தின் மீது பொன் மயமான ஸ்தூபி நிறுவப் பெற்றது. அடுத்த ஆண்டு இராஜராஜனும், அவன் தமக்கையும், தேவிமார்களும் கொடுத்த நிவந்தம் பற்றி செய்திகள் விமானச் சுவர்கள் மீது பொறிக்கப் பட்டன. இராஜராஜனுடைய 29-ஆம் ஆண்டாகிய கடைசியாண்டில் ஏராளமான செப்புத் திருமேனிகள் கோயிலுக்கு வழங்கப் பட்டன.

செக்கர் வானத்தில் சீரிய தோற்றங் கொண்டு விளங்கும் இப்பெருங்கோயில் இத்தனைக் குறுகிய காலத்தில் இவ்வளவு உறுதியாக எடுக்கப்பட்ட செய்தி நம் கற்பனைக்கும் எட்டாத விந்தையாக விளங்குகிறது. போதுமான ஆழத்தில் அடித்தளம் அமைத்த அழகு, மேற்கட்டிடத்தின் பாரம் கீழே தாக்காதபடி பொறியியல் வல்லுநர் செய்த நுணுக்கமான வேலை, மிகப் பேரளவில் இக்கோயிலை எடுப்பித்தற்குரிய சீரிய கற்பனை, நயமும் எளிமையும் கொண்ட வேலைப்பாடுகளின்திறன். பல பாகங்களின் அழகான இணைப்பு, விமானத்தின் சீரான வனப்பு வாய்ந்த மேல் நோக்கிய நிமிர்ந்த சரிவு, பக்திப் பெருக்கூட்டும் பெருவுடையார் இருதளக் கருவறையில் வீற்றிருக்கும் தோற்றம், இவையாவற்றினும் மேம்பட்டுக் கற்றோர் கருத்தைக் கவரும் கல்வெட்டுக்களின் எழுத்தழகு — யாவும் இக்கோயிலை இந்தியச் சிற்பக்கலையின் இணையில்லா மாணிக்கமாகச் செய்துள்ளன. ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளாகப் பருவங்களாலும் தட்பவெப்பங்களாலும் தாக்கப்பட்டும் வனப்புக் குன்றாமல் வீற்றிருக்கும் இக் கோயில் கலைநுகர்வுடையார் உள்ளங்களில் நிலைத்த இடம் பெற்றுள்ளது என்பதில் வியப்பு ஒன்றும் இல்லை.

ஹைன்ரிக் ட்ஸிம்மர் என்பார் ‘இராஜராஜன் தன் பல வெற்றிகளைக் கொண்டாடுவதற்காகச் சிவனை முன்னிட்டுத் தஞ்சையில் இராஜராஜேசுவரம் எடுப்பித்தான். சோழருடைய

சிறந்த சிற்பங்களாக விளங்குபவை முற்கூறிய பெரிய கோயிலைத் தவிர இராஜராஜன் சிவ கங்கைக் குளத்துடன் அமைத்த பிரகதீசுவரர் கோயில், சீநிவாச நல்லூரிலுள்ள கொரங்கநாதர் கோயில், ஜம்புகேசுவரத்திலுள்ள சிறியகோபுரம், தஞ்சை சுப்பிரமணியர் கோயில் என்பன' என வெவ்வேறு காலச் சின்னங்களின் வெறுந்தொகுப்பாக அமைத்த இப் பட்டியலில் இராஜராஜேசுவரத்தையும் பிரகதீசுவரர் கோயிலையும் வெவ்வேறு கற்றளிகளாகக் குறித்துள்ளமை கவனக் குறைவாலேயே. இராஜராஜேசுவரமும் பிரகதீசுவரர் கோயில் எனப்படும் பெருவுடையார் கோயிலும் ஒன்றே என்பது வெளிப்படை.

## முதல் இராஜேந்திரன் (கி. பி. 1012—1044)

இராஜராஜன் தன் ஆட்சிக்காலத்திலேயே தன் மகன் இராஜேந்திரனைப் போர்ப் பயிற்சியிலும் ஆட்சிப் பொறுப்பிலும் நன்கு பழக்கித் தன் ஆட்சியின் இறுதிக்காலத்தில் அரசனாக்கினான். இராஜேந்திரனை அரசனாக்கிய பிறகு ஏறத்தாழ இரண்டாண்டுகள் இராஜராஜன் உயிர் வாழ்ந்திருக்கக் கூடும் எனத் தோன்றுகிறது. சுமார் 33 ஆண்டுகள் பேரரசு செலுத்திய இராஜேந்திரன் தன் ஆட்சிக் காலத்திலேயே தன் மூத்தமகனான இராஜாதிராஜனை இளவரசனாக்கி அவனுக்கு அரசியல் அலுவல்களில் பயிற்சி யளிக்கத் தொடங்கினான். இராஜாதிராஜன் தன் கல்வெட்டொன்றில் தன் தந்தை 'வடதிசை கங்கையும் தென்திசை இலங்கையும் குடதிசை மகோதையும் குணதிசை கடாரமும் மாப்பொருதண்டாற் கொண்ட' பெருமையைக் குறிப்பிட்டுள்ளான்.

இராஜேந்திரனுடைய கங்கை, கடார வெற்றிகள் முதன் முதல் அவன் 11-ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் குறிக்கப் பட்டுள்ளன. புஞ்சை என்னும் இடத்தில் உள்ள அவன் 14-ஆம் ஆண்டுக் கல்வெட்டிலேயே அவனுடைய முழு மெய்க்கீர்த்தியும் காணப்படுகிறது. பகீரதன் கடுந்தவத்தால் கங்கையை ஆகாயத்தில் இருந்து பூமிக்குக் கொணர்ந்தான். ஆனால் இராஜேந்திரனோ தன் படைப்பலத்தால் கங்கையைச் சோழ நாட்டிற்குக் கொணர்ந்து அதனைப் புனிதமாக்கினான் என்று அவனுடைய திருவாலங்காட்டுச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன.

தன் கங்கை வெற்றியின் நினைவுச் சின்னமாக இராஜேந்திரன் கங்காபுரி என்ற கங்கை கொண்ட சோழபுரத்தை நிர்மாணித்து அங்கு கங்கை கொண்ட சோளீசுவரம் என்ற கோயிலை எடுப்பித்து அங்கு நீர்ப்பாசனத்துக்குச் சோழகங்கம் என்ற ஏரியை 'ஜலமயமான ஜயஸ்தம்பமாக' நாட்டினான். கங்கை கொண்ட சோழபுரம் சோழர்களுடைய புதுத்தலைநகரம் ஆயிற்று. அங்கு அரசனுடைய அரண்மனை முடிகொண்ட சோழன் திருமாளிகை என்ற பெயரால் எடுப்பிக்கப் பட்டது. முதல் இராஜேந்திரனுடைய கொடைத் தன்மையும் அரண்மனையும்,

*வண்புயலைக் கீழ்ப்படுத்து வானத் தருமலைந்து*
*மண்குளிரும் சாயல் வளர்க்குமாம்—தண்கவிகைக்*
*கொங்கார் அலங்கல் குலதீபன் எங்கோன்*
*கங்காபுர மாளிகை*

எனச் சிலேடையாகப் பாராட்டப்பட்டுள்ளன.

இராஜேந்திரனுடைய 17-ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றில் இப்புதிய தலைநகரின் பெயரும் அரண்மனையும் குறிக்கப் பெற்றிருக்கின்றன. கங்கை கொண்ட சோளீசுவரமும் இக்காலத்திற்குள் கட்டி முடிக்கப்பட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. இக் கங்கை வெற்றியை ஒரு மகத்தான சாதனையாகக் கொண்ட மன்னன் 'கங்கை கொண்டான்' என்று பொறிக்கப்பட்ட பொற்காசுகளை வெளியிட்டான்.

கங்கை கொண்ட சோழபுரத்தில் எடுக்கப்பட்ட தஞ்சை இராஜராஜேசுவரத்தின் அச்சு என்று கூறத்தக்க கங்கை கொண்ட சோளீசுவரத்தைத் தவிர இம்மன்னன் ஆட்சியில் அவன் பரந்த சோழப் பெருநாட்டில் வேறு பல கோயில்களும் எடுப்பிக்கப்பட்டன. வைதும்பர் தலைவன் ஒருவன் வட ஆர்க்காடு மாவட்டத்தில் திருவல்லம் என்ற ஊரில் வில்வவனேசுவரர் கோயிலின் தென்புறத்தில் திருவையா ஈசுவரம் கட்டுவித்தான். ஆனால் இப்பொழுது அதன் அடிச்சுவடுகூடக் காணப்படவில்லை.

இராஜேந்திரனின் 4-ஆவது ஆண்டில் செங்கற்பட்டு மாவட்டத்துக் காவந்தண்டளம் என்ற இடத்தில் இராஜேந்திர சோளீசுவரம் என்ற கோயிலை அரசனுடைய அதிகாரி ஒருவன் கட்டினதை அறிகிறோம்.

இராஜேந்திரனின் 7-ஆவது ஆண்டில் வட ஆர்க்காடு மாவட்டத்துச் செங்குன்றத்தில் முதல் இராஜராஜன் நினைவுச் சின்னமாக ஜயங்கொண்ட சோளீசுவரம் கட்டப்பட்டது.

கும்பகோணத்துக்கு அருகில் பழைய சோழர் தலைநகரங்களில் ஒன்றும் அக்காலத்தில் முடிகொண்ட சோழபுரம் எனவும் வழங்கப்பட்டதுமான பழையாறை என்ற ஊருக்கு அண்மையில் இராமநாதன் கோயில் உள்ளது. இங்கு இராஜேந்திரனின் பட்டத்தரசியான பஞ்சவன் மாதேவியின் பெயரால் பஞ்சவன் மாதேவீசுவரம் என்ற பள்ளிப் படைக் கோயில் கட்டப்பட்டது. அதன் வழிபாட்டுக்காக இராஜேந்திரனின் 7-ஆம் ஆண்டில் நிவந்தங்கள் விடப்பட்ட செய்திகளைக் குறிப்பிடும் கல்வெட்டிலிருந்து இராஜேந்திரனுடைய பிறந்த நாள் திருவாதிரை எனவும் பஞ்சவன் மாதேவியின் பிறந்த நாள் ரேவதி எனவும் அக்கோயில் அலுவல்களை லகுலீசுவர பண்டிதர் என்பார் கவனித்து வந்தார் எனவும் அறிகிறோம்.

இராஜேந்திரனின் 9-ஆம் ஆண்டாகிய சகரயாண்டு 943-இல் (கி. பி. 1021) மைசூர் நாட்டுப் பேலத்துருவில் இருந்த பழங் கோயிலொன்று புதுப்பிக்கப்பட்ட செய்தி புலனாகிறது.

காஞ்சிபுரத்திலிருந்து வந்தவாசிக்குச் செல்லும் பெருவழியில் மாமண்டூர் உள்ளது. அதற்கு ஐந்து கல் கிழக்கே கூழம்பந்தல் என்ற சிற்றூர் உள்ளது. அவ்வூரில், வந்தவாசிப் பெருவழியிலிருந்து உக்கல் என்ற ஊருக்குச் செல்லும் பாதை பிரியும் சந்திப்பில் இராஜேந்திரனுடைய 22-ஆவது ஆண்டுக்கு முன் ஈசான சிவபண்டிதர் என்ற சிவாசாரியாரால் எடுப்பிக்கப்பட்ட கங்கை கொண்ட சோளீசுவரம் என்ற கோயில் விளங்குகிறது. இதற்கு முதல் இராஜாதிராஜனுடைய 33-ஆவது ஆண்டில் சில நிவந்தங்கள் விடப்பட்டுள்ளன. தற்போது பாழடைந்து கவனிப்பார் அற்றுக் கிடக்கும் இக்கோயிலை அதன் பழம் பெருமையை யாவரும் உணரும் வகையில் புதுப்பிக்க வேண்டியது இன்றியமையாததாகும்.

மைசூர் நாட்டுக் கோலாரில் உள்ள கோலாரம்மா கோயில் என்ற பிடாரி கோயில் இராஜேந்திரனுடைய 20-ஆம் ஆண்டில் புதுப்பிக்கப்பட்டது. இம் மன்னனுடைய தளபதி இக்

கோயிலில் விளக்கு எரிப்பதற்காகப் பல எருமைகளை வழங்கினான்.

இராஜேந்திரனுடைய 24-ஆவது ஆண்டில் திருநெல்வேலி மாவட்டத்து மன்னார் கோயிலில் சோழ சிற்றரசனான இராஜ சிம்மனால் இராஜேந்திர சோழ விண்ணகர் என்று வழங்கப் பட்ட விஷ்ணு கோயில் எடுப்பிக்கப்பட்டது. தற்போது இது கோபாலசுவாமி கோயில் என வழங்கப்படுகிறது.

தென் ஆர்க்காடு மாவட்டத்துத் தனியூர் இராசராச சதுர் வேதிமங்கலம் என்று வழங்கப்பட்ட எண்ணாயிரம் என்ற ஊர் இராஜேந்திரனுடைய அத்தையார் ஆன குந்தவை ஆழ்வாரின் கொடைச் சிறப்பால் மேம்பட்டு விளங்கியது. அவ்வம்மையார் இவ்வூரில் தம் தந்தையாரின் நினைவுக்குறியாகச் சுந்தர சோழ ஆழ்வார் கோயிலையும், சகோதரர் நினைவாக இராஜராஜ விண்ணகர் ஆழ்வார் கோயிலையும் எடுப்பித்தாராக அறி கிறோம். இங்குள்ள கல்வெட்டொன்றில் இக் கோயில்களில் அமைந்த தேவேந்திரன், சரசுவதி, பட்டாரிக்கியர், மகாமோடியர், துர்க்கை, சூரியதேவன். சப்த மாதர்கள், மகாசாஸ்தா, சுப்பிரமணியர், ஜேஷ்டை முதலிய தெய்வங்களின் வழிபாட்டிற்காக விடப்பட்ட நிவந்தங்களின் விவரங்கள் காணப்படுகின்றன. இவ்வூரில்தான் இராஜேந்திரன் ஒரு பெரிய வேதாந்தக் கல்லூரியை நிறுவினான்.

பல்லவர் காலந்தொட்டே மேம்பட்டு வரும் திருவொற்றியூரிலுள்ள ஆதிபுரீசுவரர் கோயிலில் மூன்றாம் நந்திவர்மன், அபராசிதன், முதல் பராந்தகன் முதலிய மன்னர்களின் கல்வெட்டுக்களைக் காணலாம். இப்பழங் கல்வெட்டுக்கள் கருவறையின் சுவர்களில் காணப்படாமல், தூண்களிலும், ஆங்காங்கே பிராகாரதளத்தில் சிதறிக் கிடக்கும் கற்பரப்புகளிலும் காணப்படுகின்றன.

இப்பழைய கோயில் முதலாம் இராஜேந்திரன் காலத்தில் சதுரானன பண்டிதரின் வேண்டுகோளுக்கு இணங்கி அரசனுடைய ஆணையால் 'ரவி' என்ற நேர வீர சோழ தச்சனால் முத்தள விமானமுடையதாகக் கருங் கல்லால் புதுப்பிக்கப்பட்ட செய்தி இங்குள்ள கல்வெட்டொன்றிலுள்ள வடமொழி சுலோகத்தால் உணரப்படுகிறது. முதல் இராஜேந்திரன் காலத்த

தாகிய இவ்வொற்றியூர்க் கோயில் இன்றும் நன்னிலையிலிருப் பது மனங்கொண்டு மகிழத்தக்க செய்தியாகும்.

இக்கோயிலில் கைதேர்ந்த சிற்பி ஒருவனின் நுணுக்க மான கைத்திறத்தால் உருவாக்கப்பட்ட பைரவர், தட்சிணு மூர்த்தி, சண்டேசுவரர் ஆகிய சிலைகள் கண்கவர் வனப்பின வாகக் காட்சியளிக்கின்றன.

திருவையாறு ஐயாறப்பர் கோயிலின் தெற்கு வெளிப் பிராகாரத்தில் **தென் கைலாயக் கோயில்** உள்ளது. இக்கோயில் அப்பர் சுவாமிகளின் வாழ்க்கையுடன் இணைந்துள்ளது.

அப்பர் சுவாமிகள் ஆகிய நாவுக்கரசர் தொண்டை நாட்டுத் தலங்கள் பலவற்றையும் கண்களாரக் கண்டு காளத்தி மலையை அடைந்தார். அங்கு இறைவனை வழிபட்ட அப்பர் கயிலை யங்கிரி எய்தி அங்கு இறைவியோடு வீற்றிருக்கும் இறைவன் திருக்கோலத்தைக் காணும் விருப்புக் கொண்டார். மலையும் காடும் நாடும் கடந்து இமயத்தை அடைந்தார். பின் இமயமலை ஏறத் தொடங்கினர். உணவு உறக்கம் என்பனவற்றை நீத்து இரவு பகலாக ஏறினர். கால்கள் தேய்ந்துவிடவே கைகளால் உந்தினர். கைகளும் தேய்ந்து விடவே மார்பினல் ஊர்ந்தார். மார்பு எலும்புகளும் வெளிப்படவே புரண்டு புரண்டு சென்ருர். பின் செயலற்றுக் கிடந்தார். அவருடைய சிந்தை கயிலையை அடைந்ததே ஒழிய உடல் செயலற்றுக் கிடந்தது. அவர் மனநிலையை உலகறிய வெளியிட இறைவன் ஒரு பொய்கை யைப் படைத்து அவர் அருகில் வேதியர் வடிவில் காட்சியளித் தார். அவரிடம் கயிலை மலையை அடைவது மனிதரால் இயலாத செயல் என்று விளக்கவும் அவர் 'ஆளுநாயகன் கயிலையின் இருக்கை கண்டல்லால், மாளும் இவ்வுடல் கொடு மீளேன்' என்று உறுதியாகக் கூறவே, வேதியர் மறைந்து விட்டார். 'ஓங்கு நாவினுக்கரசனே ! எழுந்திரு' என்று அசரீரியாகக் கூறவே அப்பர் உடலில் ஏற்பட்ட ஊறுகள் நீங்கி எழுந்தார். பின் இறைவனைக் காண்பது தம் முயற்சியால் ஆவதன்று, அவனருளாலேதான் நிகழும் என்ற மெய்ஞானம் வரப்பெற்ற வராய்,

*'அண்ணலே ! என்னை ஆண்டு கொண்டருளிய அமுதே !*
*விண்ணிலே மறைந்து அருள்புரி வேதநாயகனே*

கண்ணினால் திருக்கயிலையி லிருந்த நின்கோலம்
நண்ணி நான் தொழ நயந்து அருள்புரி'

எனப் பணிந்தார்.

சிவபெருமான் அசரீரியாக மீண்டும் 'இப்பொய்கை முழுகி நம்மை நீ கயிலையில் இருந்த அம் முறைமை பழுதில் சீர்த்திருவையாற்றில் காண்' என்று குறிப்பிடவே, அப்பர் தொழுது எழுந்து,

'வேற்று மாகி விண்ணாகி நின்றார் மொழி விரும்பி
ஆற்றல் மிக்க அவ்வண்ணலார் அஞ்செழுத் தோதிப்
பாற்றடம்புனல் பொய்கையில் மூழ்கினார் பணியால்.'

கயிலையிலிருந்த பொய்கையில் மூழ்கிய அப்பர் மாதொரு பாகனார் மகிழும் ஐயாற்றிலோர் வாவிமீது தோன்றி வந் தெழுந்தார். திருவையாற்றில் நிற்பனவும், சஞ்சரிப்பனவு மான பொருள்கள் யாவும் நாவுக்கரசருக்குத் தத்தம் துணை களோடு காட்சியளித்தன.

'யாதும் சுவடு படாமல் ஐயாறடைகின்ற போது
காதல் மடப்பிடியோடும் களிறுவருவன கண்டேன்
கண்டேன் அவர்திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்'

அந்நிலையில் திருவீதிகளை வலம் வந்து திருக்கோயிலை யடைந்த நாவுக்கரசராம் அப்பருக்குச் சிவபெருமான்,

'வெள்ளி வெற்பின்மேல் மரகதக் கொடியுடன் விளங்கும் தெள்ளுபேரொளிப் பவள வெற்பெனக்' காட்சி யளித் தார்.

நாவுக்கரசருக்குக் காட்சி கொடுத்த பெருமானார் தென் கயிலாயத் திருக்கோயிலில் வீற்றிருப்பார் ஆயினார். இத் தென் கயிலாயத் திருக்கோயில் நாவுக்கரசர் காலமான ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்தது. இக்கோயில் முதல் இராஜேந்திரன் காலத்தில் மீண்டும் கற்றளியாக மிகச் சிறந்த முறையில் நிறுவப்பட்டது. இராஜேந்திரன் ஹேமாவதியிலிருந்து வெற் றிச் சின்னமாகக் கொணர்ந்த 44 நுளம்பத் தூண்களையும் அமைத்துக் கருவறையைச் சுற்றியமைந்துள்ள திருச்சுற்றுலை மண்டபத்தை எடுப்பித்துள்ளான். இக்கோயிலில் உள்ள சுப்பிரமணியர், துர்க்கை, பிர்மா முதலிய சிலைகள் மிக

நேர்த்தியாக அமைந்து இராஜேந்திரன் காலச் சிற்பங்களுக்கு ஒப்பற்ற எடுத்துக் காட்டுகளாக உள்ளன. இராஜேந்திரனுடைய செப்பேடுகளில் காணப்படுவதைப் போல இராஜேந்திரனுடைய விருதுகள் கிழக்கு மதிற் சுவரிலுள்ளதொரு கல்வெட்டில் கீழ்க்கண்டவாறு காணப்படுகின்றன.

"ஸ்வஸ்தி ஸ்ரீ ராஜத் ராஜன்ய மகுடசிரேணி
ரத்னேஷு சாசனம்
ஏதத் ராஜேந்த்ர சோளஸ்ய பரகேசரி வர்மண :"

செங்கற்பட்டு மாவட்டத்து அகரம் என்ற ஊரிலுள்ள ஆட்சியாண்டு இல்லாத கல்வெட்டு ஒன்று இராஜேந்திரன் ஆட்சிக் காலத்தில் அங்குக் கைலாசநாதர் கோயில் கட்டப்பட்ட செய்தியைத் தெரிவிக்கிறது.

## முதல் இராஜாதிராஜன் (கி. பி. 1018-54)

இராஜாதிராஜன் ஆட்சியில் 32-ஆம் ஆண்டில் செங்கற்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த கூவம் என்ற ஊரில் திரிபுராந்தகேசுவரம் என்ற ஆலயம் எடுப்பிக்கப்பட்டதாகக் கொள்ளலாம்.

## இரண்டாம் இராஜேந்திரன் (கி. பி. 1052-64)

தென் ஆர்க்காடு மாவட்டத்தைச்சார்ந்த திருக்கோவலூரிலுள்ள உலகளந்த பெருமாள் கோயில் என்ற விண்ணகரம் இரண்டாம் இராஜேந்திரனுடைய ஆறும் ஆண்டில் மிலாடுடைய பர்மர் என்பவரால் கறுப்புக் கருங்கல்லால் புதுப்பித்துக் கட்டப்பட்டது.

## அதிராஜேந்திரன் (கி. பி. 1068-1070)

தென் ஆர்க்காடு மாவட்டத்துத் திருவக்கரையில் உள்ள சந்திர மௌலீசுவரர் ஆலயத்தில் அமைந்திருக்கும் வரதராசப் பெருமானின் விமானம் சங்ககால மன்னனான கோச்சோழனால் செங்கல்லால் எடுப்பிக்கப்பட்டது. அஃது அதிராஜேந்திரனுடைய இரண்டாம் ஆண்டு கருங்கல்லால் புதுப்பிக்கப்பட்டது.

இவ்விடைக் காலச் சோழர் சிற்பங்களை நன்கு ஆராய்ந்து தெளிய வேண்டுவோர் அவற்றை நேரில் கண்டு அறிய வேண்டியது அவசியமாகும்.

## அத்தியாயம்- 12

# பிற்பட்ட சோழர் காலம் (கி. பி. 1070-1270)

## (முதல் குலோத்துங்கன் முதல் மூன்றும் இராசேந்திரன்வரை)

சோழர் ஆட்சியின் முற்பகுதியில் முதல் ஆதித்தனும் முதற் பராந்தகனும் இடைப் பகுதியில் முதல் இராசராசனும் முதல் இராசேந்திரனும் தெய்வமணங் கமழும் திருப்பணிகள் செய்து கலைக்கு அரிய தொண்டு செய்தனர் என்பதை நோக்கினோம். அங்ஙனமே பிற்பகுதியில் முதல் குலோத்துங்கன், விக்கிரமன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம்இராசராசன், மூன்றும் குலோத்துங்கன் என்பவர்கள் தெய்வத் திருப்பணிக் கண் அருந்தொண்டு செய்து பெரும் புகழ் பெற்றுள்ளனர்.

முதல் குலோத்துங்கன் பிற்பட்ட சோழர்களில் தலை சிறந்த வீரன். இவனுக்கு இராசேந்திரன், விருதராச பயங்கரன், அகளங்கன். அபயன், ஜயதரன். திருநீற்றுச் சோழன், சுங்கந் தவிர்த்த சோழன் முதலிய பல விருதுகள் உண்டு, இவன் தன் தாய்வழியில் கங்கை கொண்ட சோழனுடைய பெயரன் ஆவான். தந்தை வழியில் கீழைச் சளுக்கியன்; எனவே இவன் கீழைச் சளுக்கியநாடான வேங்கி நாட்டையும் சோழ நாட்டையும் ஒரு குடைக்கீழ்க் கொணர்ந்த சளுக்கியச் சோழனுவான்,

'சுங்கந் தவிர்த்து இருள் நீக்கி உலகாண்டவன்' எனவும் 'ஒரிரண்டு திருக்குலமும் நிலைபெறவந்து ஒரு குடைக்கீழ்க் கடலும் திக்கும் ஈரிரண்டு படைத்துடைய இரவி குலோத்தமன் அபயன்' என சயங்கொண்டாரால் கலிங்கத்துப் பரணியிலும் இவன் புகழப்பட்டுள்ளான்.

இவன் கோட்டாறு, விழிஞம், சாலை என்ற ஊர்களை வென்று சேரபாண்டிய நாடுகளை அடிப்படுத்தினான். இப் பகுதியில் அமைதிகுலையாமல் காக்கப் படைவீடு ஒன்றைக் கோட்டாறில் நிறுவினான். இலங்கையை வென்ற இம் மன்னன் தன் மகளான சுத்தமல்லி என்பாளை இலங்கை இளவரசனுக்கு மணம் செய்வித்தான். இவனால் வெல்லப்பட்ட இலங்கை விரைவிலேயே சுதந்திரம் அடைந்து தனியரசாயிற்று.

உலகில் கலியாகிய இருள் நீங்க உதித்த உதய சூரியன் போல் விளங்கிய இவ்வேந்தன் கருணாகரத் தொண்டைமான் என்ற படைத்தலைவனை அனுப்பிக் கலிங்க நாட்டை வென்றான் கருணாகரத் தொண்டைமானின் கலிங்க வெற்றியைச் சயங்கொண்டார் கலிங்கத்துப் பரணியில் ஒன்பான் சுவையும் ஒருங்கு அமையச் சொல்லோவியமாகத் தீட்டியுள்ளார்.

இவன் உருவத்தில் தன் தாய்ப் பாட்டனான முதல் இராசேந்திரனை ஒத்திருந்த காரணத்தாலேயே இராசேந்திரன் எனப் பெயரிடப்பட்டான். தன் தாய்ப் பாட்டனைப் போலப் பெரு வீரனான இவனும் கடாரத்தை வென்றவனாகக் குறிப்பிடப்படுகிறான். ஆனால் குலோத்துங்கனும் அவன் காலத்தில் கடாரத்தை ஆண்ட மன்னனும் நண்பர்களாயிருந்த செய்தி ஆனைமங்கலம் சிறிய செப்பேடுகளான லீடன் பட்டயங்களால் அறியப்படுகின்றது.

குலோத்துங்கன் தன் 28-ஆம் ஆண்டில் ஆயிரத்தளியில் காலிங்கராயன் என்னும் பள்ளிப் பீடத்தில் வீற்றிருந்த காலையில் கடார மன்னனுடைய தூதர்களான இராசவித்தியாதர ஸ்ரீசாமந்தரும் அபிமான துங்க ஸ்ரீசாமந்தரும் சோழ மன்னனை அடிபணிந்து, கடாரத்தரசன் சோழகுல வல்லி பட்டினத்தில் (நாகப்பட்டினம்) எடுப்பித்திருந்த இரு பள்ளிகளுக்கும் பள்ளிச் சந்தமாகக் கொடுத்திருந்த கிராமங்களின் வரியைத் தவிர்த்துக் கொடுக்கும்படிக் கேட்டதற்குக் குலோத்துங்கன் இசைந்த செய்தியை இச் செப்பேடுகள் தெரிவிக்கின்றன.

இம்மன்னனுடைய ஆட்சிக்காலத்தியதான தமிழ்க் கல்வெட்டொன்று சுமாத்திரா தீவில் உள்ள லோபாதீவா என்ற ஊரில் கிடைத்துள்ளது. இக்கல்வெட்டின் காலம் சகரயாண்டு 1010 (கி. பி. 1088). இக்கல்வெட்டில் கடல் கடந்து வியாபாரம்

செய்த திசை ஆயிரத்து ஐநூற்றுவர் என்ற தமிழக வியாபாரக் குழுவினர் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

கெமர் மொழி பேசும் காம்போஜ நாட்டு (கம்போடியா-இந்து சீனு) மன்னன் குலோத்துங்க மன்னனின் உறவை நாடி விலே உயர்ந்த கல் ஒன்றைக் காட்சியாகக் கொடுத்தான் என்றும் இப்பரிசுக் கல்லைக் குலோத்துங்கன் தில்லையில் எதிரம்பலம் என்று வழங்கப்பெற்ற திருமூலத்தானத்தார் கோயில் திருவாயில் மேல் சரத்தில் அமைத்தான் என்றும் தில்லைக் கல்வெட்டொன்று கூறுகிறது. தில்லை நடராசர் கோயிலின் முதல் திருச்சுற்று மாளிகையின் வட சுவரில் பொறிக்கப்பட்டுள்ள இக்கல்வெட்டில் குலோத்துங்கனுடைய மூன்று பெயர்கள் காணப்படுகின்றன. அவையாவன குலோத்துங்கன், இராசேந்திரன், ஜயதரன் என்பவை. மேலும் இக் கல்வெட்டு இம் மன்னனுடைய 44-ஆம் ஆண்டில் இவனுடைய திருத்தங்கையார் ஆனகுந்தவை ஆழ்வார் தில்லை நாயகர் தம் கோயிலெல்லாம் செம்பொன் வேய்ந்தார் என்ற செய்தியையும் அவர் செய்த ஏனைய அறம் ஒன்று பற்றிய செய்தியையும் வெளியிடுகிறது. இவற்றை நோக்குவோம்;

ஸ்ரீராஜேந்திர சோழ தேவர்க்குக் காம்போஜ ராஜன் காட்சியாகக் காட்டின கல்லு-இது உடையார் இராசேந்திரசோழ தேவர் திருவாய் மொழிந்தருளி. உடையார் திருச் சிற்றம்பல முடையோர் கோயிலின் முன் வைத்தது. இந்தக் கல்லு திருவெதிரம்பலத்தில் திருக்கல் சரத்தில் திருமுன்பத்திக்கு மேலைப் பத்தியில் வைத்தது.

(இது கல்வெட்டின் பிற்பகுதி, இனி முற்பகுதி வருமாறு) ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர் திருத்தங்கையார் இராசராசன் குந்தவை ஆழ்வார் ஆளுடையாருக்குத் தண்ணீர் அமுது செய்தருள இட்ட மிண்டம் ஒன்றினுல் குடி நற்கல் நிறை மதுராந்தகன் மாடையோடு ஒக்கும் பொன் 50 (ஐம்பதின் கழஞ்சு). நானிலத்தை முழுதாண்ட ஜயதரற்கு நாற்பத்து நாலா மாண்டில் மீன நிகழ் ஞாயிற்று வெள்ளிபெற்ற உரோகணி நாள்இடபப்போதால் தேனிலவு பொழிற்றில்லை நாயகர்தம் கோயிலெல்லாஞ் செம்பொன் வேய்ந்தாள் ஏனவரும் தொழுதேத்தும் இராஜராஜன்

குந்தவை பூவிந்தை யாளே. தில்லைநாயக தேவர்க்குத் திருக் கண்ணுடியும் இட்டார்.

(119—1888—பெருந்தொகை எண் 802)

குலோத்துங்கன் காலத்தில் சோழ மன்னர்களின் தலை நகரம் கங்கை கொண்ட சோழ புரமேயாகும். எனினும், தில்லை யிலும் சோழ மன்னருடைய மாளிகை ஒன்று இருந்த செய்தி காஞ்சிபுரக் கல்வெட்டு ஒன்ருல் அறியப்படுகிறது. இம் மாளிகை யிருந்த இடம் சிதம்பரம் புகை வண்டி நிலையத் துக்குக் கிழக்கே உள்ள கொற்றவன் குடி (கொத்தங்குடி) என்று தற்போது வழங்கப்படும் இடமாகலாம் என்று தோன்றுகிறது.

## குலோத்துங்கனுடைய தில்லைத் திருப்பணித் தொடக்கம்

தில்லைச் சபாநாயகரின் கீழைக் கோபுரத்தில் இரண்டு பாக்கள் கொண்ட கல்வெட்டு ஒன்று உள்ளது. இக்கல் வெட்டின் லிபி (எழுத்து) 13 அல்லது 14-ஆம் நூற்ருண்டின தாகலாம். இப் பண்டைக் கல்வெட்டு பிற்காலத்தில் கீழைக் கோபுர வாயிற் சுவரில் பெயர்த்து எழுதப்பட்டது போலும். இப் பாக்களைப் பாடிய கவிஞன் திருமூலத்தான முடையான் என வழங்கப்பட்டுள்ளான். இக்கல்வெட்டு குலோத்துங்கன் திருமாலின் அமிசமாகத் தோன்றினுன் எனவும், இவன் தில்லைநாயகரின் கோயிலை விரிவாக்கத் திருவுள்ளங்கொண்டு தன் மாதேவியான சோழகுலவல்லியுடன் சகரயாண்டு 18-இல் அடிப்படைக் கல்லை நாட்டினுன் எனவும் குறிப்பிடுகிறது. சகரயாண்டு 18 என்பது ஆயிரத்துப் பதினெட்டு என்ற பொருளில் வந்துள்ளது. சகரயாண்டு ஆயிரத்துப் பதினெட்டுக்குச் சரியான கிருஸ்து யாண்டு கி. பி. 1096. இதனை நோக்கக் குலோத்துங்கன் தன் ஆட்சியின் 26-ஆம் ஆண்டில் இத்தில் லைத் திருப்பணியைத் தொடங்கியிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. கல்வெட்டுப்பாடல்கள் (பெருந்தொகை எண் 1055,56) பின்வருமாறு.

ஓதும் சகரர் யாண்டு ஒருபத் தெட்டின்மேல்
ஆதிமூ லந்நாளில் ஆனிதனில் சோதி
துளங்கில மேற்சோழன் சோழகுல வல்லி
களங்கமற வைத்தாள் கரு.

[சகரர் யாண்டு 18-இல் ஆனி மாதம் மூலநட்சத்திரத்தில், ஒளி வீசும் பொன்னம்பலத்தை ஒட்டிய திருப்பணிகள் பல செய்வதற்குச் சோழன் குலோத்துங்கன் தன் மாதேவியான சோழகுல வல்லியுடன் களங்கமற்ற வகையில் அடிக்கல் நாட்டினுன் என்பது]

வண்ணந் திகழும் கொடி மாடம் மற்றும் சோழ குலவல்லி
நண்ணும் தலைமை உடையாரை நாமார் புகழ்ப் பாமாலை
எண்ணும் படியிற் புகழாள ரென்றே அன்றே என்னுடைய
கண்ணும் பழனக் கழுமலமும் கலந்தார் திருவை மலர்ந்தாரே.

[யான் அறிவதறியும் பருவம் எய்திய அன்றே என் அகக் கண்ணிடத்தும், புறக்கண்ணுல் காணுமாறு வயல் சூழ்ந்த சீர் காழிப் பதியிடத்தும் பொருந்தியிருப்பவராகிய திருமகள் கேள்வரே தம் அம்சாவதாரமாகச் சோழகுலவல்லியை மணந்து ஒளி திகழும் கொடிகள் கட்டப்பட்ட மாடத்தில் மக்களின் தலைவராக வீற்றிருக்கிருர். சான்ருேர்களைச் சிறப்பித்து எண்ணும் இவ்வுலகில் அவர் சிறந்த புகழாளர் என்று அவரைப் புகழ்ந்து பாமாலை சூட்டுவதற்கு நாம் என்ன தகுதி உடையோம்?]

இக் காலத்தில் தில்லைச் சபா நாயகர் சோழமன்னர்களின் குல தெய்வமாகக் கொள்ளப்பட்டார். தில்லைப் பெருங்கோயிலில் பல திருப்பணிகள் செய்யப்பட்டன. திருமூலத்தானர் சந்நிதியை விட நடராசர் சந்நிதி மக்களுடைய உள்ளத்தை மிகுதியாக ஈர்த்தது. நடராசர் சந்நிதி ஏற்பட்டபிறகு திருமூலத்தானம்,நடராசன் சந்நிதிக்கு எதிரிலுள்ளசபையாதலின், எதிரம்பலம் என்று வழங்கப் படலாயிற்று. முதற் குலோத்துங்கனின் 46, 47-ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் திருமூலத்தானரின் கோயில் புறச் சுவர்களில் பொறிக்கப்பட்டிருந்து பின்பு 'நடராசன்-கோவிந்தராசன்' கோயில்களை வளைத்துப் புதிதாக எடுப்பிக்கப்பட்ட திருச் சுற்று மாளிகையின் (உள்ளிருந்து எண்ணும் போது உள்ள உட்புற முதல் மதில்), வடசுவரில் பொறிப்பிக்கப்பட்டன. திருமூலத்தானர் கோயில் இக் காலத்தில் புதுப்பிக்கப் பெற்றது.

இத் திருச்சுற்று மாளிகையின் கிழக்குப் புறச் சுவர், தெற்குப்புறச் சுவர் (கீழ்ப்புறம், தென்புறம்) ஆகியவற்றில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுக்களால் இம் மதில் குலோத்

துங்க சோழன் திருமாளிகை எனவும் (கீழ்ப்புறம் 267/1913; தென் புறம் 279/1913), அதே மதிலின் தென்புறச் சுவரிலும் (276/1913) வடபுறச் சுவரிலும் (282,4,7,9/1913) உள்ள வேறு சில கல்வெட்டுக்களால் விக்கிரம சோழன் திருமாளிகை என்றும், அழைக்கப்பட்டுள்ளது. முதல் மதிலுக்குக் குலோத்துங்க சோழன் திருமாளிகை என்று பெயரிடப்பட்டது போல இரண்டாம் மதிலுக்கு விக்கிரம சோழன் திருமாளிகை என்று பெயரிடப் பட்டது கொண்டு இம்மதில்கள் இவ்விரு மன்னர்கள் காலத்திலும் எடுப்பிக்கப்பட்டிருக்க வேண்டும் என அறிகிறோம். இவ்விரு மன்னர்களுக்கும் அமைச்சனாகவும், தானைத் தலைவனாகவும் விளங்கியவன் நரலோகவீரன் என்பான்.

## நரலோகவீரன்

குலோத்துங்கனுடைய 28-ஆம் ஆண்டு முதல் விக்கிரம சோழனுடைய 6-ஆம் ஆண்டு வரை பல கல்வெட்டுக்கள் இவனுடைய வெற்றிகளையும் தானங்களையும் குறிப்பிடுகின்றன. இவனுக்குத் தொண்டையர்கோன், அரும்பாக்கக்கிழான், மணவில்கூத்தன், சபாநர்த்தகன், காலிங்கராயன், மாணவதாரன், பொற்கோயில் தொண்டைமான், பொன்னம்பலக் கூத்தன், அருளாகரன், மதுராந்தகன் என்ற பல பெயர்கள் காணப்படுகின்றன. இவன்,

"பேரொலி நீர்—மோதா
அலைகின்ற எல்லை அபயனுக்கே யாக
மலைகின்ற தொண்டையார் மன்" என்றும்
"தென்னர்
மலைமன்னர் ஏனை வடமன்னர் மற்றக்
குலமன்னர் செல்வ மெலாங் கொண்டு"

பொன்னம்பலக்கூத்தரின் ஆடம்பலத்திற்குப் பொன்வேய்ந் தான் என்றும் அறிகிறோம்.

மாறவர்மன் பராக்கிரம பாண்டிய தேவர் ஆட்சிக் காலத்தில் இவன் நரலோகவீரன் சந்தியை ஏற்படுத்தினான் எனவும், நரலோகவீரன் மண்டபத்தை எடுப்பித்தான் எனவும், பாண்டிய நாட்டிலுள்ள இராமநாதபுர மாவட்டத்திலுள்ள திருப்பத்தூர் கல்வெட்டுக்கள் இரண்டு (93, 131—1908) அறிவிக்கின்றன.

இக் கல்வெட்டுக்களை ஆதாரமாகக் கொண்டு கல்வெட்டிலாகா அறிக்கை நரலோகவீரனைப் பாண்டிய மன்னரின் சிற்றரசனாகக் குறிப்பிட்டுள்ளது. நரலோகவீரன் 'அபயனுக்கே மலைகின்ற தொண்டையார்மன்' எனவும், 'தென்னவரையும் மலைமன்னவரையும் வென்றவன்' எனவும் மதுராந்தகன் என்ற பட்டப் பெயரை உடையவன் எனவும் அறியக் கிடக்கும் இவ்வாதாரங்களைக் கொண்டும், இந்நரலோக வீரனுடைய பல கல்வெட்டுக்கள் சோழ நாட்டிலும் தொண்டை நாட்டிலும் கிடைத்துள்ளமை கொண்டும், இவன் முதற் குலோத்துங்கன், விக்கிரம சோழன் ஆகிய சோழ மன்னர் காலத்தில் வாழ்ந்த சிறந்த படை வீரன் எனவும், கலிங்கப் போரில் கருணாகரத் தொண்டைமான் புகழ் பெற்றமை போல இவன் பாண்டிய சேர நாட்டுப் போர்களில் பெரும் பங்கு கொண்டு புகழ் பெற்றவன் எனவும் அறிய வேண்டியவர்களாக உள்ளோம்.

தில்லையில் சபாநாயகர் கோயிலின் முதல் திருச் சுற்று மாளிகை மேற்குப்புறச் சுவரில் நரலோக வீரனுடைய வீரச் செயல்களையும் திருப்பணிகளையும் விளக்கும் கல்வெட்டொன்று உள்ளது. அதன்கண் வடமொழிப் பாக்கள் 31-ம் தமிழ் வெண்பாக்கள் 36-ம் இடம் பெற்றுள்ளன.

வடமொழிப் பாடல்களில் நரலோக வீரன் பொன்னம்பலம், பேரம்பலம் ஆகியவற்றிற்குப் பொன்வேய்ந்தமை, கிள்ளைக்கடல் தீர்த்தத் துறைக்குச் செல்வதற்குப் பெருவழி அமைத்துத் தீர்த்தத் துறைக்கு அருகே விழா மண்டபம் எடுப்பித்து நன்னீர்க்குளம் தொட்டமை, இரண்டு கோபுரங்கள் கொண்ட **நரலோகவீரன் திருமாளிகை** (முதல் திருச்சுற்று மாளிகையின் தென்பகுதி போலும்) எழுப்பியமை, பசுபதியும், தேவியும் வீற்றிருக்க **நூற்றுக்கால் மண்டபம்** அமைத்தமை, அம்மன் கோயிலும் அதற்குக் கோபுரத்துடன் கூடிய திருச்சுற்று மாளிகையும் எடுப்பித்தமை, சிவகங்கையாகிய திருக்குளத்திற்குக் கருங்கற்படி சார்த்தியமை, திருப்பதிகம் பாடுவோருக்கு மண்டபம் அமைத்தமை, மூவர் தேவாரத்தைச் செப்பேடுகளில் பொறித்தமை, கோயிலுக்கு நந்தன வனமும் கமுகந் தோட்டமும் அமைத்தமை, வீதிகளுக்கு விளக்குகள் இட்டமை, தில்லை எல்லையிலுள்ள வீராணத்தேரிக்கு மதகு

அமைத்தமை ஆகிய நற்செயல்கள் பலவும் கவிதைச் சுவை பட வருணிக்கப்பட்டுள்ளன,

தமிழ் வெண்பாக்களும் இந் நரலோகவீரன் உலகு நல னுறச் செய்த நற்பணிகள் பலவற்றையும் நயம்பட நவில் கின்றன, இவ்வீரன் தில்லைச் சிற்றம்பலத்துத் திருக் கொடுங் கைக்குப் பொன் வேய்ந்தான், தில்லையில் பொன்னம்பலத்தைச் செம்பொன்னால் வேய்ந்தான். தென் வேந்தன் கூன் நிமிர்த்த செந்தமிழ்த் தென் கோயில் (திருஞான சம்பந்தர் கோயில்) பொன்வேய்ந்தான். கூத்தப் பிரான் ஆடம்பலம் பொன் வேய்ந்தான். திருப் பெரும் பேரம்பலத்தைச் செம்பினால் வேய்ந்தான், தில்லைநாயகருக்குப் பசுநெய் சொரிகலம் செய் வித்தான். எதிர் அம்பலத்தார்க்குப் பொற்படிக்கம் செய்து வைத் தான், தில்லைப் பெருமானுக்குக் காளம் (விருது) செய்தமைத் தான். இறைவனுக்குக் கற்பூர விளக்கு அமைத்தான், பொன் னம்பலம் சூழ் திருச்சுற்றினைத் திருவிளக்குகளால் அணிபெறச் செய்தான். திருக் கட்ட மஞ்சனம் செய்வித்தான், தில்லைக் கூத்தற்குப் பாலமுது செய்வித்தான். ஆயிரம் நாழி நெய் யால் தில்லைக் கூத்தரை மஞ்சனம் ஆட்டினான். திருஞான சம்பந்தருடைய பதிகங்களைக் கேட்போருக்கு மண்டபம் அமைத்தான். மல்லல் குலவரையால் நூற்றுக்கால் மண்டபத்தைத் தில்லைப் பிரானுக்குச் செய்தமைத்தான். தில்லைப் பெரிய திருச் சுற்று மாளிகையை எல்லைக் குலவரைபோல் இனிதமைத்தான். தில்லைத் திருக்குளத்திற்குக் கற்படி சார்த்துவித்தான், தில்லை யில் வீதிசூழ் நல்விளக்கும் வீற்றிருக்க மண்டபமும் வீறுபெறச் செய்தான், சிவகாமி அம்மைக்கு மாளிகையும் அக்கோயில் திருச்சுற்றையும் எடுப்பித்தான், ஆளுடைய பாவைக்கு அபிடேகம் (கிரீடம்) சாத்தினான். இறைவிக்குப் பீதாம்பரம் சமைத்தான். நாடோறும் மகப்பாலும் எண்ணெயும் மகிழ்ந் தளிக்கும் அறம் செய்தான். அம்பலத்தின் அம்மான் எழுந்தரு ளும் வீதி பொன் வேய்ந்தான். நாயகர் வீதியுலா நயந்து அருளும் அந்நாளில் தூய அகரு (அகில்) தூபத்தால் வான் மறைக்க வளஞ் செய்தான். தில்லைவாணி சந்நிதியில் அரச கணம் இருந்துண்ணச் செய்தான். தில்லையில், மணமுடிப்பார் திருவீதி மடங்கள் பல சமைத்தான். ஏனையர் தொழுதேத்துங் கூத்தற்கு ஆனையொன்று அடியுறையா உவந்தளித்தான். மூவர் தேவாரத்தைச் செப்பேட்டில் எழுதுவித்தான், தில்லை

நாயகருக்குத் திரு நந்தன வனமும் நூருயிரம் கமுக மரங்கள் அடங்கிய தோப்பும் சமைத்தான், மாசிக்கடலாடி வீற்றிருக் கும் மண்டபமும் ஏசலில் பெருவழியும் இனிதமைத்தான். தில்லையம்பலவர் நெய்யாட ஆயிரம் பசு அளித்தான். தில்லைச் சுடலை அமர்ந்தார் திருக்கோயில் கருங் கல்லால் எடுத்தமைத் தான். தில்லை மூவாயிரர் தங்கள் திருவளர எல்லையில் பேரேரிக்கு (வீராணத்தேரி) எழில் மதகு கல்லினுல் அமைத் தான்—என்ற செய்திகளைத் தமிழ்ப் பாக்களால் அறி கிருேம்.

இங்ஙனமே நரலோக வீரன் திருவதிகையிலும் நற்பணிகள் பல செய்தானுக அறிகிருேம். அத்திருப்பணிகளுள் மிகச் சிறந் தது நூற்றுக்கால் மண்டபம் எடுப்பித்த செயலாகும்.

நரலோக வீரன் முதற் குலோத்துங்கன், அவன் மகன் விக்கிரமன் ஆகிய இருவர் ஆட்சியிலும் சோழ மன்னர் அரசவையை அலங்கரித்து அரும்பணி புரிந்து பெரும் புகழ் பெற்றவனுவான்.

விக்கிரம சோழனும் (கி. பி. 1118—1135) தன்னுடைய மெய்க்கீர்த்தியில் தான் தில்லைப் பிரானுக்குச் செய்த திருப் பணிகளைப்பற்றி விரிவாகக் குறிப்பிடுகிருன். அப்பகுதி பின் வருமாறு:

"வாழி வாழி இம் மா நிலம் காக்கத்
திருமணிப் பொற்றேட் டெழுது பத்தாண்டு
வ்ரு முறை முன்னே மன்னவர் சுமந்து
திருநிறைத்துச் சொரிந்த செம்பொற் குவையால்
தன்குல நாயகன் தாண்டவம் பயிலும்
செம்பொன் அம்பலம் சூழ்திரு மாளிகையும்
கோபுர வாசல் கூட சாலைகளும்
உலகு வலங் கொண்டு ஒளி விளங்கு நேமிக்
குல வரை உதயக் குன்றமொடு நின்றெனப்
பசும்பொன் வேய்ந்த பலிவளர் பீடமும்
விசும்பொளி தழைப்ப விளங்குபொன் வேய்ந்து
இருநிலம் தழைப்ப இமையவர் களிப்பப்
பெரிய திருநாள் பெரும்பெயர் விழாவெனும்
உயர்பூரட் டாதி உத்திரட் டாதியில்
அம்பலம் நிறைந்த அற்புதக் கூத்தர்

இம்பர் வாழ எழுந்தருளு வதற்குத்
திருத்தேர்க் கோயில் செம்பொன் வேய்ந்து
பருஉத்திரண் முத்தின் பயில்வடம் பரப்பி
நிறைமணி மாளிகை நெடுந்தெரு வீதிதன்
திருவளர் பெயரால் செய்து சமைத் தருளிப்
பைம்பொன் குழித்த பரிகலம் முதலாச்
செம்பொன் கற்பகத் தொடுபரிச் சின்னமும்
அளவி லாதன ஒளிபெற அமைத்துப்
பத்தாம் ஆண்டில் சித்திரைத் திங்கள்
அத்தம் பெற்ற ஆதி வாரத்துத்
திருவ்ளர் மதியின் திரயோதசிப் பக்கத்து
இன்ன பலவும் இனிது சமைத் தருளி
ஒருகுடை நிழற்கீழ்த் தலமுழுதுங் களிப்ப''—

இம் மெய்க்கீர்த்திப் பகுதியால் விக்கிரமசோழன் தன் பத்தாம் ஆண்டில் சிற்றரசர்கள் சொரிந்த திறைப் பொருள் களைக் கொண்டு தன் குல நாயகன் தாண்டவம் பயிலும் செம் பொன் அம்பலம் சூழ் திருமாளிகையும் மேலைக் கோபுர வாசல் கூட சாலைகளும் பலிபீடமும் பொன்வேய்ந்தான் என்று அறி கிறோம். தில்லை மேலைக் கோபுரம் தலைவாயில் கீழ்த்தளத்தில் பெயர் பொறிக்கப்பட்ட சிற்பங்கள் பல காணப்படுகின்றன. அவையாவன. சந்திரன். கிரியாசக்தி, சனிபகவான், வாயு பகவான், அக்கினி பகவான், க்ஷேத்திரபாலப்பிள்ளையார், காமதேவன், கங்காதேவி, அகஸ்தியர், ஆதிசண்டேசுவரர், கருடன் மீது விஷ்ணு, தன்வந்திரி, திரிபுரசுந்தரி, ஸ்ரீதேவி, சுக்கிரன். தாரகாரி (சுப்பிரமணியர்), ஜயன், வைஜயன்; என்ற துவாரபாலகர், தேவேந்திரன், துவாரபால கணநாதர், நாகன், யமுனை, பத்ரகாளி, நிருதி, புதன், ஞானசக்தி, விச்வகர்மா, துர்க்காதேவி, ருத்திரதேவர், ராகு–கேதுக்கள், நாரதன், அளகேசுவரன் என்பன.

விக்கிரமன் தில்லை நாயகருக்குப் பெரிய திருநாள் பெரும் பெயர் விழா எடுத்தான். கூத்தர் எழுந்தருளுவதற்குத் திருத் தேர்க்கோயில் செம்பொன் வேய்ந்தான். நிறை மணி மாளிகை நெடுந்திருவீதி தன் திருவளர் பெயரால் செய்து சமைத்தருளி னான். பைம்பொன் குழித்த பரிகலம் முதலாச் செம்பொன் கற்பகத்தொடு பரிச்சின்னமும் அமைத்தான் முதலியவற்றை அறியலாம்.

குலோத்துங்கன், விக்கிரம சோழன். நரலோக வீரன், குலோத்துங்கன் திருத்தங்கையாரான குந்தவையாழ்வார் என்ற யாவரும் திருப்பணிகள் பல செய்து தில்லைக் கோயிலை வளம்பெறச் செய்தனர்.

இக்காலத்தில் தில்லையில் திருமூலத் தானத்தார் கோயில் புதுப்பிக்கப்பட்டது. முற்பட்ட சோழர் காலத்து மூலவர் கோயில் பழைய நிலையில் குலோத்துங்கனுடைய 47–ஆம் ஆண்டு வரை நீடித்திருக்க வேண்டும். புதுப்பிக்கப்பெற்ற கோயில் எதிரம்பலம் (கூத்தப் பெருமான் கோயிலுக்கு எதிராக உள்ளது) என்று வழங்கப்பெற்றது. நிருத்த சபை, உட்புறம் உள்ள இரு திருச்சுற்று மாளிகைகள், நூற்றுக்கால் மண்டபம், திருக்காமக் கோட்டம் (அம்மன் கோயில்) என்பவை புதியனவாக இணைக்கப்பட்டன. மேலைக் கோபுரம் விக்கிரம சோழன் காலத்தில் தொடங்கப்பெற்று இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் முடிவு பெற்றிருக்க வேண்டும். திருக்குளத்திற்கு இக்காலத்திலேயே கருங்கற்படிகள் கட்டப்பட்டன. இவ்வாறு கோயிலின் பரப்பு விரிவடைந்தது.

இந்திய அரசாங்கத் தொல்கலைக் கழகத்தார் அறிக்கை விண்தோயும் கோபுரங்களும், நூற்றுக்கால், ஆயிரக்கால் மண்டபங்களும் 16–ம் நூற்றுண்டில் விசயநகர வமிச மன்னர்களால் எடுப்பிக்கப்பட்டன என்று குறிப்பிடுகிறது.

தில்லையிலும் திருவதிகையிலும் நரலோகவீரன் நூற்றுக்கால் மண்டபம் அமைத்தமை கல்வெட்டுக்களால் அறியப்பட்ட செய்தியாகும். விக்கிரம சோழன் மெய்க் கீர்த்தியில் கூறப்பட்டிருக்கும் கோபுர வாசல் என்ற தொடர் தற்காலத் தில்லையிலுள்ள மிகப் பழைமையான மேலைக் கோபுரத்தைக் குறிக்கலாம். நூற்றுக்கால் மண்டபமும் எழுநிலைக் கோபுரமும் பிற்பட்ட சோழர்கள் காலத்தில் தோன்றலாயின. இவற்றை அமைத்த பெருமை பிற்பட்ட சோழர்களையே சாரும்.

தில்லையிலுள்ள **நிருத்த சபை** முதற் குலோத்துங்கன், விக்கிரமன் என்ற மன்னர்கள் காலத்தில்தான் எடுப்பிக்கப்பட்டிருக்க வேண்டும். நிருத்தசபை என்பது ஊர்த்துவ தாண்டவ மூர்த்தியை முக்கிய தெய்வமாகக் கொண்ட மண்டபமாகும். ‘பர்கூசன்’ என்பார் இதுதான் தில்லையில் மிகப் பழைமையான கட்டிடம் என்றும், இக்கோயிலை நிறுவுவதற்கே அடிப்

படையான தாண்டவ மூர்த்தியே இதில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளார் என்றும், 6 அடி உயரமும் நல்ல சிற்ப வேலைப்பாடும் கொண்டமைந்த 56 தூண்களோடு உயர்ந்த மேடைமீது நிற்கும் இம் மண்டபம் செம்பு வேயப்பட்ட கூரையை உடையது எனவும், இது சக்கரமும் குதிரைகளும் கொண்ட தேரின் அமைப்பை உடைய கட்டிடம் எனவும் கூறி யுள்ளார். அவர் கூறியபடித் தில்லைக் கோயிலில் உள்ள கட்டிடங்களில் இப்பாகந்தான் மிகப் பழைமையானது என்பது ஏற்றுக் கொள்ளத்தக்கது அன்று. அவர் நிருத்த சபையின் காலத்தைப்பற்றி ஒன்றும் அறுதியிட்டுக் கூற வில்லை. ஆனால் சிவகாமி அம்மன் கோயிலுக்கு வடக்கிலும் வடக்குக் கோபுரத்திற்குத் தென்மேற்கிலும் சிவகங்கைக்கு மேற்கிலும் அமைந்துள்ள **பாண்டிய நாயகம்** என்ற முருகன் கோயில் உருவ அமைப்பில் இதனை ஒத்துத் தேர் உருவம் உடையதாய்க் காணப்படுவதொன்றுயினும் கலைப்பாணியின் அமிசங்களைக் கொண்டு அது 17–ஆம் நூற்றுண்டில் கட்டப் பட்டிருக்கலாம் எனறு குறிப்பிடுகிறுர். இவ்வபிப்பிராயம் ஏற்புடைத்தன்று.

இக்கட்டிடக் கலைப்பாணி பன்னிரண்டாம் நூற்றுண்டில் முதல் குலோத்துங்கன் காலத்திலேயே தோன்றியது என்ற செய்தி மேலைக் கடம்பூர்க் கோயில் வருணனையில் ஆதாரத் தோடு நிறுவப்படும்.

இச்சேர்க்கைகளால் தில்லைக் கோயில் இடைக் காலத்தில் இருந்ததைவிட ஆறு மடங்கு விரிவடைந்து அக்காலத் தென் னிந்தியக் கோயில்களில் மிகப் பெரியதாக மிளிர்ந்தது. இவ்வி தம் '**கோயில்—மாநகர்கள்**' ஏற்படலாயின.

குலோத்துங்கனுடைய 46–ஆம் ஆண்டில் தில்லை அம்பலத்தே வடகீழ்ப்பால் சொன்னவாறறிவார் கோயிலையும் புராண நூல் விரிக்கும் புரிசை மாளிகையையும் கண்டன் மாத வன் செய்வித்தான் என்று **சிலாசாசனம்** ஒன்று கூறுகிறது.

**ஆரிய உலகம் அனைத்தையுங் குடைக்கீழ்**
**ஆக்கிய குலோத்துங்க சோழற்கு**
**ஆண்டொரு நாற்பத் தாறிடைத் தில்லை**

அம்பலத்தே வடகீழ்ப் பால்
போரியல் மதத்துச் சொன்னவா றறிவார்
கோயிலும் புராணநூல் விரிக்கும்
புரிசைமா ளிகையும் வரிசையால் விளங்கப்
பொருப்பினுன் விருப்புறச் செய்தோன்
நேரியற்கு ஆண்டோர் அஞ்சுடன் மூன்றில்
நிகரிலாக் கற்றளி நீடூர்
நிலாவினுற்கு அமைத்த நிலாவினுன் அமுத
சாகரன் நெடுந்தமிழ் தொகுத்த
காரிகைக் குளத்தூர் மன்னவன் தொண்டை
காவலன் சிறுகுன்ற நாட்டுக்
கற்பக மிழலை நாட்டு வேளாண்மை
கொண்டவன் கண்டன் மாதவனே.

இக்கண்டன் மாதவன் நீடூரில் சிவபெருமானுக்குக் கற்றளி யமைத்த செய்தியைப் பின்னர் நோக்குவோம்.

## மேலைக்கடம்பூர்

மேலைக்கடம்பூர் என்பது தென்னுர்க்காடு மாவட்டத்தில் சிதம்பரத்திலிருந்து 32 கி.மீ. தொலைவும் காட்டுமன்னுர்குடியிலிருந்து 6.4 கி.மீ தொலைவும் கங்கை கொண்டசோழபுரத்திலிருந்து 9.6 கி.மீ. தொலைவும் உள்ளதொரு சிற்றூர். ஏழாம் நூற்ருண்டினரான அப்பர் இவ்வூரைத் திருக்கடம்பூர் என்றும், தென்கடம்பை என்றும், இவ்வூர் ஆலயத்தைத் திருக்கரக்கோயில் என்றும், 'தென் கடம்பை திருக்கரக் கோயிலான்' என்பது போன்ற இவ்வூர்ப்பதிக அடிகளில் சுட்டியுள்ளார். அவர் தம்முடைய அடைவு திருத் தாண்டகத்தில் பெருங்கோயில், கரக்கோயில், ஞாழற் கோயில், கொகுடிக் கோயில், இளங் கோயில், மணிக்கோயில், ஆலக்கோயில், திருக்கோயில் என்ற பலதரப்பட்ட கோயில்களின் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளார். இவற்றின் இலக்கணங்களை உள்ளவாறு அறியத் தற்காலத்தில் கருவி ஏதும் இல்லை. மாடக் கோயிலும் பெருங் கோயிலும் ஒரே விதக் கோயிலைக் குறிக்கும் இரு பெயர்களா அன்றி அவை வெவ்வேறு என்பதை அறியவும் வாய்ப்பு இல்லை. திருப்பணிக் காலத்தில் புதிதாக நிறுவப்படும் தாற்காலிகக்கோயிலை இளங்கோயில் என்று கல்வெட்டுக்களும் குறிப்பிடக் காண்கிறேம். அதனைப் பாலாலயம் என்ற வடமொழிப்

பெயரால் கூறுவதும் உண்டு. அப்பர் தேவாரப்பாடல் பின் வருமாறு :

"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினே டெட்டும் மற்றும்
கரக்கோயில் கடிப்பொழில் சூழ் ஞாழற்கோயில்
கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக்கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீ வினைகள் தீரும் அன்றே"

இப்பொழுது மேலைக்கடம்பூர் திருக்கரக்கோயில் அமிர்த கடேசுவரர் கோயில் என்று வழங்கப்படுகிறது. இக்கோயிலின் பிராகாரத்தின் தளவரிசையில் புதைக்கப்பட்டிருக்கும் ஒரு சிதைந்த கல் வெட்டில் இவ்வூர்ப் பெயர் 'உத்தமசோழ சதுர்வேதி மங்கலம்' என்று குறிப்பிடப்பட்டிருப்பது கொண்டு இக்கல் வெட்டைத் தன்னிடத்துக் கொண்ட இக் கோயில் முற்பட்ட சோழர் காலந்தொட்டே இருந்த செய்தி புலனாகிறது.

இக் கோயில் கிழக்குப் பார்த்த சந்நிதியை உடையது. கோபுரத்தைக் கடந்து உட்சென்றவுடன் பிற்காலத்தில் எழுப் பப்பட்டதாகிய மண்டபம் ஒன்றைக் காணலாம். இம்மண்ட பத்திலும் கருவறையிலும் பல அருமையான செப்புத் திரு மேனிகளைக் காணலாம்.

வலம் வரும்போது தெற்குப் பிராகாரத்தை அடைந்ததும் கண்கவரும் வனப்பு வாய்ந்த விமானத்தையும் அர்த்த மண்ட பத்தையும் காணலாம். விமானம் அடியிலிருந்து முடி வரையில் சித்திர மயமாய்த் தோற்றமளிக்கும். கட்டிடக் கலை, சித்திரக் கலை என்ற பாகுபாட்டை இங்கே காண முடியாது. இக்கோயில் சித்திரமயமாகவே காட்சியளிக்கிறது. கோயிலைப் புதுக்குவதாகக் கூறிக்கொண்டு சிற்பியின் கைவண்ணத்தை யும் சிற்பத்தின் பொலிவையும் காண முடியாத வகையில் வனப்பைக் குலைத்துத் தடிப்பான வர்ணங்களைத் தீட்டிய சிலைகளே பல கோயில்களிலும் காணப்படுகின்றன. ஆனால் பண்டை அழகு கெடாமல், அமைக்கப்பட்ட கலைச் செல் வத்தை இக்கோயிலில் இன்றும் காணலாம். இக்கோயிலின் இச்சீரிய நிலையை அழிந்து விடாமல் காப்பது நம்மனோர் கடமையாகும்.

தென்பிராகாரத்தின் அர்த்தமண்டபத்தின் புறச் சுவரில் அகத்தியர், அர்த்தநாரீசுவரர் என்ற சிலைகளின் கீழே முதல் குலோத்துங்கனுடைய 43–ஆம் ஆண்டுக் கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டு 'புகழ்மாது விளங்க' என்ற தொடக்கத்தை உடையது. முற்பட்ட சோழர் காலத்ததாகிய இப் பழங் கோயில் சுமார் கி. பி. 1113–ஆம் ஆண்டுக்குச் சற்று முன் பாகப் புதுப்பிக்கப் பட்டிருக்க வேண்டும். உத்தமசோழனு டைய கல்வெட்டு பிராகார தளத்தில் உள்ளதால் அச்சோழன் காலத்திலும் இது ஒருகால் கற்கோயிலாகவே இருந்திருக்க லாம். பிறகு அக் கற்கோயிலே முதற் குலோத்துங்கன் காலத் தில் புதிய பாணியில் பன்னிரண்டாம் நூற்றுண்டின் தொடக் கத்தில் புதுப்பிக்கப்பட்டிருக்க வேண்டுமெனத் தோன்று கிறது.

இக்கோயிலின் விமானம் இரதம் போன்ற அமைப்புடை யது. சக்கரமும், பூட்டிய குதிரைகளும் இரதத்தை அலங்கரிக் கின்றன. ஈசனே கயிலாயத்திலிருந்து மக்களுக்கு நற்கதி யளிக்க வந்திறங்கிய இரதம்போல இக்கோயில் விமானம் காட்சியளிக்கிறது.

இதனுடைய உபபீடத்திற்கு மேல் அதிஷ்டானம் உள்ளது. இது உபானம், பத்மம், கண்டம், வரந்தையோடு கூடிய குமுதம், அகரப் பட்டியல் என்ற பல படைகள் கொண்டது.

குலோத்துங்கன் காலத்தில் கட்டப்பட்ட பாகம் கருவறை, அர்த்தமண்டபம் என்ற இரண்டு உறுப்புக்களை உடையது. கருவறையின் வெளிச் சுவரில் மூன்று தேவகோஷ் டங்கள் உள்ளன. தெற்கில் தட்சிணுமூர்த்தியும், மேற்கில் விஷ்ணுவும் வடக்கில் பிரமனும் தேவகோஷ்டத் தேவதை களாகக் காணப்படுகின்றனர். ஒவ்வொரு தேவகோஷ்டத்துக் கும் முன்பாக இரண்டு சிங்கத் தூண்களின் மீது நிற்கும் பிதுங்கின மண்டபம் உள்ளது. மண்டபத்தின் மேல் வரந்தை யோடு கூடிய (ribbed) கொடுங்கையும் இரு சிறு கூடுகளும் முகப்பை அணி செய்கின்றன. இவற்றிற்கு மேல் சிங்கமுகச் சிகரங் கொண்ட பெரிய கூடு காணப்படுகிறது. கூட்டின் நடுவில் சிலையுடன் கூடிய தேவகோஷ்டங்களைக் காணலாம். இப்பெரிய கூட்டின் முகப்பு தேவதைகள், யக்ஷர்கள் ஆகிய உருவங்களாலும், கொடிக்கருக்காலும் அலங்கரிக்கப்பட்

டுள்ளது. இக்கூட்டின் உச்சி இரண்டாவது தளத்தின் கொடுங்கை வரையில் ஓங்கி நிற்கிறது. இக்கோஷ்டத்தின் மற்றொரு பக்கத்தில், நிற்கும் 'சார்த்தூலம்' என்ற சிங்கம் போன்ற மிருகம் அமைந்துள்ளது. இதற்கு அடுத்தாற்போல் தேவகோஷ்டத்தை உள்ளடக்கிய பஞ்சரம் உள்ளது. இப் பஞ்சரம் ஒருதளம். கொடுங்கை, கிரீவம், சிகரம், ஸ்தூபி என்ற உறுப்புக்களைக் கொண்டது. குலோத்துங்கன் காலம் வரை இரண்டாவது தளத்தைச் சாலைகளும் கூடங்களும் அலங் கரித்தன. இவ்வித நான்கு பஞ்சரங்களும், தேவகோஷ்டமும், சார்த்தூலமும் கீழ்த்தளத்தின் கூடில் சிங்கமுகம் கொண்ட சிகரமும் இரண்டாம் தளத்தை அலங்கரிக்கும் புதுமையும், குமுதப்படை, கொடுங்கை ஆகியவை வரந்தை உடையன வாய் அமைக்கும் வகையும் சோழர் கலைப்பாணியின் புது அம்சங்களாகும்.

இங்கு எண்கோண வடிவான கொடுங்கைமீது யாளி வரி மானம் உள்ளது. அதற்கு மேல் உள்ள் கிரீவத்தில் நான்கு கோஷ்டங்களில் அமைந்தும், நான்கு தனியே அமைந்தும் எட்டுத் தேவதைகளின் சிலைகள் காணப்படுகின்றன. இச் சிலைகள் எட்டுத் திக்பாலகர்களின் சிலைகள் என்று ஊரவரால் கூறப்படுகின்றன.

கிரீவத்திற்கு மேலுள்ள சிகரம் அரை வட்ட வடிவில் அமைந்துள்ளது. இச்சிகரம் புதிதாக அமைக்கப்பட்டதாகும். பழைய சிகரம் கிரீவத்தைப் போல எண்கோண வடிவினதாய் அமைந்திருக்க வேண்டும். சிகரத்தின் மீது நாற்புறங்களிலும் நான்கு கூடுகள் உள்ளன. பத்ம இதழ்களை உடைய பீடத் தின் மீது அமைக்கப்பட்டுள்ள உருண்டை வடிவான ஸ்தூபி யும் புதிதாக அமைக்கப்பட்டதேயாகும்.

அர்த்தமண்டபத்தின் ஒவ்வொரு பக்கத்திலும் ஒரு தேவ கோஷ்டம் காணப்படுகிறது. ஒரு பக்கத்தில் அர்த்த நாரீசுவர ரும் ஒரு பக்கத்தில் ஆலிங்கன மூர்த்தியும் காணப்படு கின்றனர். இத்தேவகோஷ்டங்களுக்குமுன், கருவறை யிலுள்ள மண்டபங்களைப் போலல்லாமல் சற்று உள்ளடங் கியனவாய், இரண்டிரண்டு தூண்கள்மீது அமைக்கப்பட்ட மண்டபங்கள் மேலுள்ள கூடுகளால் அலங்கரிக்கப்பட் டுள்ளன.

இக் கோயிலின் வெளிச் சுவர்களிலுள்ள சிலைகள் பின் வருமாறு (சில சிலைகளின் கீழ் பொறிக்கப்பட்டுள்ள கல் வெட்டுக்கள் வளைவுகளுக்குள் குறிப்பிடப் பட்டிருக்கின்றன):

கணபதி; அகஸ்தியர்; தேவேந்திரன் ("திரேதா யுகத் தின் கண் அமரேசுவரன் தேவன் பூசித்தது"); தஷிணா மூர்த்தி; இருஷிகள் ("திரேதாயுகத்தின் கண் திருக்கோள சுவாமி, உரோமய மாருஷியும், ஒக்கோள உருத்திரரும் பூசித் தது"); சந்திரன் ("திரேதாயுகத்தின் கண் அமரேந்திர சுவாமி சந்திரனும் பூசித்தது"); அனுமனும், கருடனும் இரு மருங்கிலும் கொண்ட விஷ்ணு; சூரியன் ("திரேதாயுகத்தில் சூரியனும் பூசித்தது"); பருவதராசன் ("துவாபரத்திலே பர்வ தராஜனும்......பூசித்தமையில் திருப்பரங்குன்று"); பிரமன்; பதஞ்சலி ("கலியுகத்திலே பதஞ்சலி தேவர் பூஜித்தமையில் திருக்கற்கோயில்"); கங்காதரர்; துர்க்கை என்பன.

இவைகளைத் தவிர, மகிஷாசுரமர்த்தினி, பிக்ஷாடனர், வீணாதரர், உமாசகிதர், விருஷபாந்திகர் ஆகிய சிலைகளும் உள.

இக்கோயிலில் உள்ள சிலைகளை இருஷிகள் முதலியோர் பூசித்த ஐதிகம் சிலைகள் மூலமும் கல்வெட்டுக்கள் மூலமும் குறிப்பிடப்பட்டிருப்பது போலவே, வடவார்க்காடு மாவட்டத் துப் பிரமதேசத்திலுள்ள சந்திரமௌளீசுவரர் கோயிலிலும் காணப்படுகிறது. அக்கோயிலில் உள்ள இறைவனை அக்கினி, சந்திரன், உரோமச முனிவர் முதலியோர் முந்திய யுகங் களில் பூசித்தனர் என்று கல்வெட்டுக் குறிப்பிடுகிறது **(196—1915)**.

இக்கோயிலின் புறச் சுவர்களில் உருண்டை வடிவான தூண்களும் பட்டையான தூண்களும் ஆக இருவித வடிவ முடைய தூண்கள் காணப்படுகின்றன. அகஸ்தியரின் தேவ கோஷ்டத்தின் உட்பகுதியில் பத்மபீடம், கால், வரி, கலசம், பத்மஇதழ், பலகை, போதிகை என்ற உறுப்புக்களைக் கொண்ட உருண்டையான தூண்கள் உள்ளன. இக்கோஷ் டத்தை உள்ளடக்கிப் பட்டைத் தூண்கள் நிற்கின்றன. இப் பட்டைத் தூண்களில் ஒவ்வொன்றும் எட்டுப் பட்டைகள் உடையது. அடியில் கணங்கள் உள்ளமைந்த வட்டங்களும் அவைகளின்மேல் கொடுங்கையும் யாளிவரிமானமும் உள்ளன. அவற்றிற்கு மேல் நடுவில் சிலையும், பக்கத்தில் சிங்கங்

களும் உள்ளன. மூன்று சிறு சிகரங்கள் தலைப்பாகத்தை அணி செய்கின்றன. மேலே எட்டுத் திக்குகளிலும் சிற்றுருவங்களை உடைய பல சிலைகளின் தொகுதியும் அதற்குமேல் கொடியால் அணி செய்யப்பட்ட கலசம், குமுதம், பத்மஇதழ், பலகை என்ற உறுப்புக்களும் காணப்படுகின்றன. பலகைக்கு மேலும் கீழ்த்தளத்துக் கொடுங்கையின் கீழும் காணப்படும் போதிகைச் சிற்பங்களில் இசைக் கருவிகளுடன் கூடிய பலவித நர்த்தனம் புரியும் சிலைகளும், சார்த்தூல மிருகங்களும் பெரும்பான்மையாக உள்ளன. இச்சிற்றுருவச் சிலைகளிடையே தாண்டவமூர்த்தியின் அழகிய சிலை ஒன்றும் உள்ளது. அகரப் பட்டியலுக்குக் கீழ் பெரியபுராணக் கதையை விளக்கும் சிற்பங்கள் வரிசையாகப் பொறிக்கப்பட்டிருக்கின்றன.

ஞான தட்சிணாமூர்த்தி: இச்சிலை தென் கோஷ்டத்தை அணி செய்கிறது. பரந்த கிளைகளை உடைய கல்லால மரத்தின் கீழ் அமைந்த தட்சிணாமூர்த்தியின் வலப்பக்கத்தில் ரிஷபம் ஒன்று காணப்படுகிறது. தலையில் கேசபந்தம் காணப்படுகிறது. அவருடைய வலக்கால் முயலகனை (மாயையின் உருவமான அபஸ்மார புருஷன்) அழுத்திக் கொண்டிருக்கிறது. மடித்த இடக்கால் வலத்துடைமீது அமர்ந்தபடி காணப்படுகிறது. முன் வலக்கை சின்முத்திரையைக் குறிக்கின்றது. ஏனைய கைகளில் புத்தகம், பாம்பு, நெருப்பு என்பன காணப்படுகின்றன.

துர்க்கை: வடக்குத் தேவகோஷ்டத்தைத் துர்க்கையின் சிலை அணி செய்கிறது. மகிடாசுரன் தலை தனியே துர்க்கையின் பீடத்தின் கீழாக அமைந்திருப்பது இதன் தனிச் சிறப்பாகும். கரண்ட மகுடம் தரித்து, துடைவரையில் கச்சம்போல அந்தரியத்தை உடுத்து, அபய ஹஸ்தம், கடியவலம்பித முத்திரை இவற்றை உடையவளாய், இடத்துடையில் இடக்கை அமர்ந்திருக்க, ஏனைய கைகளில் தீச்சுவாலையோடு கூடிய சங்கு, சக்கரங்கள், கத்தி, கேடயம் இவற்றை ஆயுதங்களாகக் கொண்டு, சிங்கவாகனத்தில் ஏறிக் காட்சியளிக்கும் தேவி, ஆரம், குசபந்தம், சன்னவீரம், கேயூரம், வளையல் என்பனவற்றை அணிந்துள்ளாள்.

அர்த்தநாரீசுவரர்: மாதொரு பாகனாய்க் காட்சியளிக்கும் அம்மையப்பரின் வலப் பாகத்தில் இரு கைகளும், இடப் பாகத்

தில் ஒரு கையும் காட்சியளிக்கின்றன. பின்புறம் ரிஷபம் காணப்படுகிறது.

**கங்காதரர் :** சிவன் கங்காதேவியைத் தன் தலையில் வாங்கித் தரிப்பதாகக் காட்சியளிக்கும் இச்சிலையின் இடப் பக்கத்திலுள்ள பார்வதியின் தோற்றம் பரபரப்புடையதாகக் காணப்படுகிறது.

**அகத்தியர் :** சிம்ம பீடத்தின் மீது கைகளில் ஜப மாலையும் குண்டிகையும் கொண்ட அகத்தியர் நீண்ட தாடியும் பானை போன்ற பெரு வயிறும் உடையவராகத் தோற்றமளிக்கிறார்.

**கணபதி :** தேவகோஷ்டத்திலுள்ள கணபதி நான்கு திருக் கரங்களை உடையவராகத் தோற்றமளிக்கிறார். பிராகாரச் சுற்றுக் கோயிலில் காணப்படும் வலம்புரி விநாயகரின் அருமையான சிலை முற்பட்ட சோழர் காலத்துப் பரிவாரக் கோயில் சிலையாக இருக்கலாம்.

இக்கோயிலில் சிறந்த செப்புத் திருமேனிகள் காணப்படு கின்றன. சிவபார்வதி ஆலிங்கனமூர்த்தி மிகப் பழைமையான சிலையாகும். மாணிக்கவாசகர், பிக்ஷாடனர், விருஷபவாகன தேவர், ஆடவல்லான், நிருத்த பாலசுப்பிரமணியர் என்ற திருமேனிகள் முதற் குலோத்துங்கன் காலத்தனவாகலாம்.

நந்தியின்மேல் தாண்டவமாடும் நடராச விக்கிரகம் ஒன்று இங்குள்ள செப்புச் சிலைகளிடையே காணப்படுகிறது. இது பண்டைக் காலத்தில் வங்காளப் பகுதியில் ஆண்ட பாலர் வமிசத்தாரின் கலைப்பாணியை ஒத்திருக்கிறது. இதனைத் தன் வடநாட்டு வெற்றிச் சின்னமாக முதல் இராஜேந்திரன் கொணர்ந்து இக்கோயிலுக்கு வழங்கியிருக்கலாம் என்று தோன்றுகிறது. இத்திருமேனியின் ஊன்றிய பாதம், மற்ற தாண்டவமூர்த்திகளைப் போல முயலகன் மேல் வைக்கப் பெறுமல் நந்திதேவர் முதுகில் வைக்கப்பட்டுள்ளது. வலக்கை கஜஹஸ்த அமைப்பிலுள்ளது. தென்னிந்திய கலைப்பாணிக்கு மாறுபட்ட வடஇந்தியப் பாலருடைய கலைப்பாணிக்கு இது சிறந்த எடுத்துக் காட்டாகும்.

இக்கோயிலில் சோழர் கலைப்பாணியில் ஒரு புதிய அமிச மான ரத விமானம் என்பது முதன் முதலாக அமைக்கப்பட்

டுள்ளது. இரண்டாம் தளத்தில் சாலைகளுக்கும் கூடங்களுக்கும் பதிலாகத் தேவகோஷ்டங்களும் பஞ்சரங்களும் அமைக்கப்பட்டுள்ளன. விமானம் முழுவதும் சிற்பமயமாய்த் தோற்றமளிக்கின்றது. பெரியபுராணக் கதைகள் சிற்பங்களாகச் செதுக்கப்பெறலாயின. இதற்கு முற்பட்ட கோயில்களில் தேவகோஷ்டங்கள் விமானச் சுவரை ஒட்டினாற்போல அமைக்கப் பெறவும், இதன்கண் தேவகோஷ்டங்களுக்கு முன்பாக அழகான மண்டபங்களும், அவற்றிற்கு மேல் சிங்கமுகத்தைச் சிகரமாகக் கொண்ட எழில் பொருந்திய பெருங் கூடுகளும் எடுப்பிக்கப்பட்டுள்ளன. இப்புதிய முறைக் கலைப்பாணி பிற்பட்ட சோழர்கள் காலம் முழுவதும் பரவிப் பல திருக் கோயில்களையும் அணி செய்துள்ளது. அதனோடு அமையாமல், இப்பாணியின் சில அமிசங்கள் கலிங்க நாட்டிலும் விஜய நகரத்திலும் கூடக் காணப்படுகின்றன,

தென்னிந்தியாவிலேயே முதன் முதல் எடுப்பிக்கப்பட்ட இரத விமானங்கள் சிதம்பரம் நிருத்த சபையும், தாராசுரத்திலுள்ள ஐராவதேசுவரர் கோயில் இராசகம்பீரன் திருமண்டபமும் ஆகும் என்று சி. சிவராமமூர்த்தி எழுதியுள்ளார். சிதம்பரம் நிருத்த சபையும் மேலைக்கடம்பூர்க் கோயிலும் முதற் குலோத்துங்கன் காலத்தவை. அதற்குச் சுமார் அரை நூற்றாண்டுக்குப் பின்னரே தாராசுரத்துக் கோயில் மண்டபம் இரண்டாம் இராசராசனால் எடுப்பிக்கப்பட்டது என்பது மனங் கொள்ளத்தக்கதாகும்.

## சூரியனார் கோயில்

தஞ்சை—மயூரம் புகைவண்டி வழியில் ஆடுதுறைப் புகைவண்டி நிலையத்திலிருந்து 3 கி. மீ. தொலைவில் சூரியனார் கோயில் என்ற சிற்றூர் உள்ளது. இங்குள்ள சூரியதேவருக் கென்றே அமைக்கப்பட்ட தனிப்பெருங்கோயில் முதல் குலோத்துங்கனுடைய 44-ஆம் ஆண்டில் கட்டப்பட்டது. இங்கு வீற்றிருக்கும் சூரியதேவருக்கு அரசன் பெயரால் குலோத்துங்க சோழ மார்த்தாண்ட தேவர் என்று பெயரிடப் பட்டது எனவும் இக்கோயிலுக்கு இம்மன்னன் பல நிவந்தங்களை விடுத்தான் எனவும் கல்வெட்டொன்று (229—1927) குறிப்பிடுகிறது. தென்னிந்தியாவிலேயே சூரியனுக்கு என்று எடுப்பிக்கப்பட்ட தனிப்பெருங் கோயில் இதுவேயாகும். இது

கலிங்க நாட்டிலுள்ள கோனர்க்கக் கோயிலுக்கு ஏறக்குறைய ஒரு நூற்றாண்டு முற்பட்டது. கன்னேசி நாட்டு மன்னர்கள் சூரிய பகவானிடம் மிக்க ஈடுபாடுடையவர்கள். அந்நாட்டில் சூரியனுக்குப் பல கோயில்கள் உள்ளன. குலோத்துங்கன் காலத்துக் கன்னேசி மன்னனின் மெய்க்கீர்த்தியின் ஒரு பகுதி கங்கைகொண்ட சோழபுரத்துக் கோயிலில் கிடைத்துள்ளது. இக்கன்னேசி மன்னனுடைய உறவின் விளைவுதான் சூரியனார் கோயில் எனத் தோன்றுகிறது.

மேற்குப் பார்த்த சந்நிதியை உடைய இக்கோயிலின் கருவறையில் சூரியனுடைய சிலை உள்ளது. இதற்கு அருகே காசி விசுவநாதர், அவருடைய தேவி விசாலாட்சி என்பவர் காட்சியளிக்கின்றனர். சூரியனுக்கு எதிரே உள்ள தளியில் பிரகஸ்பதியின் சிலையைக் காணலாம். ஏனைய கிரகங்கள் யாவும் சுற்றுக் கோயில்களில் தனித்தனியே இடம் பெற்றுள்ளன.

## நீடூர்

மயூரத்துக்கு அருகில் வடதிசையில் நீடூர் என்ற தலம் உள்ளது. இவ்வூருக்குப் புகைவண்டி நிலையமும் உண்டு. இங்குள்ள அருட்சோழநாதேசுவரரின் கோயிலைக் "குலோத்துங்கனுடைய 38-ஆம் ஆண்டில் உமையோடு உலாவின சிவபெருமானுக்கு, உவந்து, வெண்கயிலை மலையெனச் சிலையால் உத்தமவிமானத்தைக் காரிகைக் குளத்தூர் கண்டன் மாதவன் சமைத்தான்" என்ற நீடூர்ச் சாசனப் பகுதியால் கண்டன் மாதவன் எடுப்பித்த செய்தி உணரப்படுகிறது.

எண்டிசை உலகை ஒருகுடை நிழற்கீழ்
இருத்திய குலோத்துங்க சோழற்கு
யாண்டு ஒரு முப்பத்தெட்டினில் சோணாட்டு
இசைவளர் இந்தளூர் நாட்டுள்
உண்டை நீடிய நீடூர் உமையோடும்
உலாவின சிவபெருமானுக்கு
உவந்து வெண்கயிலை மலையெனச் சிலையால்
உத்தம விமானமிங் கமைத்தான்
தண்டமிழ் அமித சாகர முனியைச்
சயங் கொண்டசோழ மண்டலத்துத்
தண் சிறுகுன்ற நாட்டகத்து இருத்திச்

சந்தனூற் காரியை அவனால்
கண்டவன் மருமான் காரிகைக் குளத்தூர்க்
காவலன் நிலாவினன் எவர்க்கும்
கருணையும் நீதியும் காட்டியமிழலை
நாட்டுவேள் கண்டன் மாதவனே.

(பெருந்தொகை எண். 1219)

இப்பாடலால் அமிதசாகர முனியைக் கொண்டு தமிழில் யாப்பருங்கலக் காரிகை என்ற யாப்பு நூலை இயற்றுவித்த மன்னவன் பரம்பரையில் தோன்றிக் காரிகைக் குளத்தூரில் நல்லாட்சி செய்வித்த கண்டன் மாதவன் குலோத்துங்கனுடைய 38–ஆம் ஆண்டில் நீடூர்க் கோயிலை எடுப்பித்தமை புலனாகிறது. இவனைப்பற்றிய பாடலொன்றை முன்னரே நோக்கினோம்,

## இரண்டாம் குலோத்துங்கன் (கி. பி. 1133—50)

அபயன், அநபாயன், பேரம்பலம் பொன்வேய்ந்த பெருமாள், பீடங்கண்ட பெரிய பெருமாள், திருநீற்றுச் சோழன் என்ற பல பெயர்களால் இரண்டாம் குலோத்துங்கன் புகழப் படுகின்றான்; பெரிய புராணத்தில் சேக்கிழார் பெருமான் இவனை,

'சென்னி அபயன் குலோத்துங்க சோழன்'

'தில்லைத்திருவெல்லை பொன்னின் மயமாக்கிய வளவர்போரேறு'

'புவிகாக்கும் மன்னர் பெருமான் அநபாயன்'

என்று பலபடியாகப் புகழ்ந்து பாராட்டியுள்ளார்.

இம்மன்னனுடைய அவைப் புலவர் ஒட்டக் கூத்தராவர். அவர் விக்கிரமசோழன், இரண்டாம் குலோத்துங்க சோழன், இரண்டாம் இராசராசசோழன் என்ற மூவர் மீதும் மூவருலா என்ற மூன்று உலாக்கள் பாடியுள்ளார். அவற்றுள் இம்மன்னனைப் பற்றியது இரண்டாம் உலா. இவ்வுலாவில் இம் மன்னன் தில்லைக் கோயிலுக்குச் செய்த திருப்பணிகளைப் பின்வருமாறு வருணித்துள்ளார்.

கோலத்தால் கோயில் பணிகுயிற்றிச்—சூலத்தான்
ஆடும் திருப்பெரும்பேர் அம்பலமும் கோபுரமும்

மாடம் பரந்தோங்கு மாளிகையும் —கூடிப்
பொலங் கோட்டு மாமேருப் பூதரமும் போய
வலங்கோட் டிகிரியும் மானத்—தலங்கொள்
நிலையேழு கோபுரமும் நேரே நெருங்கும்
மலையேழும் என்ன வகுத்துத்—தலையின்
மகரங்கொள் கோபுரமும் வான விமானச்
சிகரங்கள் ஆகித் திகழ—நிகரில்
எரிபொன் படர்பாறை என்னலாய் எங்கும்
விரிபொன் திருமுற்றம் மின்ன...சிறக்கும்
இருக்காதி எம்மறையும் எவ்வுலகும் ஈன்றாள்
திருக்காமக் கோட்டம் திகழ்வித்து—அருக்கன்
புனையா மணியாலும் பொன்னாலும் மின்ன
மனைய ஒருதேர் வகுத்து—முனைவன்
திருவீதி ஈரிரண்டும் தேவர்கோன் மூதூர்ப்
பெருவீதி நாணப் பெருக்கி—

என்பன குலோத்துங்க சோழனுலா அடிகள். இம்மன்ன னுடைய இத்திருப்பணிகள் ஒட்டக்கூத்தரால் இராசராச சோழனுலாவில் பின்வருமாறு பாராட்டப்பட்டுள்ளன;

''சேய பெரிய திருக்குலத்து—நாயகன்
சிற்றம் பலமும் திருப்பெரும்பே ரம்பலமும்
மற்றும் பலபல மண்டபமும்—சுற்றிய
மாளிகையும் பீடிகையும் மாடமும் கோபுரமும்
சூளிகையும் அத்தெருவும் தோரணமும்—ஆளுடையாள்
கோயில் திருக்காமக் கோட்டமும் அக்கோயில்
வாயில் திருச்சுற்று மாளிகையும்—தூயசெம்
பொன்னிற் குயிற்றி''

இப்புலவர் பெருமானே பாடிய தக்கயாகப்பரணியில்

'கோயில் முன் ஏழ்நிலை கொண்டதோர் கோபுர
வாயில் வகுத்தபிரான் மகன் வாழியே'

என்ற பாடல் காணப்படுகிறது.

பேரம்பலம் என்பது ஒருகால் தேவசபையைக் குறிக்க லாம். 'எழுநிலைக் கோபுரம் மலை ஏழும் என்ன வகுத்தான்' என்ற சொற்றொடரால் விக்கிரம சோழன் காலத்தில் கட்டப் பட்ட கோபுர வாயில் தில்லை மேலைக் கோபுரத்தின் கருங்கல் கட்டிடமான தலைவாயிலாக இருக்கலாம் என்று குறிப்பிட்

டோம். 'நிலையேழு கோபுரம்' என்ற சொற்றொடருக்கு வரிசையான ஏழு கோபுரங்கள் என்ற விளக்கத்தை ஆங்கில ஆசிரியர் ஒருவர் குறிப்பிட்டுள்ளார். ஏழு மலைகளை ஒன்றின்மேல் ஒன்றை அடுக்கினாற்போல ஏழு நிலைகளை உடைய கோபுரம் என்பதே இச்சொற்றொடரின் பொருள் என்பது வெளிப்படை. கீழைக் கோபுரம், வடக்குக் கோபுரம் என்பனவற்றின் தலைவாயில்களும், திருக்காமக் கோட்டம் என்ற சிவகாமி அம்மன் கோயிலும், அக்கோயிலின் திருச்சுற்று மாளிகையும் இக்குலோத்துங்கன் காலத்திலேயே கட்டப்பட்டன. இம்மன்னனுடைய அமைச்சரான சேக்கிழார் பெருமான் பாடிய திருத்தொண்டர் புராணம் எனப்படும் பெரிய புராணம் தில்லை ஆயிரக்கால் மண்டபத்தில் அரசன் முன்னிலையில் அரங்கேற்றப்பட்டது. இவ்வரசன் சேக்கிழாரை ஊர்வலம் செய்வித்து வணங்கி அவருக்குத் 'தொண்டர் சீர்பரவுவார்' என்ற பட்டத்தை அளித்து அவரைப் பெரிதும் பாராட்டினான். 14-ஆம் நூற்றாண்டினரான உமாபதி சிவாசாரியார் தாம் பாடிய 103 திருவிருத்தங்களை உடைய திருத்தொண்டர் புராண வரலாறு என்னும் சேக்கிழார் சுவாமிகள் புராணத்தில் திருத்தொண்டர் புராணம் ஆயிரக்கால் மண்டபத்தில் அரங்கேற்றப்பட்ட செய்தியை, அந்நூலின் 35-ஆம் பாடலில்

> வந்து சூழ நிரைத்த ஐயிரு நூறுகால் மணி மண்டபத்து
> எந்தையார் திருவருளை உன்னி இருந்து சேவையர் காவலர்
> செந்தமிழ்த் தொடையால் விளங்கிய திருவிருத்தம் நிருத்தனார்
> தந்த சொல் முதலா எடுத்தனர் தாணுவான புராணநூல்

என்ற பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாதாரத்தைக் கொண்டு ஆயிரக்கால் மண்டபம் இரண்டாம் குலோத்துங்கன் காலத்தது என்று முடிவு செய்யலாம்.

உண்மை இவ்வாறாகவும், ஜேம்ஸ் பர்கூசன் என்பார் தில்லை ஆயிரக்கால் மண்டபம் கி. பி, 1595-க்கும் 1685-க்கும் இடைப்பட்ட காலத்தில் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்று குறிப்பிடுவது பொருந்துவதாக இல்லை. வேறொரு ஆங்கிலக் கலையாசிரியர் நான் உலா முதலிய இலக்கியத்தையும் மெய்க்கீர்த்தியையுமே பயன்படுத்திச் சில முடிவுகளைக் கூறியுள்ளேன் எனக் கருதுகின்றார்.

மெய்க்கீர்த்தியும் உலாவும் வரலாற்றுக்கு ஏற்ற ஆதாரங்களே. மன்னர்களின் ஆதரவு பெற்ற புலவர்கள் அவர்களுடைய புகழைப் பாடியனவே மெய்க்கீர்த்தியும் உலாவுமாகும். இப்பாடற் கருத்துக்களில் மெய்யாய செய்தி சற்று விரிவாகக் கற்பனை செய்யப்பட்டிருக்குமே யன்றி இல்லாத செய்தி ஒன்றும் இணைக்கப்பட்டிராது. மன்னர்களின் வெற்றிகளே இப்பாடல்களில் புகழப் பெற்றிருக்கும். ஆனால் தோல்வி பற்றிய செய்தியை இப்பாடல்களில் காண முடியாது. எனினும், பகை மன்னனின் மெய்க்கீர்த்தியைக் கொண்டு ஒரு மன்னனுடைய தோல்வி பற்றிய செய்தியை உணரலாம். வேற்றுச் சான்றுகள் இல்லாத காலத்தில் மெய்க்கீர்த்தியும் உலாவும் வரலாற்றுக்குப் பெருந்துணை செய்வனவாகும்.

மேலும் தில்லையிலுள்ள மூன்றாம் திருச்சுற்று மாளிகைக்கு இராஜாக்கள் தம்பிரான் திருமாளிகை என்பது பெயர். இப்பெயர் மூன்றாம்குலோத்துங்கனுடைய விருதுகளில் ஒன்று. இதனை நோக்கப் பதின்மூன்றாம் நூற்றாண்டுக்குள் இந்த மூன்றாம் திருச்சுற்று மாளிகைக்கு உட்பட்ட பல கட்டிடங்களும் எடுப்பிக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது உறுதியாகிறது. சில பகுதிகள் பிற்காலத்தில் புதுப்பிக்கப்பட்டிருக்கலாம். எனினும் இவற்றின் அடிப்படைகள் பிற்பட்ட சோழர்கள் காலத்தனவே என்பது ஒருதலை.

திருமாணிகுழி என்ற ஊர்க் கல்வெட்டொன்று,

"தில்லைமாநகர் சிறப்புடைத் தாகத்திருமுடி சூடிய
ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்"

என்று அநபாயனை வருணிப்பது கொண்டு இம்மன்னன் தன் முடிசூட்டு விழாவை இம்மண்டபத்தில் நடத்தியிருக்கக்கூடும் என்பது தோன்றுகிறது. இதுவே, சோழ மன்னர்களின் முடிசூட்டு விழா மண்டபமாகப் பிற்காலத்தில் திகழ்வதாயிற்று. ஆகவே இது இராஜசபை என்று வழங்குகிறது.

இரண்டாம் குலோத்துங்கன் ஆட்சியில் போர் எதுவும் நிகழவில்லை. நாட்டில் அமைதியும் செழிப்பும் நிலவின. இம்மன்னன் தன் வாழ்நாள் முழுவதையும் தெய்வத் திருப்பணிகள் புரிவதிலேயே செலவிட்டான். தில்லை பூலோக கைலாசமாகத் தோற்றமளித்தது. திருவாரூர்க் கல்வெட்டொன்று வியாக்ர புர (புலியூர்) ஹேமசபா (பொன்னம்பலம்) நடேசரின்

(கூத்தப் பெருமான்) பாதார விந்தத்தைச் (திருவடித் தாமரை களை) சரண் புகுந்த தேனீயைப் போன்றவன் அநபாயனு வான் என்று இவன் சிவபக்தியையும், தில்லைப் பற்றையும் குறிப்பிடுகிறது.

இவன் சிவபெருமானிடத்துக் கொண்ட பற்று எல்லை மீறியது ஆகும்; அச் சிவப்பற்று இவனுக்குத் திருமாலிடத்து வெறுப்பை உண்டாக்கியதுபோலும். தில்லையில் கூத்தப் பிரானேடு இடங் கொண்டிருந்த கோவிந்தராசப் பெருமா னுடைய கோயிலை மூடி அவர் சிலையைக் கடலில் வீழ்த்தினன் என்று அறிகிறேம்;

இச்செய்தி ஒட்டக்கூத்தருடைய தக்கயாகப் பரணி 777–ஆம் தாழிசையில்,

'முன்றில் கிடந்த தடங்கடல் போய்
முன்னைக்கடல் புகப் பின்னைத் தில்லை
மன்றிற் கிடங்கண்ட கொண்டன் மைந்தன்
மரகத மேருவை வாழ்த்தினவே'

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இச்செய்தியைக் குலோத்துங்க சோழனுலாவும், இராசராச சோழனுலாவும் குறிப்பாகச் சுட்டுகின்றன. அரசர்களைத் திருமாலின் அவதாரமாக உலாக் களில் சுட்டும் ஒட்டக்கூத்தர் அவ்வரசருள் ஒருவன் திருமா லுடைய சிலையைக் கடலில் வீழ்த்தினன் என்று கூறுவது அரசனுடைய பெருந்தன்மைக்கு ஏலாது என்ற கருத்தால் குறிப்பாகவே இச்செய்தியைச் சுட்டியுள்ளார்,

இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் மறைந்த விஷ்ணு கோயில் பின் விசயநகர மன்னர்கள் ஆட்சியில் 16-ஆம் நூற் ருண்டிலேயே புத்துயிர் பெற்றது.

## பரகேசரி இரண்டாம் இராஜராஜன் (கி. பி. 1146-73)
## தாராசுரம்—ஐராவதேசுவரம்

இரண்டாம் குலோத்துங்கன் கி. பி. 1150 வரை வாழ்ந் திருக்க வேண்டும் என்ற செய்தி கல்வெட்டுக்களால் அறியப் படுகிறது. ஆனுல் இரண்டாம் இராஜராஜனுடைய ஆட்சித் தொடக்கம் கி. பி. 1146–இல் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. இவன் 25 ஆண்டுகளுக்கு மேல் ஆட்சி

செலுத்தினுன் என அறிகிறேம். இவனுடைய மெய்க்கீர்த்தியில் முக்கியமானது 'பூமருவிய திருமாதும்' என்ற தொடக்கத்தை உடையது. வடக்கே வேங்கி நாட்டுத் திராக்ஷாராமா வரையிலும், மேற்கே கொங்குநாடு, கங்கநாட்டின் கீழ்ப்பகுதி என்பன வரையிலும் இவன் ஆட்சி பரவியிருந்ததாக அறிகிறேம்.

முத்தமிழுக்குத் தலைவன் என்று இம்மன்னன் பாராட்டப்படுகிருன். இவன் அவைக்களத்தை அணி செய்த கவிச் சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் இராசராச சோழனுலா, தக்கயாகப் பரணி என்ற நூல்களில் இவனுடைய வீரச் செயல்களையும் ஏனைய பெருமைகளையும் விரிவாகக் குறிப்பிடுகிருர்.

இவனுடைய பரம்பரையைத் தக்கயாகப் பரணியின் பின்வரும் செய்யுள் விளக்குகின்றது.

*அழிவந்த வேதத்து அழிவு மாற்றி*
*அவனித் திருமகட் காக மன்னர்*
*வழிவந்த சுங்கம் தவிர்த்த பிரான்*
*மகன் மகன் மைந்தனை வாழ்த்தினவே*

(தாழிசை 775)

சுங்கந்தவிர்த்தவன் முதல் குலோத்துங்கன். அவன் மகன் விக்கிரம சோழன். அவன் மகன் இரண்டாம் குலோத்துங்கன்; அவனுடைய மைந்தன் இரண்டாம் இராசராச சோழன் என்பது 'சுங்கம்...மைந்தன்' என்ற சொற்றொடர்களின் விளக்கம் ஆகும்.

தக்கயாகப் பரணியின் மற்றொரு தாழிசையில் 'வாழிவரு ராசராசனே' என இவன் இயற்பெயரும், வேறொரு தாழிசையில் 'இராச கம்பீரனை வாழ்த்தினவே' என்ற இவன் விருதுப் பெயரும் குறிப்பிடப்பட்டுள்ளன.

தக்கயாகப் பரணியின் கடைதிறப்புப் பகுதியில்,

'செம்பொன்மாடநிரை
ராசராசபுரி வீதி மாதர் கடைதிற மினோ'

'மூவராய் அவரின் முதல்வராய், அதிதி புதல்வராய முப்பத்துமுத்
தேவராயவர்தம் ராசராசபுரி வீதி மாதர் கடைதிற மினோ'

என்ற பகுதியைக் கொண்டு இம்மன்னன் தன் தலைநகரான கங்காபுரி என்ற கங்கை கொண்ட சோழபுரத்தை விடுத்துப்

பிராந்தியத் தலைநகரங்களில் ஒன்றான பழையாறை என்ற ஆயிரத்தளியிலேயே பெரும்பாலும் வாழ்ந்து வந்தான் என்று கருத வேண்டியிருக்கிறது. பண்டைக் காலத்தில் பழையாறை, இப்பொழுதுள்ள பழையாறு, முழையூர், பட்டீசுவரம், திருச் சத்திமுற்றம், சோழ மாளிகை, ஆரியப் படையூர், புதுப்படை யூர், தாராசுரம் முதலிய பல நிலப் பகுதிகளை உள்ளடக்கிய பேரூராக இருந்திருக்க வேண்டும்; இராசராசபுரம் என்ற பெயரே தாராசுரம் என்றும், இராசராசேச்சுவரம் என இம்மன்னன் பெயரால் அமைக்கப்பட்ட கோயிலே தற்போது காணப்படும் ஐராவதேசு வரம் என்றும் பிற்காலத்தில் மருவி விட்டன எனக் கொள்ள வேண்டியவராக உள்ளோம். இக்கோயிலிலுள்ள அக்கிரமண்ட பக் கால்களில் அதன் பெயர் இரண்டாம் இராசராசனுடைய சிறப்புப் பெயரால் 'இராசகம்பீரன் திருமண்டபம்' என்று பொறிக் கப்பட்டுள்ளது;

இக்கோயிலின் விமானம் தஞ்சை இராஜராஜேசுவரம், கங்கை கொண்ட சோளீசுவரம் என்ற கோயில்களின் விமா னங்களை ஒத்து அமைக்கப்பட்டுள்ளது. இதிலுள்ள முன் மண்டபமான 'இராச கம்பீரன் திருமண்டபம்' மேலைக் கடம்பூரிலுள்ள இரத உருவத்தை ஒத்துக் குதிரைகள் பூட்டப் பட்ட தேர்க் கால்களை உடையதாக அமைக்கப்பட் டுள்ளது,

இக்கோயில் கருவறை, அர்த்தமண்டபம், முகமண்டபம் (என்ற மகா மண்டபம்), இராச கம்பீரன் திருமண்டபம் என்ற அக்கிரமண்டபம் ஆகிய உறுப்புக்களை உடையது. அதிஷ் டானப் படையில் பெரிய புராணம் குறிப்பிடும் நாயன்மார் களின் கதைகள் பெயர் திட்டப்பட்ட சிற்பங்களால் விளக்கப் பட்டுள்ளன. இங்கு செதுக்கப்பட்டுள்ள நாயன்மார்களின் வரிசை சுந்தரருடைய திருத்தொண்டத் தொகையை ஒத்து அமைந்துள்ளது. தன் தந்தை திருத்தொண்டர் புராணத்தைக் காவியமாகச் செய்வித்ததை ஒட்டித் தனயனும் திருத்தொண் டர் வரலாற்றைச் சிற்பக் களஞ்சியமாகச் செய்வித்தான் போலும்.

பிராகாரத்தில் சுற்றிலுமுள்ள திருச்சுற்று மாளிகையின் சுவர்களில் 108 சிலைகள் செதுக்கப்பட்டுள்ளன. இவை இக்

கோயிலில் திருப்பதிகம் விண்ணப்பிக்க நியமிக்கப்படடவர் களின் சிலைகளாக இருக்கலாம்.

முன்புறம் [காணப்படும் பலிபீடமும் அதன் படிகளும் செவ்வனே சித்திரிக்கப்பட்டுள்ளன. இப்படிகளில் சப்த சுவர ஓசையைக் கேட்கலாம். இவை பாடும்படிகள் என்று வழங்கப் படுகின்றன.

வெளிக் கோபுரம் தனிச் சிறப்பு உடையது. இதன் தலை வாயிலைச் சுற்றியுள்ள புறச் சுவர்களில் கோஷ்டங்கள் உள்ளன. இக்கோஷ்டங்களில் அக்காலத்தில் பெயர்களுடன் கூடிய சிலைகள் நிறுவப்பட்டிருத்தல் வேண்டும். இக்கோபுரம் தில்லை மூன்றும் திருச்சுற்று மாளிகையிலுள்ள மேலைக் கோபு ரத்தைச் சிலைகளின் பெயர்கள் பொறிக்கப்பட்டிருக்கும் அம் சத்தில் ஒத்திருக்கிறது. தற்போது சிலைகளின் பெயர்களே இங்கு எஞ்சியுள்ளன.

வடபுறத்தில் ஆதி சண்டேசுவரர், கங்காதேவி, தும்புரு நாரதர், வைச்ரவணன், சந்திரன், மகாசாஸ்தா, நாகராஜா, வாயு என்ற 8 பெயர்களும் மேற்புறத்தில்......தேவி, ருத்ராணி, வைஷ்ணவி, பிராமி, வருணன், நந்திதேவர், பெரிய தேவர், சாந்தயாதீதசக்தி, சாந்திதேவி, வித்யாசக்தி, பிரதிஷ்டா சக்தி, நிவர்த்தி சக்தி என்ற 12 பெயர்களும் தென்புறத்தில் தட்ச பிரஜாபதி, யமுனாதேவி, இரதி, காமதேவன் என்ற 4 பெயர்களும் கீழ்ப்புறத்தில் அக்கினி தேவர், அகத்திய தேவர், ஸ்ரீதேவி, துர்க்காதேவி, தேவேந்திரன், பத்மநிதி, சூரியதேவர், சுப்பிரமணிய தேவர், க்ஷேத்திர பாலர், சரசுவதி, விச்வ கர்மா, ஈசானதேவர் ஆகிய 12 பெயர்களும், என 36 பெயர் கள் காணப்படுகின்றன. இப்பெயர்களுக்குரிய சிற்பங்கள் அழிந்து போயினமை வருந்தத்தக்கதாகும்.

இக்கோயிலின் விமானம் ஐந்து தளங்களை உடையது. மேலே வட்டமான கிரீவமும் சிகரமும் உள்ளன, மேலுள்ள ஸ்துபி இப்பொழுது சிதைந்து விட்டது; அதன் நடுத்தண்டே தற்போது காட்சியளிக்கிறது. முதலிரண்டு தளங்களும் அர்த்த மண்டபமும் முகப்பில் பஞ்சரங்களால் அணி செய்யப்பட் டுள்ளன. அக்கிர மண்டபத்தின் தூண்கள் வீற்றிருக்கும் சிங்கங்களின் தலைமீது அமைந்துள்ளன. அவை அகலமான பலகைகளையும் போதிகைகளையும் கொண்டவை. மூன்று

பக்கங்களிலும் தூண்களின் மீது உத்திரங்களும் அவற்றின் மீது கைப்பிடிச் சுவர்களும் சுவர்களின்மீது இடபச் சிலைகளும் காணப்படுகின்றன. அக்கிர மண்டபத்தின் வடக்கே உள்ள அம்மன் கோயில் பிற்பட்டது. வெளியிலுள்ள தேவநாயகி அம்மன் கோயில் மூன்றும் குலோத்துங்கன் காலத்தது ஆகலாம்.

'கெட்ஸ்' என்ற ஆசிரியர் தாம் இயற்றிய 'இந்தியா' என்ற நூலில் தென்னிந்தியக் கலையைப்பற்றி விரிவாக எழுதியுள்ளார். சோழப் பெருமன்னர்களால் கட்டப்பட்ட மாபெருங் கோயில்களை வருணித்த பிறகு தாராசுரம் கோயிலைப்பற்றி அவர் சில செய்திகள் குறிப்பிட்டுள்ளார். அவர் கூறுவன பின்வருமாறு. "தாராசுரம் கோயிலை ஓரளவு பொது விதிக்கு விலக்காகக் கருத வேண்டும். மேலைச் சாளுக்கிய மன்னனாகிய முதலாம் சோமேசுவரன் என்ற ஆகவமல்லன் மீது முதலாம் இராசாதிராசன் அடைந்த மாபெரும் வெற்றிக்குப் பிறகு இளவலான விசயராசேந்திரன் கல்யாணி(கல்யாணபுரம்)யிலிருந்து கொள்ளைப் பொருள்களாகக் கொணர்ந்த சிலையை நிறுவி இக்கோயிலை எடுப்பித்தான். ஆகவே மேலைச் சாளுக்கியர் கலைப் பாணி முறையில் இக்கோயில் அமைந்துள்ளது. அங்கிருந்து இடித்த கோயிலின் துவார பாலகர் சிலைகளையும் சோழ மன்னன் கொணர்ந்து இக்கோயிலில் நிறுவினான்" என்ற அவர் கூற்றுக்கு ஆதாரமில்லை. விஜயராஜேந்திரன் என்பது முதல் இராஜாதிராஜன் சளுக்கிய வெற்றிக்குப் பின் கொண்ட விருதுப் பெயராகும். ஒரே ஒரு துவார பாலகர் சிலைதான் வெற்றிச் சின்னமாகக் கொண்டு வரப்பட்டது. இந்நிகழ்ச்சி இரண்டாம் இராசராசன் காலத்துக்கு ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக்கு முன் நிகழ்ந்ததாகும். இச்சிலையின் பீடத்தில் 'ஸ்வஸ்திஸ்ரீ உடையார் ஸ்ரீ விசய ராசேந்திரதேவர் கல்யாணபுரம் எறிந்து கொண்டு வந்த துவார பாலகர்' என்ற கல்வெட்டு காணப்படுகிறது. இச்சிலை முன்னாளில் தாராசுரம் ஐராவதேசுவரத்தின் வெளிக் கோபுரத்தின் புறத்திலுள்ள மேடையில் இருந்து தற்போது தஞ்சைக் கலைக் கூடத்தில் இடம் பெற்றுள்ளது. இக்கோயில் முதல் இராசாதிராசன் காலத்திலேயே இருந்திருக்க வேண்டும். ஆனால் இப்போதுள்ள கட்டிடம் இரண்டாம் இராசராசனால், சோழர் ஆட்சி உச்ச நிலையில் இருந்த காலையில், ஒரே திட்டத்தின் கீழ் எடுப்பிக்கப்பட்ட

சோழர் கலைப்பாணியைக் கொண்ட கோயிலாகும். சளுக்கிய கலைப் பாணியில் இக்கோயில் அமைக்கப்பட்டது என்று கூறுவதற் கில்லை. கலை என்ற பொதுக் களஞ்சியத்தின் பொது அமிசங் கள் பல பல பிரதேசங்களிலும் ஒத்துக் காணப்படுவது கொண்டு ஒரு நாட்டுக் கலையை மற்றொரு நாட்டுக் கலையாகக் கொள்வது பொருந்தாது.

பெர்ஸி பிரவுன் என்பார் தாம் வரைந்த 'இந்தியக் கட்டிடக் கலை' என்ற சிறந்த நூலில் இக்கோயிலைப் பற்றிப் பின் வரு மாறு குறிப்பிடுகிறார். "பாண்டியக் கலைப்பாணியைத் தென் னிந்தியக் கோயில் கோபுரங்களில் காணலாம். ஆனால் இக் கோயிலின் முழு அமைப்பும் ஒரே திட்டத்தின் கீழ் அமைந் தது. பாணி முறைப்படி இக்கோயில் பாண்டியர்களால் எடுப்பிக் கப்பட்டது என்று கொண்டால் இது அவர்களின் ஆட்சியின் இறுதிக் காலமான 14-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் கட்டப் பட்டதாதல் வேண்டும்." இக்கோயில் சோழர் ஆட்சி தென்ன கத்தில் ஓங்கி வளர்ந்திருந்த பன்னிரண்டாம் நூற்றாண்டில் இரண் டாம் இராஜராஜன் காலத்தில் (கி. பி. *1146—1173*) எடுப்பிக் கப்பட்டது. ஆதலின் இது பாண்டியரின் கலைச் சின்னம் அன்று.

எனவே, இராஜராஜேசுவரம், கங்கை கொண்ட சோளீ சுவரம் என்பன போல ஐராவதேசுவரமும் ஒரே திட்டத்தின்கீழ் அமைந்த மேதக்க சோழர் கலைச் சின்னமாகும்.

## மூன்றாம் குலோத்துங்கன் (*கி. பி. 1178—1216*)
## திரிபுவனம்—கம்பஹரேசுவரர் கோயில்
## திரிபுவன வீரேசுவரம்

கி. பி. 1178-இல் அரியணையேறிய இம் மூன்றாம் குலோத் துங்கன் இரண்டாம் இராசராசனுடைய மூத்த மகனா அல்லது வேறு கிளை வழியைச் சேர்ந்தவனா என்று உறுதியாகச் சொல் வதற்கில்லை. குலோத்துங்க சோழன் கோவையில் கூறப்படும் குமார குலோத்துங்கனும் பின் பெரும் புகழுடன் உலகாண்ட மூன்றாம் குலோத்துங்கனும் ஒருவரோ வெவ்வேறானவரோ என்பதையும் உறுதியாகக் கூற முடியவில்லை, இவன் மாபெரு வீரனாய்ப் பல வெற்றிகள் எய்தியவனாவான். இவன் வீரத்தில் சிறந்து விளங்கியது போலவே கலையார்வத்திலும்

சிறந்து விளங்கித் தெய்வத் திருப்பணிகள் பல செய்துள்ளான்.

இவன் பாண்டியர்களோடு மும்முறை போர் தொடுத்தான். அவற்றுள் மூன்றாம் போரே மிகச் சிறப்புடையதாகும். பல போர்களுக்குப் பிறகு இவன் கருவூரில் புகுந்து மன்னர்கள் தன் அடிதொழ 'சோழகேரளன்' என்று விஜயமுடி சூடினான். பிறகு வீரமுடி புனைவதற்கு மதுரைமீது படையெடுத்தான். பாண்டிய மன்னனை வென்று அவன் நாட்டை அழித்துத் திரிபுவன வீரன் என்று சோழ முடிசூடிப் புகழ்க் கொடி, வீரக்கொடி, தியாகக் கொடி என்பனவற்றை உயர்த்திப் பெருவிழா நிகழ்த்தினான். கலிப்பகை துரக்கும் மாமதுரைப் பெருங்கோயிலை வலங் கொண்டு திருவாலவாய் உறையும் செழுஞ்சுடரான சுந்தரேசுவரப் பெருமானைத் தொழுதிறைஞ்சினான். பாண்டியநாடு 'சோழபாண்டிய மண்டலம்' என்றும், மதுரை 'முடித்தலை கொண்ட சோழபுரம்' என்றும் புதுப் பெயரால் வழங்கப் பட்டன. இத்தகைய சிறப்பு விழாக்கள் கொண்டாடிய பிறகு இம்மன்னன் 'செம்பொன் வீரச் சிம்மாசனத்து வீற்றிருந் தருளிய கோபரகேசரி வர்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ மதுரையும் ஈழமும் (இலங்கை) கருவூரும், பாண்டியன் முடித்தலையும் கொண்டு வீராபிஷேகமும், விஜயாபிஷேகமும் பண்ணி அருளிய 'திரிபுவன வீரதேவர்' என்று கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படுகிறான். இம்மன்னன் 31-ஆம் ஆண்டிலேயே திரிபுவன வீரதேவன் என வழங்கப்படுவதால் இவ்வீராபி ஷேகம் இவன் 30-ஆம் ஆண்டில் நிகழ்ந்திருக்கலாம். தற் போது கும்பகோணத்திற்கு 4 கி. மீ. கிழக்கேயுள்ள திரிபுவனம் என்ற ஊர் இம்மன்னன் பெயரால் அமைக்கப்பட்ட ஊரே யாகும். இவ்வூரில் இவன் எடுப்பித்த கோயிலின் பெயர் அக் காலத்தில் திரிபுவனவீரேசுவரம் என்று வழங்கப்பட்டது. தற்போது அக்கோயில் கம்பஹரேசுவரர் கோயில் என்று வழங்கப்படுகிறது. இங்கு எழுந்தருளியிருக்கும் சிவபெரு மான் சோழ மன்னன் ஒருவனுடைய நடுக்கத்தைப் போக்கினார் என்பது ஐதிகம்.

இக்கோயிலின் விமானம் கோபுரம் ஆகிய பகுதிகளின் சுவர்களின்மீது இம்மன்னனுடைய வடமொழிக் கல்வெட் டொன்று பொறிக்கப்பட்டுள்ளது. அது இம்மன்னனுடைய

பெருமைகளையும் இவன் செய்த தெய்வத் திருப்பணிகளையும் விவரிக்கிறது.

இவன் நாடு மத்தியப் பிரதேசத்திலுள்ள சக்கரக் கோட்டம் முதல் இலங்கையிலுள்ள அநுராதபுரம் வரையில் பரவியிருந்தது என்று இக்கல்வெட்டு கூறுகிறது.

இவனுடைய அழகு, வீரம், கொடை, நீதிமுறை முதலியவை இக் கல்வெட்டில் விளக்கப்பட்டுள்ளன.

இவன் தில்லைச் சபாபதியிடத்தே இடையறாத பக்தி கொண்டவன். சபாபதியின் முன்னுள்ள மண்டபத்தையும் கிரீந்திரஜா (சிவகாமி அம்மன்) கோயிலின் கோபுரத்தையும், திருச்சுற்று மாளிகையையும் பொன்மயமாக்கினான்.

காஞ்சி ஏகாம்பரேசுவரருடைய கோயிலையும், மதுரை ஆலவாயுடையார் கோயிலையும், திருவிடை மருதூர்க் கோயிலையும், தாராசுரம் இராஜராஜேசுவரம் கோயிலையும், திருவாரூர் வன்மீகேசுவரர் கோயிலையும் பொன்மயமாக்கினான்.

பாண்டியாரி (பாண்டிய மன்னனை அழித்தவன்) என்ற பட்டம் பெற்ற இம்மன்னன் பூமியின் நான்கு திசைகளையும் வெற்றி கொண்ட திரிபுவனவீரன். அவன் இவ்வூரையே இருப்பிடமாகக் கொண்டு அநேக பிராகார மாளிகைகள், பற்பல வீதிகள், ஆகியவற்றுடன் சூரியனுடைய கதியையே தடுக்கக் கூடியதான, வான வீதியை முட்டும்படி உயர்ந்த விமானத்தை உடைய, பொன்மயமான, அழகு வாய்ந்த திரிபுவன வீரேசுவரம் என்னும் திருக்கோயிலை எடுப்பித்தான்—என்று இக்கலவெட்டு கூறுகிறது.

இம்மன்னனுடைய குடுமியாமலைக் கல்வெட்டும் இக் கருத்தை வலியுறுத்துகிறது. அக்கல்வெட்டு பின்வருமாறு :

"எத்தரையும் தொழும் இறைவர் எதிரம்பலம் செம்பொன் வேய்ந்து
சித்திரைவிழா அமைத்திறைவி திருக்கோபுரம் செம்பொன் வேய்ந்து
அரிபிரமர் தொழும் இறைவற்கு அகிலமெலாம் தொழுது போறறத்
திரிபுவன வீச்சரம் செய்து திருவைகாசியும் சிறந்த
திருவாவணியும் திசை விளங்கு............யூர்

நிறைந்த செல்வத்துடன் விளங்க நிலவுந்திருநாள் கண்டு—
தாரணிகொள் திருத்தாதைக்கும் இராசராசீச்சுரத் தார்க்கும்
காரண்ணச் சிறந்த கோயில் அணிதிகழ் பொன் வேய்ந்தருளி''

(மூன்ரும் குலோத்துங்கனின் 34–ஆவது ஆண்டு குடுமியாமலைக் கல்வெட்டு 166—புதுக்கோட்டை சமஸ்தானக் கல்வெட்டுத் தொகுதி).

முன் குறிக்கப்பட்ட இராசராசேசுவரம், கங்கைகொண்ட சோளீசுவரம், தாராசுரம் ஐராவதேசுவரம், என்பன போல இத் திரிபுவனவீரேசுவரமும் ஒரே மன்னனால் சீரிய பெருந் திட்டத்திற்கு உட்பட்டு எடுப்பிக்கப்பட்டதாகும். பிற்பட்ட சோழர்கள் காலத்தில் தோன்றிய கோயில்களில் இதுவே தலை சிறந்தது. இதுவே சோழர்களின் இறுதிக் காலத்தில் எடுப்பிக்கப்பட்ட மாபெருங் கோயிலாகும்.

திரிபுவனத்துக் கோயில் ஆறு தள விமானத்தை உடையது. இதன்கண் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம், அக்கிரமண்டபம், தேவி, சண்டேசுவரர், சரபேசுவரர் ஆகியோரின் ஆலயங்கள், திருச்சுற்று மாளிகைகள், கோபுரம் ஆகிய உறுப்புகள் உள்ளன.

சேஞேங்கு விமானம் தஞ்சைக் கோயில் விமானத்தைப் போன்றது. அக்கிரமண்டபம் இரதம் போன்ற அமைப்புடையது. இரதத்தின் உருளைகளில் குதிரைகளுக்குப் பதிலாக யானைகள் காணப்படுகின்றன.

பிந்திய சோழர்கள் காலத்துக் கலைப்பாணியில் ஏற்பட்ட
முக்கிய மாறுதல்கள் பின்வருமாறு :

கோயிலையே நடுநாயகமாகக் கொண்டு மாபெரு நகரங்கள் உண்டாயின. இவைகளைக் 'கோயில் மாநகர்கள்' எனலாம். சிதம்பரம், காஞ்சி, திருவரங்கம் முதலியவை இவ்வகுப்பைச் சேர்ந்த திருநகர்கள் ஆகும்.

தேவியின் தனிக்கோயில் கங்கை கொண்ட சோழபுரத்தில் முதல் இராஜேந்திரன் காலத்திலேயே தோன்றி விட்டது எனினும் பெரிய அளவில் திருக்காமக் கோட்டமாக அம்மன் கோயிலை அமைக்கும் மரபு முதற் குலோத்துங்கன் காலத்தில் தொடங்கியது.

கோயிலைச் சுற்றி ஒன்றுமுதல் ஏழுவரை திருச்சுற்று மாளிகைகள் கட்டப்பட்டன. இத் திருச்சுற்றுலைகளில் நடுவில் நான்கு திக்குகளையும் நோக்கும் எழுநிலைக் கோபுரங்கள் எழுப்பப்பட்டன. சோழரில் பிற்பட்ட மன்னர்களாகிய குலோத் துங்கன் முதல் மூன்ரும் இராஜேந்திரன் ஈருக உள்ள மன்னர் கள் காலத்திலேயே எழு நிலைக் கோபுரங்கள் தோன்றின. பின்வந்த பாண்டிய மன்னர்களும் விசயநகர மன்னர்களுமே ஏழு நிலைகளுக்கு மேற்பட்ட பல நிலைகள் கொண்ட கோபுரங் கள் கட்டும் முறையைக் கையாண்டனர்.

அர்த்தமண்டபம், மகாமண்டபம், அக்கிரமண்டபம், ஸ்நபன (நீராடும்) மண்டபம், நிருத்த மண்டபம் (ஆடரங்கு), நூற்றுக்கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம் என்ற கட்டிடக் கலையின் பல புதிய அமிசங்கள் பிற்பட்ட சோழர் கள் காலத்திலேயே தோன்றலாயின. தென்னகத்தில் சோழர் கள் காலமே கலையின் பொற்காலமாகும். வேறு எக்காலமும் இதற்கு இணையாகாது என்பது தேற்றம்.

---

# பிற்சேர்க்கை

## I.

### 1. நியமம் : முத்தரையர் கிளை வழி

தற்காலம் செந்தலை சுந்தரேசுவரர் கோயில் முகமண்டபத் தூண்களில் காணப்படும் கல்வெட்டுக்கள்.

*(1)* மூத்த பெரும்பிடுகு முத்தரையன் ஆயின குவாவன் மாறன்.

|

*(2)* இளங்கோவடி அரையன் ஆயின மாறன் பரமேசுவரன்.

|

*(3)* பெரும்பிடுகு முத்தரையன் ஆயின சுவரன் மாறன்.
அவன் எடுப்பித்த பிடாரி கோயிலும், அவன் எறிந்த ஊர்களும், அவன் பேர்களும், அவனைப் பாடினோர் பேர்களும் எழுதப்பட்டுள்ளன.
தஞ்சையையும், வல்லத்தையும் ஆண்டவன்.

**விருதுப் பெயர்கள்**

*(1)* ஸ்ரீமாறன் *(2)* சத்ருகேஸரி *(3)* ஸ்ரீ கள்வர் கள்வன் *(4)* ஸ்ரீ அதிஹாஸன் *(5)* ஸ்ரீ அபிமான தீரன்.

**வெற்றிகள்**

அழுந்தியூர், மணலூர், காரையூர், கொடும்பை, முகிலி, கண்ணனூர், காந்தளூர், அண்ணல்வாயில், மாமரங்கை, (பாண்டியர், சேரர், கொடும்பை இருக்குவேளர்கள் மீது வெற்றி).

பல்லவ இரண்டாம் நந்திவர்மனின் *(கி. பி. 731-796)* சிற்றரசன்.

**அவனைப் பாடினோர்**

*(1)* பாச்சில்வேள் நம்பன். *(2)* கோட்டாறு இளம் பெருமானார் *(3)* கிழார் கூற்றத்துப் பவதாயமங்கலத்து அமருண்ணிலை ஆயின குவாவன் காஞ்சன். *(4)* ஆசாரியார் அநிருத்தர்.

### 2. கோவிளங்கோ முத்தரையரும், அவருடைய கல்வெட்டுக்களும்

*(1)* நியமம்—ஆட்சி ஆண்டு *18(12 of 1899)*
*(2)* திருக்கோடிக்காவல்-*13* ஆண்டு—*(39 of 1930—31)*
*17* ஆண்டு—*(44 of 1930—31)*
*(3)* கோவிலடி— *13* ஆண்டு—*(303-D of 1901)*

# II

## கொடும்பை—இருக்குவேள்—கிளைவழி

(1) (முதல்வனின் பெயர் சிதைந்து போயிற்று) எதிரியின் யானைப் படையைக் கவர்ந்தவன்.

|

(2) பரவீரஜித்து.

|

(3) வீரதுங்கன் (மழவரை வென்றவன்)

|

(4) அதிவீர அனுபமன்.

|

(5) ஸங்ககிரித்து.

|

(6) நிருபகேசரி.

|

(7) பரதுர்க்கமர்த்தனன் (வாதாபி கொண்டவன்.)

|

(8) ஸமராபிராமன்.
அதிராஜமங்கலத்தில் (திருவதிகை) சளுக்கியை வென்றான் சோழ குலப்பெண்ணான அனுபமாவை மணந்தான்.

|

(9) பூதி விக்கிரமகேசரி
காவிரிக்கரையில் பல்லவர் மீது வெற்றி பெற்றான். வீர பாண்டியனைத் தோற்கடித்தான். வஞ்சிவேளை அழித்தான். கொடும்பையில் மாளிகை அமைத்தான். அவனுடைய இரு தேவிகள் (1) கற்றளி (2) வரகுணா.

|

பராந்தகன் ஆதித்தியவர்மன்.
(கற்றளியின் இரு புதல்வர்கள்)

# III

## கீழையூர் (மன்னுபெரும் பழுவூர்)

அவனி கந்தர்ப்ப ஈசுவர கிரகம் (இருதளிகள் கொண்டது)

இக்கோயிலுக்கு மேற்குப் பார்த்த ஒரே வாயில்தான் உண்டு. வடக்கிலோ, தெற்கிலோ வாயில் இல்லை.

(1) தென்தளி—"தென்வாயில் ஸ்ரீ கோயில்"—அகத்தீசுவரம்.

| | | | |
|---|---|---|---|
| *357—1924*—இராஜகேஸரிவர்மன் | - 13 ஆண்டு. | } | ஆதித்யன் I |
| *355—1924*— ,, | 22 ஆண்டு. | } | |
| *360—1924*— ,, | 22 ஆண்டு. | } | |

'இருதளியிலும் ஒரோ நொந்தா விளக்கு' நிவந்தம் வைத்தது.

*359—1924*—பராந்தகன் I, 25 ஆண்டு

*368—1924*— ,, 36 ஆண்டு

*358—1924*— ,, 37 ஆண்டு

*364—1924*— இராஜகேஸரி (கண்டராதித்தியன்) 6 ஆண்டு.

*365—1924*—சுந்தரசோழன் 16 ஆண்டு.

*370—1924*— ,, 13 ஆண்டு.

*356—1924*—பரகேஸரி (உத்தமசோழன்) 15 ஆண்டு.

*363—1924*—இராஜகேஸரி (இராஜராஜன் I) 16 ஆண்டு.

(2) வடதளி—"வடவாயில் ஸ்ரீ கோயில்"—சோளீசுவரம்.

*378—1924*—பராந்தகன் I, 24 ஆண்டு.

*380—1924*— ,, 26 ஆண்டு.

*386—1924*— ,, 40 ஆண்டு.

*383—1924*—கண்டராதித்தியன்—6 ஆண்டு.

*379—1924*—உத்தமசோழன் —12 ஆண்டு.

*381—1924*—உத்தமசோழன் —13 ஆண்டு.

*384—1924*—இராஜராஜன் I —11 ஆண்டு.

*385—1924*— ,, — 27 ஆண்டு.

# IV

## சோழர் கிளைவழி
**(கி. பி. 850-1279)**

- விசயாலயன் (850—871)
  - முதலாம் ஆதித்தியன் (871—907)
    - முதலாம் பராந்தகன் (907—955)
      - இராசாதித்தியன் (947—949)
      - கண்டராதித்தியன் (949—957)
        - மதுராந்தக உத்தம சோழன் (969—985)
      - அரிஞ்சயன் (956—957)
        - சுந்தர சோழன் ஆன இரண்டாம் பராந்தகன் (956—973)
          - இரண்டாம் ஆதித்தியன் (964—969)
          - குந்தவை (பெண்)
          - முதலாம் இராசராசன் (985—1014)
            - முதலாம் இராசேந்திரன் (1012—1044)
              - முதலாம் இராசாதிராசன் (1018—1054)
              - இரண்டாம் இராசேந்திரன் (1052—1064)
                - இராச மகேந்திரன் (1060—1063) (யுவ அரசனுகவே இறந்தான்)
              - அம்மங்காதேவி (கீழைச் சளுக்கிய இராசராச நரேந்திரனை மணந்து கொண்டாள்)
                - இராசேந்திரன் என்ற முதலாம் குலோத்துங்கன் (1070—1120)
              - வீர இராசேந்திரன் என்ற வீர சோழன் (1063—1069)
                - அதி ராசேந்திரன் (1067/8—1070)

(தொடர்ச்சி அடுத்த பக்கம்)

முதலாம் குலோத்துங்கன்
(1070—1120)
|
விக்கிரம சோழன்
(1118—1135)
|
இரண்டாம் குலோத்துங்கன்
என்ற அனபாயன்
(1133—1150)
|
இரண்டாம் இராசராசன்
(1146—1173)
⋮
மூன்றும் குலோத்துங்கன்
(1178—1216)
|
மூன்றும் இராசராசன்
(1216—1253)
⋮
மூன்றும் இராசேந்திரன்
(1246—1258—1279)

நெறி உடை பெருமாள்
|
எதிரிலி பெருமாள்
என்ற
இரண்டாம்
இராசாதிராசன்
(1163—1160)
(1163—1178 ?)

கி. பி. 1258-ல் சோணுடு ஜடாவர்மன் முதலாம் சுந்தரபாண்டியனுல் கைக் கொள்ளப்பட்டது.

## சோழர்கள், கீழைச்சளுக்கியர்கள், கீழைக்கங்கர்கள் இவர்கள் தொடர்பைக் காட்டும் கிளைவழி

முதலாம் இராசேந்திரன்
(கங்கை கொண்டான்)
(1012—1044)

|

அம்மங்காதேவி
கீழைச் சளுக்கிய இராசராச
நரேந்திரனை மணந்தாள்

|

இராசேந்திரன் என்ற
முதலாம் குலோத்துங்கன்
(1070—1120)

|

இராஜஸுந்தரி
கலிங்க அரசனும், கீழைக்
கங்க வமிசத்தோன்றலுமான
இராசராசனை மணந்தாள்
(1069—1077)

|

அனந்தவர்மன் சோடகங்கன்
[1076—1147 (1150?)]
(1135-ல் 'கட்டக்'கில் புதுத் தலைநகர்)

|

- காமார்ணவன் (1147—1156)
- இராகவன் (1156—1170)
- இரண்டாம் இராசராசன் (1170—1194)
- முதலாம் அனங்க பீமன் (1194—1198)

முதலாம் அனங்க பீமன் (1194—1198)

|

மூன்றாம்
இராசராசன்
(1198—1211)

|

இரண்டாம்
அனங்க பீமன்
(1211—1238)

|

முதலாம்
நரஸிம்ஹன்
(1238—1269)
(கோனார்க்க
சூரியன் கோயிலை
எடுப்பித்தவன்.)

## V

## SELECT BIBLIOGRAPHY

1. South Indian Epigraphy. Annual reports.
2. Annual report on Indian Epigraphy.
3. South Indian Inscriptions :
   Vols. I to III (Text with translation)
   Vols. IV to VIII and XIII (Text)
4. Epigraphia Indica, Ootacamund.
5. Copper Plate grants :
   i. Madras Museum Plates of Sundara Chola
   ii. Madras Museum Plates of Uttama Chola
   iii. Tiruvalangadu Plates of Rajendra I
   iv. Karandai Tamil Sangam Plates of Rajendra I
   (Also Kanyakumari Stone Inscription of Vira Rajendra.)
6. Journal of Oriental Research, Madras.
7. Journal of the Madras University, Madras.
8. Journal of the Annamalai University, Annamalainagar.
9. Inscriptions of the Pudukkottai State.
10. A Manual of the Pudukkottai State—2 Vols.
11. The Colas. K.A. Nilakanta Sastri—2nd edition 1955. University of Madras.
12. G.J. Dubreuil. Archaeology of South India.
    i. Architecture
    ii. Sculpture
13. Percy Brown. Indian Architecture Vol. I
    D.B. Taraporevala Sons & Co. Bombay.
14. Heinrich Zimmer. Art of Indian Asia, New York 1955.
15. C. Sivaramamurti. South Indian Bronzes, Lalit Kala Academy, Bombay.
16. C. Sivaramamurti. Royal Conquests and Cultural Migrations. Calcutta 1955.

